கோயில்கள் ஜீர்ணமடைந்துவிட்டால், அவற்றைப் புதுப் பிக்கும்போது வேலை துவக்குவதற்குமுன் கோயில் சுவர்களில் பொறிக்கப்பட்டிருக்கும் கல்வெட்டுக்களுக்குப் பிரதி எடுத்து வைத்துக்கொண்டு ஜீர்ணோத்தாரணம் ஆனவுடன் பழையபடியே அந்த கல்வெட்டுகளைச் சுவர்களில் பொறித்து வைப்பது வழக்கம். இவ்விதம் நடந்திருப்பதைப் பல சாசனங்கள் நமக்கு எடுத்துரைக் கின்றன. அங்ஙனம் புதுப்பித்து எழுதும்போது பழைய கல் வெட்டுகளை அப்படியேதான்எழுதிவைப்பார்கள். அதன் வாசகத் தைக் கொஞ்சமும் மாற்றமாட்டார்கள். அவ்விதம் மாற்றிய தாகக் கூறக்கூடிய சான்று இதுவரையில் நமக்கு ஒன்றுகூடக் கிடைக்கவில்லை. அன்றி, திருவைகாவூர்க் கல்வெட்டின் அடி யிலும் இது கல்வேட்டுப்படி என்று எழுதப்பட்டிருக்கிறது.ஆகவே நாம் அதை மூலத்துக்குச் சரியான பிரதி என்றே கொள்ளவேண் டும்.அவ்விதம் அல்லாமல் அதைத் திரும்பவும் எழுதும்போது மூலத்தின் வாசகத்தைப் பிரதி செய்தவர்கள் மாற்றிவிட்டார்கள் என்று சொல்லவே முடியாது.

இன்னும், இவ்விதம் பழைய கல்வெட்டுக்களைப் புதுக்கு விக்கும் பழக்கம் கோயில்களை ஜீர்ணோத்தாரணம் செய்யும்போது தான் கையாளப்பட்டதாகத் தெரிகிறது. கோயில்கள் ஊரில் பொதுவான ஸ்தலம். கிராமத்தவர் பலரும் கூடி வழிபடும் இடம். அக்கோயில்களுக்கு அளிக்கப்பட்ட தானங்களைக் குறிப் பனவே அந்தக் கல்வெட்டுக்கள். ஆகவே, அவற்றைப் பாது காக்கவேண்டிய அவசியம் உண்டு. ஆனால், வீரக்கல்களின் நிலை வேறு. போரில் உயிர் துறந்த ஒருவனுடைய ஞாபகச் சின்ன மாக விளங்குவது அது; கோயிலின் நிலையை அடையாது; நாள டைவிலே அதன் முக்கியத்துவம் மங்கிவிடும். வீரக் கல்லையோ அந்தக் கல்நாட்டைத் தெரிவித்து அதில் பொறித்திருந்த கல் வெட்டையோ புதுப்பித்ததாக இதுகாறும் நாம் வேறு எதையும் காணவில்லை. சென்னி வாய்க்கால் வீரக்கல்லில் காணும் கல்வெட் டும் கி.பி. பத்தாம் நூற்றுண்டின் எழுத்தில் பொறிக்கப்பட்டது. கல் நாட்டு விழாவை ஒட்டி ஒரு நூற்றுண்டுக்குள்ளாகவே அதைப் புதுப்பித்திருக்கிறுர்கள் என்று கொள்வது எவ்விதத் திலும் பொருந்தாது. ஆகவே அந்தச் சாசனங்களைப் போலி என்றோ மூலத்தின் தவறான பிரதியென்றோ கருதுவதற்கு இடமே இல்லை. அவை உண்மையில் சாசன வாசகத்தில் கண்டுள்ளபடி அந்தக் காலத்தனவேயாகும்.

சென்னி வாய்க்கால் வீரக்கல்லில் ஒரு பிராமணனுடைய கழுத்துப் பக்கத்தில் அம்பு பாய்ந்து துளைத்துக்கொண்டுபோய் அவன் உயிர் துறக்கும் நிலையில் உள்ள உருவம் என்று செதுக்கப்பட்டிருக்கிறது. அதையொட்டியே கல்வெட்டும் பொறிக்கப்பட்டிருக்கிறது. மாவலி என்னும் வாண அரசன் படையெடுத்து வந்து அவ்வூர் மடத்தைச் சுட்டு அழித்த காலத்தில் அதைக் காக்கப்போன சத்திமுற்றத் தேவன் என்பான் இறந்துப்பட்டதைத் தெரிவிக்கிறது அக்கல்வெட்டு.

சாசனத்திலே "மாவலி யநியஸ்தான மாள்வான் சேவணர் குண்டு கொண்டுவந்து மடமுஞ் சுட்டுக் காத்த சீருரவரையுமெறிந்து இவர் சிஷ்யர் ஒரு ப்ராமணன் சத்திமுற்றத் தேவன் துண்டுபட்டான்" என்று காணப்படுகிறது. 'மாவலி அநியஸ்தானம் ஆள்வான்' என்று கூறப்படுவதால் அவன் தன்னுடைய சொந்த நாட்டில் ஆளவில்லையென்பதும் வேறு ஏதோ ஒரு பிரதேசத்தில் அரசு புரிந்துவந்தான் என்பதும் பெறப்படும். முதற் பராந்தக சோழன் இரண்டு பாண அரசர்களை வேரறுத்து, வைதும்பனை வென்று, பாண அரசைத் தன்னுடைய சிற்றரசனை கங்க மன்னன் இரண்டாம் பிரிதிவீபதிக்கு அளித்துச் செம்பியன் மாவலி வாணராயன் என்ற பெயரையும் சூட்டினான் என்று உதயேந்திரம் செப்பேடுகள் கூறுகின்றன. பராந்தகன் வேரறுத்த இரண்டு பாண அரசர்கள் இரண்டாம் விக்கிரமாதித்தியனும் அவன் மகன் புகழ்விப்பவர் கண்டன் என்ற விருது கொண்ட மூன்றும் விஜயாதித்தியனும் ஆவர் என்று பொதுவாகக் கொள்ளப்பட்டு வருகிறது. (ஸ்ரீ க. நீ. நீலகண்ட சாஸ்திரி எழுதிய சோழர்கள், வால்யூம் I, பக்கம் 151). அவ்விதம் அல்லாமல், மேலே குறிப்பிட்ட இரண்டாம் விக்கிரமாதித்தியனும் அவன் தந்தையான விஜயாதித்திய பிரபுமேருவும் ஆவர் என்று வேறு சிலர் கொள்வர் (எபி. இந்தி., வால்யூம் XXVI, பக்கம் 114). விஜயாதித்திய பிரபுமேருவின் சாசனங்கள் சகாப்தம் 831-வரையில் கிடைத்துள்ளன. அவன் மகனை விக்கிரமாதித்தியன் குடிமல்லம் பட்டயத்தில் ராஜகுமாரனாக விளங்குகிறான். பராந்தகனுடன் நிகழ்த்திய போரில் விஜயாதித்திய பிரபுமேரு இறந்திருக்கக்கூடும் என்றும் விக்கிரமாதித்தனும் தோல்வியுற்றிருத்தல் வேண்டும் என்றும் அவர்கள் கருதுவர். எவ்விதமாயினும் சோழன் வெற்றி கொண்ட இரண்டு பாண அரசர்கள் பெரும்பாணப்பாடியை ஆண்டு வந்த தந்தையும் மகனுமாகவே அவர்கள் கொள்ளு

வார்கள். அவ்விதம் கொள்ளுவது அவ்வளவு பொருத்த மன்று. அதைவிட, பெரும்பாணப்பாடி, வாணகோப்பாடி ஆகிய இரு வேறு பகுதிகளில் ஆண்டுவந்த இரண்டு பாண குல மன்னர்கள் எனக் கொள்வதே ஏற்புடையது.

பராந்தகனுடைய ஆட்சிக் காலத்தைச் சேர்ந்ததாகச் சோளங்கிபுரத்திலிருந்து கிடைக்கும் பரகேசரிவர்மனுடைய ஒன்பதாம் ஆண்டுக் கல்வெட்டிலே கங்க மன்னனை பிரிதிவீ பதி, வல்லாள (இப்போது வட ஆர்க்காடு ஜில்லாவில் உள்ள திருவல்லம் என்பதே போலும்) என்னும் இடத்தில் நடந்த போரிலே வெற்றிகொண்டு, 'சூரிய கிரணத்தின் ஒரு பகுதியைத் தான் அடைவதற்குத் தன்னுடைய தகுதி'யை நிரூபித்துக் காட்டியதாகக் கூறப்படுகிறது. அதாவது, சூரியவமிசத்தைச் சேர்ந்த சோழர்களது செம்பியன் என்னும் விருதைத்தாங்கி, அவர்களுடைய சிற்றரசனாக இருப்பதற்குத் தன் தகுதியை விளக்கிக்காட்டினனும். இந்தப் போர் பராந்தகனுடைய ஆட்சியின் ஆறும் ஆண்டுக்கு முன்னதாக நிகழ்ந்திருக்கவேண்டும். தஞ்சை ஜில்லா புள்ளமங்கை என்னும் இடத்திலே பரகேசரிவர்மனுடைய ஆறும் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று, கீழார்க்கூற்றத்துப் பிரமதேயம் புள்ளமங்கலத்துத் திருவாலந்துறை மகாதேவர்க்குச் சிறுகாலைச் சந்திக்காகச் செம்பியன் மஹாபலி வாணராயர் நிலம் கொண்டுவிட்ட செய்தியைத் தெரிவிக்கிறது (எபி. இந்தி., வால்யூம் XXVI, பக்கம் 112). இதிலிருந்து பராந்தகன் பாண அரசர்களை வேரறுத்தது கி.பி. 913-க்கு முன்னதாகவே நிகழ்ந்திருத்தல் வேண்டும் என்பது போதரும்.

இவ்விதம் பராந்தகன் வாணர் நாட்டை கைக்கொண்டு கங்க பிரிதிவீபதிக்கு அளித்தபின், நாடிழந்த மாவலி வாணர்கள் இழந்த நாட்டை மீட்டுப்பெறுவதற்கு உதவிநாடி வேற்றிடம் சென்றிருத்தல் வேண்டும். தென்னுட்டிலே வலிபெற்று வரும் சோழர்களுக்கு விரோதமாக மாவலி வாணர்களுக்கு உதவிசெய்யக்கூடியவர்கள் அந்நாளிலே ராஷ்டிரகூடர்களைத் தவிர வேறு யாரும் இருக்கவில்லை. வாணர்களும் ராஷ்டிரகூடர்களை அண்டி உதவிவேண்ட அவர்களும் அவ்விதம் உதவி அளித்துப் பாணர்கள் தங்கள் நாட்டைத் திரும்பவும் அடையும் வரையில் ராஷ்டிரகூடப் பிரதேசத்தில் ஓர் இடத்தில் தங்கி அரசு செலுத்தி வருமாறு இடம் அளித்திருத்தல் கூடும்.

இப்போது மத்தியப் பிரதேசம் என வழங்கும் பகுதியில் ரதன்பூர் ஜில்லாவில் பாலி என்னும் இடத்தில் உள்ள சிவன் கோவிலின் கர்ப்பகிருஹச்சுவரிலே ஒரு கல்வெட்டு காணப் படுகிறது. (இந்திய சரித்திர காங்கிரஸ், மூன்றும் மகாநாட்டு நடவடிக்கைகள், 1929, பக்கங்கள் 323-6). அதன் காலத்தை நிர்ணயிக்கக்கூடிய விவரம் ஏதும் அதில் கிடைக்கவில்லை. எனினும், கல்வெட்டு பொறிக்கப்பட்டிருக்கும். எழுத்துக் களின் வரி வடிவத்தைக்கொண்டு அந்தச் சாசனம் இந்தக் காலத்தைச் சேர்ந்ததாகவே கொள்ளலாம். அது மாவலி (வமிசத்தைச் சேர்ந்த) மகாமண்டலேச்வரன் மல்லதேவன் மகனை விக்கிரமாதித்தியன் அந்தக் கோயிலை எழுப்பினன் என்று கூறுகிறது. வாணர்களுடைய பிரதேசத்துக்கு வெகு தூரத்துக்கு அப்பால் மாவலி வாணராயன் கல்வெட்டு காணப் படுவதற்குத் தக்க காரணம் வேண்டும். தவிர, அந்தக் கல் வெட்டு கிடைக்கும் பிரதேசம் அந்நாளில் ராஷ்டிரகூடர்களு டைய ஆட்சிக்கு உட்பட்டிருந்த தென்பதை நாம் மறத்தல் கூடாது. ஆகவே, அந்தப் பகுதியிலே வாண அரசன் அந் நாளில் அரசு செலுத்தியிருக்க வேண்டுமானல் அது ராஷ்டிர கூடர்களுடைய தயவால் அல்லாமல் வேறு விதமாக இருத்தல் முடியாது. சென்னி வாய்க்கால் கல்வெட்டில் 'அந்நிய ஸ்தா னம் ஆள்வான்' என்று குறிக்கப்பட்ட மாவலிக்கும், மத்தியப் பிரதேசத்தில் காணும் மாவலிக்கும் ஏதோ ஒரு தொடர்பு இருத்தல்வேண்டும் என்றே எண்ணவேண்டியிருக்கிறது. அது எவ்விதமாயினும், சென்னி வாய்க்கால் கல்வெட்டில் குறிக் கப்பட்ட மாவலியின் படையெடுப்பு கி. பி. 913-ஆம் ஆண்டுக் குப் பிறகு நிகழ்ந்ததாகவே கொள்ளுதல் பொருந்தும்.

அந்தக் கல்வெட்டிலே 'சேவணர் குண்டு கோண்டு வந்து' மாவலி தாக்கியதாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. சேவணர் என்பார் பிற்காலச் சரித்திரத்திலே தேவகிரி யாதவர்கள் என்று பிரசித்தி பெற்றவர்கள். முஸ்லிம் சரித்திர ஆசிரியர் களே அவர்களை அவ்விதம் தேவகிரி யாதவர் என்று குறிப் பிட்டு எழுதியவர்கள். அவர்களோ தங்களை 'ஸேஉணர்' என்றே கூறிக்கொண்டார்கள். பக்கத்து நாட்டு அரசர்கள், முக்கியமாக ஹொய்சாளர்கள், அவர்களை ஸேஉணர் என்றே குறிப்பிட்டு வந்திருக்கிறார்கள். வடமொழி நூலான பிரதாப ருத்திரீயத்திலும் அவர்கள் ஸேஉண தேசத்து மன்னர் என்றே குறிக்கப்பட்டிருக்கின்றனர். அவர்களுடைய சாசனங்களில்

காலத்தால் மிகவும் முற்பட்டது சகாப்தம் 922, (அதாவது கி.பி. 1000) ஆண்டு கொண்டது. இரண்டாம் பில்லமனுடைய ஆட்சியில் கொடுக்கப்பட்ட ஸங்கம்நேர் செப்பேடுகள் என்னும் அந்தச் சாசனம் அவ்வரச பரம்பரையின் பூர்வ சரித்திரத்தை (இந்தியன் ஆண்டிகுவரி வால்யூம் 21, பக்கம் 199) எடுத்து உரைக்கின்றது. அன்றி. அவ் வமிசத்து மன்னர்களான மகாதேவன், ராமசந்திரன் என்பவர்களிடம் மந்திரியாக இருந்த ஹேமாத்ரி என்பர் தம்முடைய விருத கண்டத்திலும் அவ் வமிசத்துப் பூர்வ சரித்திரத்தைக் கூறிச் செல்கிறார். (ஷை வால்யூம் 17, பக்கம் 120 ; எபி. இந்தி, வால்யூம் II, பக்கம் 117) அந்த வமிசத்தின் சரித்திர புருஷர்களுள் முதல்வனாக முதலாம் ஸேவுண சந்திரனையே பொதுவாகக் கொள்வர். சிலர் அவன் தந்தையான த்ருடப்ரஹாரனை அவ்விதம் கொள்வர். எவ்விதமாயினும் ஸேவுண சந்திரனுடைய நாலாம் தலைமுறையைச் சேர்ந்த (அதாவது பெயரனுடைய பெயரனை) வத்திகன் அல்லது வத்தேகன் என்பான் கிருஷ்ணராஜனை அண்டியவன் என்று புகழப்படுகிறான். இந்த வத்தேகனுடைய மகன் தான் இரண்டாம் பில்லமன். அவனுடைய சாசனம் கி. பி. 1000 ஆண்டு கொண்டிருப்பதால். தந்தையான வத்தேகனை ஆதரித்த கிருஷ்ணராஜன் என்பான் ராஷ்டிரகூட மன்னனான மூன்றாம் கிருஷ்ணனே (கி. பி. 939-68) ஆவான். அப்படியானால் அவ்வரச பரம்பரையை நிறுவிய சேவுண சந்திரனை ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், ராஷ்டிரகூட அரசனான முதலாம் அமோகவருஷன் காலத்தைச் சேர்ந்தவனாகக் கொள்ளலாம். சேவுண சந்திரன் தன் பெயராலே சேவுணபுரம் என்ற ஒரு நகரத்தையும் நிர்மாணித்தானாம். முன்னாளிலே சேவுண தேசம் என்பது தேவகிரியிலிருந்து நாசிக் வரையில் உள்ள பிரதேசத்தைக் குறித்து வந்தது. அதாவது, இப்போது காந்தேஷ் (காண்டேஷ்) என்று வழங்கப் பெறும் பிரதேசமே எனக் கொள்ளலாம். காந்தேஷ் என்பதே சேவுண தேசம் என்பதன் திரிபு எனவும் கூறுவர்.

பிற்காலத்திலும் சரித்திரத்திலும் அவர்கள் சேஉணர் என்று குறிக்கப்பட்டு வந்தாலும், பழைய சாசனங்களிலே அந்தப் பெயர் சேவணர் என்றே காணப்படுகிறது. (எபி. இந்தி, வால்யூம் III, பக்கம் 119) சென்னிவாய்க்கால் கல்வெட்டிலும் அவர்கள் பெயர் சேவணர் என்றே காணப்படுவது முக்கிய

மானது. அவர்களைப் பற்றிச் சாசன வாயிலாகக் கிடைக்கும் குறிப்புகளுள் மிகப் பழமையானது இச் சென்னி வாய்க்கால் கல்வெட்டே ஆகும்போலும்.

சேவுணர் குதிரை என்பது சரித்திரப் பிரசித்தம். இதுவே பிற்காலத்தில் மகாராஷ்டிரர் குதிரை என்றும் 'மராட்டா தட்டு' என்றும் வழங்கப்பட்டது. அவர்கள் அசுவபதி[1] என்ற விருதையும் கொண்டிருந்தார்கள். ஆனால் இந்தக் கல்வெட்டு எழுந்த காலத்திலே அவர்கள் தனியரசு பெற்றிருக்க வில்லை; ராஷ்டிரகூடர்களுடைய ஆதிக்கத்தின் கீழ் ஆட்சி புரிந்து வந்தனர். அதனால் சேவணர் குண்டுகொண்டு வாணர் வந்து தாக்கினர் என்பது ராஷ்டிரகூட மன்னர்களுடைய உதவியுடன் வந்தனர் என்றே கொள்ளவேண்டும்.[2]

இன்னும் ஒன்று. இந்தப் படை யெடுப்பை வாணர்கள் தெள்ளாற்றெறிந்த நந்திவர்மனை எதிர்த்து நடத்தியதாகவும் நாம் கொள்ளமுடியாது. அந்தக் காலத்திலே சோழர்கள் தமிழ்நாடு முழுவதையும் கைப்பற்றித் தங்கள் ஆளுகையின் கீழ்க் கொணர்ந்துவிட்டனர். பல்லவர்களின் ஆட்சி அஸ்தமித்து விட்டது. இந்தச் சாசனத்திலேயே நந்திவர்மன் தெள்ளாற்றெறிந்து ராஜ்யமும் கொண்ட செய்தி தெளிவாக விதந்தோதப்பட்டிருக்கிறது.

---

1. பழைய காலத்தில் நம் நாட்டு அரசர்களில் சிலர் அசுவபதி, கஜபதி, நரபதி என்னும் விருதுகளைக் கொண்டிருந்தார்கள். போர்ப்படையிலே அந்த அந்தப் பகுதிகளிலே அவர்கள் மிக்க பலம் பொருந்தியவர்கள் என்பதையே இந்த விருதுகள் குறிக்கும். சேவுணர் அசுவபதி; பிற்காலத்திலே சேவுணர் அரசு அழிந்து முஸ்லிம்களுக்குக் கீழ்ப்பட்ட பிறகு இந்த விருதை முஸ்லிம்கள் தரித்து வந்தனர். இப்போது ஒரிஸ்ஸா என்னும் பகுதியை ஆண்டு வந்த ஒட்ட தேசத்து மன்னர்கள் கஜபதி. விஜயநகரத்து மன்னர்கள் நரபதி எனப்படுவர்; காலாட்படை மிகுதி கொண்டிருந்தனர். இந்த விருதே பிற்காலச் சாசனங்களில் 'நரவாகன சக்கரவர்த்தி' என்றும் காணப்படுவது.

2. 'குண்டு' என்ற சொல்லுக்குக் குதிரை என்ற பொருள் பிங்கலந்தை முதலிய நிகண்டுகளில் கொடுக்கப்பட்டுள்ளன. ஆனால் இலக்கிய வழக்கு ஏதும் காணவில்லை. இந்த இடத்தில் வேறு எந்தப் பொருளும் பொருந்தாது. கல்வெட்டில் இத்தப் பகுதி மிகத் தெளிவாக இருக்கிறது; வேறு விதமாக வாசிக்க முடியாது.

ஆதலால் சோழர்களை எதிர்த்துப் பல்லவர்கள் நடத்திய போரில் வாணர்களும் பல்லவர்களுக்கு உதவியாக வந்திருக்க வேண்டுமென்று கொள்ளலாம். ஆகவே நந்திவர்மன் தன்னுடைய பிதிரார்ஜித நாட்டை அடைவதற்கு ராஷ்டிரகூடர்கள் உதவிகொண்டே சோழர்களோடு போருக்குக் கிளம்பினன் என்பதும், தெள்ளாற்றிலே நடந்த சண்டையில் அவன் எதிரிகளை முறியடித்து ராஜ்யத்தைக் கொண்டான் என்பதும் தெளிவாகும். வட ஆர்க்காடு ஜில்லா திருவல்லத்திலே கிடைக்கும் நந்தி விக்கிரம வர்மனுடைய பதினேழாம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று (தே. இ. சாசனங்கள், இரண்டாம் வால்யூம், பக்கம் 94) விக்கிரமாதித்த மாவலி வாணராயனை அவனுடைய சிற்றரசனுகக் குறிக்கிறது. அதேபோல, நந்தி போத்தரையனுடைய இருபத்து மூன்றும் ஆண்டு கொண்டதாகக் குடிமல்லத்திலிருந்து கிடைக்கும் மற்றொரு கல்வெட்டிலும் (1903-ஆம் வருஷத்து 229-ெந. சாசனம்) அந்த வாணராயன் சிற்றரசனுகக் காணப்படுகிறுன். இந்த நந்தி வர்மன், நிருபதுங்கனுடைய தந்தையான மூன்றும் நந்தி வர்மனுக இருத்தற்கில்லை யென்பது நாம் மேலே காட்டியுள்ள காரணங்களால் நன்கு விளங்கும். ஆகவே அவன் தெள்ளாற்றெறிந்த நந்தி வர்மனுகவே இருத்தல்வேண்டும். இதிலிருந்து மாவலி வாணராயனை விக்கிரமாதித்தியன் என்பான் ஒருவன் இந் நந்திவர்மன் கீழ்ச் சிற்றரசனுக இருந்தான் என்பது போதரும்.

தெள்ளாற்றெறிந்த நந்தி வர்மனைப் புகழ்ந்து பாடும் தமிழ் நூலான நந்திக் கலம்பகத்தில் அவன் வெற்றிகொண்ட இடங்களுள் குருக்கோட்டை என்பதும் ஒன்றுகக் காணப்படுகிறது. கலம்பகத்தில் காணும் குருக்கோட்டை என்பது பல்லாரி ஜில்லாவில் உள்ள குருகோடு என்னும் ஊராகும். சோழர்களிடமிருந்து தன்னுடைய நாட்டைத் திரும்ப அடைவதற்கு ராஷ்டிரகூடர்களுடைய உதவியோடு அவன் படை திரட்டி வந்த காலத்தில் முதற்போர் நடந்த இடமே குருக்கோட்டை போலும். இல்லாவிடில், தமிழ் நாட்டிற்கு வெகு தூரத்துக்கு அப்பால் உள்ள இடத்தில் அவன் வெற்றி கொண்டிருப்பதற்கு வேறு விதத்தில் சுலபமாகக் காரணம் காட்டமுடியாது.

சமீபத்திலே கண்டுபிடிக்கப்பட்ட முதலாம் ராஜேந்திர சோழனுடைய கரந்தைத் தமிழ்ச் சங்கச் செப்பேட்டுச் சாசனத்தில் வரும் ஒரு சுலோகமும் மேலே நாம் கூறியவற்றை

உறுதிப்படுத்துவதாக இருக்கிறது. முதற்பராந்தகனைப்பற்றிக் கூறும்போது அதிலே பின்வரும் சுலோகம் காணப்படுகிறது (ஜர்னல் ஆப் ஓரியண்டல் ரிஸர்ச், வால்யூம் XIX, பக்கம் 150) :

"நிர்ஜ்ஜித்ய ஸிம்ஹளபதிம் யுதி பாண்டிய ராஜம்
ப்ரக்யாத கீர்திம் அத கேரளமப் யஜய்யம் (ஜேயம்)
வீரஸ்ஸ பல்லவ ந்ருபஞ்ச யசாம்ஸி தேஷாம்
ராஷ்ட்ராணி சாதித வஸூநி ச வாஹநாநி"

"அந்த வீரன் (அதாவது பராந்தகன்) யுத்தத்திலே ஸிம்ஹளபதி (இலங்கை மன்னன்), பாண்டிய அரசன், வெற்றி கொள்ளமுடியாதவன் என்று கீர்த்தியையுடைய கேரளன் (சேர மன்னன்), பல்லவ நிருபதி ஆகியவர்களை வெற்றி கொண்டு அவர்களுடைய புகழ், ராஜ்யம், செல்வம், வாகநம் ஆகியவற்றையும் கைக்கொண்டான்" என்று அந்தச் சுலோகத்தைத் தமிழில் மொழி பெயர்க்கலாம். பராந்தகன் கேரள மன்னனையும் பல்லவனையும் வெற்றிகொண்டு அவர்களுடைய நாட்டைக் கைப்பற்றிய செய்தி இந்தச் சாசனத்திலேதான் காணப்படுகிறது. மற்றச் சாசனங்களில் காணப்படாத புது விஷயம் இது. அதனால் இதுவரை ஆதித்தியன் பல்லவ அபராஜிதனை வெற்றிகொண்டு அவன் நாட்டைக் கைப்பற்றி ஆளத்தொடங்கியது முதல் பல்லவர்கள் சரித்திர அரங்கிலிருந்து மறைந்து விட்டதாகக் கருதிவந்திருக்கிறார்கள். எனினும், இந்தச் செப்பேட்டிலிருந்து, அபராஜிதன் இறந்த பிறகும் பல்லவர்கள் நம் நாட்டுச் சரித்திர அரங்கிலிருந்து முற்றிலும் மறைந்துவிடவில்லையென்பதும், அவர்கள் திரும்பவும் சோழர்களை வெற்றிகொண்டு தங்கள் நாட்டை மறுபடியும் சிறிது காலமாவது அடைந்திருத்தல் வேண்டும் என்பதும் தெளிவாக விளங்கும்.

தங்கள் நாட்டைப் பெறுவதற்காகப் பல்லவர்கள் சோழர்களோடு நடத்திய சண்டையில் பாண்டியர்களும் பல்லவர்களோடு சேர்ந்தே போரிட்டார்கள் என்று எண்ணவேண்டியிருக்கிறது. சித்தூர் ஜில்லா புங்கனூர்த் தாலூகாவில் கர்ஷணபள்ளி என்னுமிடத்தில் வீரக்கல்லில் பொறிக்கப்பட்ட கன்னடக் கல்வெட்டு ஒன்று உள்ளது. மேலைக் கங்க

அரசனான பிரிதுவய்ய, அதாவது பிரிதிவீபதியின் ஆட்சியில் பொறிக்கப்பட்ட அந்த வீரக்கல் (1912-ஆம் ஆண்டு 337 ந. சாசனம்) பாண்டியனுக்கும் சோழனுக்கும் இடையில் நடந்த போரைப் பற்றியும் ஒரு வீரன் போரில் உயிர் துறந்ததைப் பற்றியும் தெரிவிக்கிறது.[1] அந்தக் கல்வெட்டு கிடைத்துள்ள கர்ஷணபள்ளி பாண ராஜ்யத்தின் மத்தியப் பகுதியிலே அடங்கியது. அங்கே பாணர்களுடைய சாசனங்கள் பலவும் கிடைக்கின்றன. அதனால் இந்தக் கல்வெட்டில் குறிக்கப்பட்ட பிரிதிவீபதி, சோழனிடமிருந்து பாண நாட்டையும் செம்பியன் மாவலி வாணராய னென்னும் பட்டத்தையும் பெற்ற இரண்டாம் பிரிதிவீபதியாகவே இருத்தல்வேண்டும். ஆகவே, இந்தக் கல்வெட்டையுடைய வீரக்கல் கி. பி. 913-ஆம் ஆண்டுக்குப் பிறகே நிறுவப்பட்டதாகும். தமிழ் நாட்டின் தென் பகுதியில் உள்ள பாண்டியன், சித்தூர் ஜில்லாப் பிரதேசத்திற்கு எவ் விதம் வந்து அங்கே சண்டைபோட நேர்ந்திருக்கக்கூடும்?

திருவாலங்காட்டுச் செப்பேடுகளிலே பராந்தகன் பாண்டியரோடு நடத்திய போரை விவரிக்கையில் பின்வருமாறு கூறப்பட்டிருக்கிறது: "அவனுடைய (பராந்தகனுடைய) பராக்கிரமமாகிய நெருப்பினால் சூழப்பட்ட பாண்டியன், அந்த அக்கினிப் பிழம்பின் தாபத்தைத் தாங்காமல் அதைத் தணித்துக் கொள்வதற்காகவே போலும், தன்னுடைய பிதிரார்ஜிதமான ராஜ்யத்தையும் அரசபதவியையும் துறந்து அவசரம் அவசரமாகக் கடலில் புகுந்தான் (இலங்கைக்குச் சென்றான்.)" (சுலோகம் 51). இந்த வரலாறு மகாவமிசத்திலும் கொடுக்கப்பட்டிருக்கிறது. கி. பி. 923-முதல் 934-ஆம் ஆண்டு வரையில் ஆண்ட இலங்கை அரசன் நான்காம் தப்புலன் ஆட்சியில், பாண்டி அரசன், "சோழனிடம் பயந்து தன் நாட்டைத் துறந்து கப்பலேற்றி மஹா திட்ட

1. பழைய சென்னை ராஜதானியிலே 1904-ஆம் ஆண்டிலிருந்து 1935-ஆம் வரையில் பிரதி செய்த கன்னடச் சாசனங்கள் எல்லாம் தென்னிந்திய சாசனங்கள் ஒன்பதாம் வால்யூம் ஆக வெளியிடப்பெற்றுள்ளன. ஆனால் அதிலே இந்தச் சாசனம் காணப்பெறவில்லை. அதேபோலத் தெலுங்குச் சாசனங்கள் பத்தாம் வால்யூம் ஆக வெளியாகியுள்ளன. அதிலும் இது இடம் பெறவில்லை.

என்னும் இடத்தை வந்தடைந்தான்." இலங்கை அரசன் அவனை முறைப்படி வரவேற்று உபசரித்துச் சோழனிடமிருந்து பாண்டிய சிங்காதனத்தை மட்டுமல்லாமல் சோழனுடைய சிங்காதனத்தையும் கைப்பற்றி இரண்டையும் பாண்டியனுக்கு அளிப்பதாக வாக்களித்தான். அவ்விதமே படையெடுத்துச் செல்வதற்காக வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவந்தான். ஆனால் இதற்கிடையில் ஈழ நாட்டிலே ஒரு கலகம் மூண்டது. அதன் பயனாகப் படையெடுப்பு நிற்கவேண்டியதாயிற்று. இனி, தான் அவ்விடம் தங்குவதால் பயன் ஏதும் கிட்டாது என்பதை உணர்ந்த பாண்டியன், 'தன்னுடைய மகுடத்தையும் தான் கொண்டு சென்றிருந்த இதர விலையுயர்ந்த பொருள்களையும் அவ்விடத்திலே விட்டுவிட்டுக் கேரளத்தை அடைந்தான்.' (சூளவமிசம், அத்தியாயம் 53, சுலோகம் 5 முதல்). கேரள மன்னனும் தன்னிடம் வந்த பாண்டியனுக்கு உதவுவதற்காகப் படை திரட்டிச் சோழர்களை எதிர்த்துப் போரிட்டிருத்தல் கூடும். ஆயினும் பயன் ஏதும் கிட்டியதாகத் தெரியவில்லை. இவ்விதம் கேரள மன்னனோடு பராந்தகன் போரிட்டு வெற்றிகொண்டதே கரந்தைத் தமிழ்ச் சங்கத்துச் செப்பேட்டுச் சாசனத்தில் குறிக்கப்பட்டிருப்பது போலும்.

பாண்டிய மன்னனும் தனக்கு உதவக் கூடியவர்கள் தென்னாட்டிலே யாரும் இல்லையென்பதை உணர்ந்து வேறு வழியில்லாமல் ராஷ்டிரகூடர்களுடைய உதவியை நாடியிருத்தல் கூடும். இவ்விதம் பராந்தக சோழனால் நாடிழந்த பல்லவன், பாணன், பாண்டியன் ஆகிய மூவரும் ராஷ்டிரகூடர்களை அண்டினார்கள். ராஷ்டிரகூட மன்னனும் அவர்களுக்கு அபயம் அளித்து, இழந்த நாட்டை அவர்கள் திரும்பவும் அடைவதற்கு உதவினான்.

நந்திக் கலம்பகத்தை ஊன்றிக் கவனித்தால் முக்கியமான சில விஷயங்கள் புலப்படும். குருக்கோட்டையில் அவன் அடைந்த வெற்றியை ஐந்து பாடல்கள் விவரிக்கின்றன. அதேபோலத் தெள்ளாற்றில் அவன் வென்ற செய்தியை ஆறு பாடல்களுக்கு மேல் குறித்துச் செல்கின்றன. இம்மாதிரியே அவன் இன்னும் வெள்ளாறு, கடம்பூர், வெறியலூர், தொண்டி, பழையாறு முதலிய இடங்களில் வெற்றிகொண்டிருக்கிறான். ஆள் வலியால் மாபலம் கொண்டிருந்த எதிரிகளை அவன் தன் தோள் வலியாலேயே வெற்றிகொண்டானும். தென்னனுடான பாண்டி நாட்டில் அரண் வலி சூழ்ந்த இடத்திலிருந்த பகைவரைச் சூழ்ந்து

அவன் வாகை சூடினுன். தொண்டைநாடு மட்டுமல்லாமல் சோணுடும் கொங்கும் அவன் ஆளுகையின் கீழ் இருந்தன. கொங்கன், சோணுடன், உறந்தையர்கோன், காவிரி வளநாடன் என்பன போன்ற பெயர்களால் அவன் குறிக்கப்படுகிருன்.

இன்னும் அவன் வடநாட்டிலும் பல வெற்றிகளைக் கொண் டிருந்தான் என்றும் கலம்பகம் குறிக்கிறது. 'குமரிக் கோண்கன் கங்கை மணுளன்' என்று (செய்யுள் 28) கூறுகிறது. வட வேந்தர் அவனுக்குத் திறை செலுத்தினர் (செய்யுள் 27). இன் னும் ஓர் இடத்தில் அவன் அங்கநாடன் (செய்யுள் 39) என்றும் குறிக்கப்படுகிருன். கடைசியாக, இரண்டு பாடல்களில் (6, 12) அவனுடைய போர்த் திறமை ஐராவதத்துக்கு ஒப்பிடப்பட்டி ருக்கிறது. மேலெழுந்தவாரியாகப் பார்த்தால், நந்தி வர்மன் வடநாட்டு மன்னர்களை வென்று திறைகொண்டது முதலியவை கவியின் கற்பனையில் தோன்றிய புகழுரைகளே என்றும், உண் மையாக நிகழ்ந்திருக்கக் கூடியவை யல்ல வென்றும் எண்ணத் தோன்றும். ஆனுல் ஐராவதத்துடன் அவனுடைய போர்த் திறமையை ஒப்பிட்டுக் காட்டியிருப்பதைக் கொண்டு அவன் கொண்டனவாகக் கூறப்பெறும் வெற்றிகள் யாவும் உண்மை யென்பதைத் தெளியலாம்.

ஐராவதம் என்பது இந்திரனுடைய யானை என்பதை நாம் அறிவோம். நந்தி வர்மன் ஐராவதத்தோடு ஒப்பிடப்பட்டிருப் பதால் அவனுக்கும் இந்திரன் என்பான் ஒருவனுக்கும் உள்ள தொடர்பு வெளியாகும். கலம்பகத்தில் இந்த உவமை ஓர் இடத் தல்லாமல் இரண்டு இடங்களிற் காணப்படுவதால் அதை வெறும் கவிக் கூற்று எனத் தள்ளிவிடுவதற்கில்லை. அந்தக் காலத்தில் இந்திரன் என்ற பெயர் பூண்ட அரசன் ராஷ்டிரகூட மன்ன ஞன மூன்ரும் இந்திரன் ஆவான். அவன் வடநாடுகளிலே போரிட்டு வாகை மாலை சூடியிருக்கிருன். கன்யாகுப்ஜம் என் னும் கன்னேசியில் அரசு புரிந்த கூர்ஜரப் பிரதிஹார மன் னர்கள் மீது அவன் படை நடத்திச் சென்றிருக்கிருன். அவன் மகனை நாலாம் கோவிந்தனுடைய காம்பே செப்பேட்டுப் பட் டயத்தில் (எபி. இந்தி., வால்யூம் VII, நெ. 6, சுலோகம் 19)

யங் மாத்யத் த்விப தந்தகாத விஷமம்
காலப்ரிய ப்ராங்கணம்
தீர்த்வாயத் துரகைர் அகாத யமுநா
ஸிந்துப்ரதி ஸ்பர்திநீ

யே நேதம்ஹி மஹோதயாரி நகரம்
நிர்மூல முந் மூலிதம்
நம்நாத் யாபி ஜநைஃகுசஸ்தலமிதி
க்யாதிம் பரம் நீயதே.

இந்தச் சுலோகத்திலிருந்து (1) இந்திரனுடைய போர் யானைகள் அவற்றின் தந்தங்களால் காலப்ரியர் கோவிலின் பிராகாரங்களைக் குத்திக் குழி குழியாக்கி விட்டன; (2) அவன் யமுனை நதியைக் கடந்து சென்றான்; (3) எதிரிகளின் நகரமான மகோதயத்தை அவன் அழித்தான்; அதனால் அந் நகரம் குசஸ்தலி என்று வழங்கப்பெற வேண்டியதாயிற்று என்னும் விஷயங்கள் புலப்படுகின்றன. மகோதயம் என்பது கன்னோசியின் தலைநகரான கன்யாகுப்ஜ நகரத்தின் பெயராகும். இந்திரன் கொண்டனவாக மேலே குறிப்பிட்ட வெற்றிகளைச் சாளுக்கியர்களின் லேமுலவாடக் கிளையைச் சேர்ந்தவனான இரண்டாம் நரஸிம்ஹன் என்பவன் அடைந்ததாகவும் காணப்படுகிறது. கன்னடக் கவிஞரான பம்பா எழுதிய விக்ரமார்ஜுன விஜயம் என்ற மறு பெயர் பூண்ட பாரதத்தின் முதல் அத்தியாயத்தில் தம்மை ஆதரித்த புரவலரான லேமுலவாடச் சாளுக்கியர்களுடைய புகழை எடுத்துரைக்கும் இடத்திலே நரஸிம்ஹன் கொண்ட வெற்றிகளை விவரமாகக் கூறியிருக்கிறார். அவன் (1) லாட தேசத்தை வென்று அடிமைப் படுத்தினான் [லாட தேசம் என்பது கூர்ஜரம் ஆகும்]; (2) ஸப்த மாளவத்தை அழித்துச் சாம்பலாக்கி, தோல்வியுற்ற மன்னர்களிடமிருந்து திறை வாங்கினான்; (3) கூர்ஜர மன்னனை மஹீபாலனைப் போரில் வென்று அவனைப் புறங்காட்டி ஓடச் செய்து கூர்ஜரர்களுடைய நாட்டைக் கைக்கொண்டான்; (4) தன்னுடைய குதிரைகளைக் கங்கையாற்றில் குளிப்பாட்டினான் என்று பம்பா கவி புகழ்ந்திருக்கிறார் (சுலோகங்கள் 36-38).

இவ்விரண்டும் ஒரே போர் நிகழ்ச்சியைக் குறிப்பனவாகும் என்பது சுலபமாக விளங்கும். அதற்கு அந்தச் சூழ்நிலையை நாம் அறியவேண்டுவது அவசியமாகும்.

கன்னோசியை ஆண்டு வந்த கூர்ஜரப் பிரதிஹார மன்னனான முதலாம் மஹேந்திர பாலன் கி. பி. 907-8-ஆம் ஆண்டில் காலமானான். அவனுக்குப் பின் யார் பட்டத்தை அடைவதென் பதில் அவன் குமாரர்களான இரண்டாம் போஜன், மஹீ

பாலன் ஆகிய இருவருக்குள் சச்சரவு மூண்டது. அவர்களுள் போஜனே முறைப்படி சிங்காதனத்துக்கு உரியவன் போலும். ஆயினும் அவனைக் காட்டிலும் மற்றவனான மஹீபாலன் அதிக பலம் பொருந்தியவனாகக் காணப்பட்டான். என்றாலும், போஜ னுக்குப் பலம் வாய்ந்த வெளியார் உதவி கிட்டியது. சேதி நாட்டு ஹைஹய மன்னனான முதலாம் கோக்கலன் இந்தச் சச்சர விலே தலையிட்டுப் போஜனுக்கு உதவி அவனைச் சிங்காதனத்தில அமர்த்தினான். கோக்கலன் போஜனுக்கு நெருங்கிய உறவினன். கோக்கலனைப் பற்றிப் பிலஹரிச் சாசனத்தில், "அவன் அதுவரை யில் இல்லாத விதமாகப் புதுமாதிரியில் இரண்டு ஜயஸ்தம்பங் களை நிறுவினான். கும்ப முனிவர் திசையில் (அதாவது அகஸ்தி யர் திசையான தென் திக்கில்) பிரபலமான கிருஷ்ண ராஜனையும் குபேரன் திசையில் (அதாவது வடதிசையில்; குபேரன் வட திசையின் திக்குப் பாலகன்) ஸ்ரீதேவியின் இருப்பிடமான போஜ தேவனையும் ஸ்தாபித்தான்" என்று கூறப்பட்டுள்ளது. (எபி. இந்தி., வால்யூம் I, பக்கம், 256). இவ்விடம் குறிக்கப்பட் டுள்ள கிருஷ்ணராஜன் என்பான் ராஷ்டிரகூட மன்னனான இரண்டாம் கிருஷ்ணன் அல்லது கன்னரதேவன்; மூன்றாம் இந்திரனுக்கு முன்னதாகச் சிங்காதனத்தில் அமர்ந்திருந்தவனும் அவனுடைய பாட்டனுமாவன். அதே போலப் போஜன் என் பான் கூர்ஜரப் பிரதிஹார வமிசத்து இரண்டாம் போஜன் ஆவான். இருவருமே கோக்கலனுக்கு உறவினர்கள். அவனுடைய உதவியாலேயே இருவரும் தங்கள் அரசுரிமையை நிலைபெறச் செய்து கொண்டார்கள். இவற்றால், போஜன் கன்யாகுப்ஜத்துச் சிங்காதனத்தை அடைந்தது தெரியவரும்.

ஆயினும் அவனால் அதிகநாள் அதை ஆண்டு அனுபவிக்க முடியவில்லை. சாந்தேல ராஜகுமாரனான ஹர்ஷதேவனுடைய உதவியைப்பெற்று மஹீபாலன் கன்னோசியின் மீது படை யெடுத்து வந்து போஜனைத் தோற்கடித்து நாட்டைப் பிடித்துக் கொண்டான். போஜனுக்கு உதவியாக நின்ற கர்நாடகப்படையை யும்நாட்டிலிருந்து வெளியே துரத்தினான். அதனோடு நிற்கவில்லை. தன்னுடைய படையை அவர்கள் பின்னாலே செலுத்தி அவர்க ளுடைய நாட்டையும் கைக்கொண்டான். ராஜசேகரர் எழுதிய பாலபாரதத்தில் (I, 7), மஹீபாலன் முரளர், மேகலர், கலிங்கர், கேரளர், குலூதர், குந்தளர், ரமடர் ஆகியோர்களை வென்று அடிப்படுத்தியதாகக் கூறப்பட்டுள்ளது. மேலே குறிப்பிட்ட வெற்றிகளை அவன் எப்போது கொண்டான் என்பதை நாம்

நிச்சயமாகக் கூறமுடியாது. எனினும் அவன் ராஷ்டிரகூடர்கள் மீது படையெடுத்துவந்து குந்தள நாட்டையும் அதையொட்டித் தென்திசையில் உள்ள கேரளம்போன்ற நாடுகளையும் தாக்கியது மூன்றும் இந்திரனுடைய மகுடாபிஷேகத்துக்கு முன்னதாக நடந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது.

இந்திரனுடைய பட்டாபிஷேகம் குருந்தகம் என்னும் இடத்திலே கி. பி. 915-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 24-ஆம் தேதி நிகழ்ந்தது. அந்தச் சமயத்திலே மன்னன் அளித்த தானத்தைத் தெரிவிப்பதாக உள்ள நௌஸாரிச் செப்பேடுகளில் அவன் மேருவை வெற்றிகொண்டு உபேந்திரன் என்னும் அரசனை முறியடித்துக் கோவர்த்தனம் என்னும் கோட்டையைக் கைப்பற்றியதாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. அவன் பட்டாபிஷேக சமயத்திலேயே இந்த வெற்றிகளைக் கொண்டிருந்ததாகக் கூறப்படுவதால் இவை அவன் யுவராஜனாக இருந்தபோது, அதாவது அவனுடைய பாட்டனான இரண்டாம் கிருஷ்ணனுடைய ஆட்சிக் காலத்திலேயே கொண்டனவாக இருத்தல் வேண்டும். அந்தச் செய்தியைத் தெரிவிக்கும் சுலோகத்தைப் பின்வருமாறு மொழிபெயர்க்கலாம்.

"இந்திர ராஜனாகிய இவன் சுலபமாக மேருவை வேரறுத்தானாயினும், கோவர்த்தனத்தைக் காத்து நின்ற உபேந்திரனை வெற்றி கொண்டதால் பெருமை கொள்ளவில்லை. அது எவ்விதமெனில் தேவர்களுக்கு அரசனான இந்திரன் சுலபமாக மேருமலையை வேரறுத்தானாயினும், கோவர்த்தன மலையைத் தூக்கி(க் குடையாகப் பிடித்த) உபேந்திரனை (கிருஷ்ண பரமாத்மாவை) வென்று அடிப்படுத்தியதற்குப் பெருமை கொள்ளவில்லையே, அதேபோல்." (ராயல் ஏஷ்யாடிக் ஸொஸைட்டி, பம்பாய்க் கிளையின் பத்திரிகை, வால்யூம் XVIII; எபி. இந்தி., வால்யூம் XI, பக்கங்கள் 36, 40).

இந்தச் சுலோகம் சிலேடையாக அமைந்துள்ளது. தேவராஜனான இந்திரனுக்கு இம்மன்னனான இந்திர ராஜன் உவமையாக்கப்பட்டிருக்கிறான். பாண குலத்து மன்னர்களான மாவலி வாணராயர்கள் பிரபுமேரு, ஜயமேரு என்பனபோன்ற பட்டங்களைத் தரித்து வந்திருக்கிறார்கள். ஆதலின், ராஷ்டிரகூட அரசனான இந்திரன் வெற்றி கொண்ட மேரு என்பான் மாவலி வாண ராயர்களுள் ஒருவனாகவே இருத்தல்

வேண்டும். சகாப்தம் 820 முதல் 831 வரையில் (அதாவது கி. பி. 898 முதல் 909 முடிய) காணும் கல்வெட்டுக்களையுடைய வனும் பிரபுமேரு என்னும் பட்டத்தையுடையவனுமான இரண்டாம் விக்கிரமாதித்தியன் என்னும் வாண அரசனே இந்திரனால் வெற்றி கொள்ளப்பெற்றவன் போலும். இந்தச் சுலோகத்தில் குறிக்கப்பெற்ற மற்ற அரசனான உபேந்திரன் என்பான் பரமார மன்னனான கிருஷ்ணராஜன் ஆவான். அவனுக்கு உபேந்திரன் என்ற பெயரும் காணப்படுகிறது. உபேந்திர ராஜன் தோல்வியடைந்த கோவர்த்தனம் என்னும் கோட்டை நாசிக் பக்கத்தில் இருந்தது. இவை ராஷ்டிரகூட கிருஷ்ணனுடைய ஆட்சியின் கடைசிக் காலத்தில் நடைபெற்றிருத்தல் வேண்டும். ஏனெனில், கிருஷ்ணன் மரணம் அடைந்த காலத்தில் இந்திர ராஜன் மாளவத்திலே போரிட்டுக் கொண்டிருந்தான். தன்னுடைய மகுடாபிஷேகத்துக்காக அவன் போரை இடையில் நிறுத்தவேண்டியிருந்தது.

அதற்குப் பிறகே இந்திரன் வடக்கே சென்று வெற்றி கொண்டது. ஆயினும், அதன் காலத்தை நாம் நிச்சயமாகக் கூற முடியாது. கி. பி. 915-இல் பட்டம் எய்திய இந்திரனுடைய ஆட்சிக் காலம் கி. பி. 918-இல் முடிவடைந்து விட்டதாக இதுகாறும் கருதிவந்தார்கள். அதனால் இந்த வடநாட்டுப் படையெடுப்பு இடைக்காலத்தில், கி. பி. 916-7-ல், நடந்திருக்கவேண்டும் என்று தீர்மானித்தார்கள். ஆனால், இந்திரனுடைய ஆட்சி அவ்வளவு சீக்கிரமாக முடிந்து விடவில்லையென்றும், கி. பி. 927-ஆம் ஆண்டின் இறுதிவரையிலும் அவன் அரசு செலுத்தி வந்திருக்கிறான் என்றும் இப்போது தெரியவருகிறது (எபி. இந்தி., வால்யூம் XXVI, பக்கம் 161-2). அதற்குப் பிறகும் ஒன்றிரண்டு ஆண்டுகள் அது நீடித்திருக்கக்கூடும். இவ்விடத்திலே நாம் மற்றொரு விஷயத்தையும் ஞாபகத்தில் கொள்ளவேண்டும். கி. பி. 935-ல் மூன்றாம் அமோகவருஷன் ராஷ்டிரகூட சிங்காதனம் ஏறினான். அவன் வயதான கிழவன். அவன் ஆட்சிக் காலத்திலே அவன் மகனும் இளவரசனும் ஆன மூன்றாம் கிருஷ்ணனே ராஜ்ய பாரத்தைத் தாங்கி வந்திருக்கிறான். அவன் (ராஜ) குமாரனாக இருந்த காலத்தில் வடநாட்டுப் போர்களிலே ஈடுபட்டு வெற்றிகொண்டான் என்று கூறப்படுகிறது. இந்திரன் நடத்திய படையெடுப்பிலே கிருஷ்ணனும் ஈடுபட்டிருத்தல் கூடும். இந்திரனைப் போலவே கிருஷ்ணனுக்கும் காலப்பிரியத்தோடு ஏதோ தொடர்பு இருந்திருக்கிறது. காலப்பிரியம் என்பது சிவபெருமா

னுடைய புண்ணிய க்ஷேத்திரங்களுள் ஒன்று. யமுனைக் கரையில் உள்ளது. இப்போது கால்பி என்று வழங்கப்படுவது.

இன்னும் இந்திரன் இறந்த சிறிது காலத்துக்குள்ளாகவே கூர்ஜரப் பிரதிஹாரர்கள் ராஷ்டிரகூடர்களிடமிருந்து மாளவத்தைத் திரும்பவும் கைப்பற்றி விட்டார்கள் என்பதை நிரூபிக்கக் கூடிய சாசனங்கள் உள்ளன. ஆதலால் இந்திரன் நடத்திய வடநாட்டுப் படையெடுப்பு கி. பி. 925-ஆம் ஆண்டுக்கு அணித்தாக நடந்ததெனக் கொள்ளலாம்.

பம்ப கவியின் விக்கிரமார்ஜுன விஜயத்தில் வேமுலவாடச் சாளுக்கிய அரசனை நரஸிம்ஹன் தன்னுடைய குதிரைகளைக் கங்கை(காங்காவாரிதி)யில் நீராட்டினான் என்று கூறப்பட்டிருக்கிறது. நந்திக்கலம்பகமோ தன் பாட்டுடைத் தலைவனை அங்க நாடன் என்று கூறுகிறது; அங்க நாட்டில் அவன் கொண்ட வெற்றியே, அங்க நாட்டுக்கு அரசன் அவன் என்று அவ்விதம் குறிக்கப்பட்டுள்ளது. அங்க நாடு என்பது பீஹார் ராஜ்யத்தில் பாகல்பூரைச் சுற்றியுள்ள பிரதேசமாகும். அந்நாளிலே வேறு எந்தப் பகுதிக்கும் அந்தப் பெயர் வழங்கியதில்லை.[1] பல்லவ நந்தி வர்மன், சாளுக்கிய நரஸிம்ஹன் ஆகிய இருவரும் ஒரே போரில் ஈடுபட்டிருந்தமையால் நந்தி வர்மனுடைய அங்கநாட்டு வெற்றி, இப்போது நமக்கு முழுவிவரங்களும் கிடைக்காவிட்டாலும், உண்மையாகவே இருத்தல் கூடும்.

இதுகாறும் கூறியவற்றால், நந்தி வர்மன் ராஷ்டிரகூட அரசனை மூன்றாம் இந்திரனுடன் நெருங்கிய தொடர்பு பூண்டிருந்

1. கொங்குச் சோழ சாசனங்களிலே கரூர்ப்பக்கத்திலே உள்ள நெரூர் என்னும் ஊர் கிழங்க நாட்டில் இருந்ததாகக் காணப்படுகிறது. கிழங்க நாடு என்னும் பெயரைக் கீழ் அங்க நாடு எனக் கொள்ளலாம். அவ்விதமானால் மேல் அங்க நாடு என ஒன்று இருத்தல்வேண்டும். ஆனால், அதைப்பற்றிய விவரம் ஏதும் கிடைக்கவில்லை. எனினும், சேதி நாடு போன்ற வடநாட்டுப் பெயரைக்கொண்ட பகுதிகள் பல, மத்திய காலத்தில் இங்கே இருந்ததை நாம் அறிவோம். அம்மாதிரியிலே நெரூர்ப்பக்கத்துப் பிரதேசம் அங்கநாடு என அப்போது பெயர் பெற்றிருக்கலாம். நந்தி வர்மன் கொங்கு நாட்டையும் ஆண்டு வந்திருக்கிறான். அவனே தன்னுடைய அங்க நாட்டு வெற்றியைக் குறிக்கக் கொங்கு நாட்டுப் பகுதிக்கு அந்தப் பெயரை இட்டிருத்தல் கூடுமா?

தான் என்பது தெளிவாகும். அதனால் அவன் தான் இழந்த நாட்டை மீண்டும் பெறுவதற்கு ராஷ்டிரகூடர்கள் அவனுக்கு உதவி புரிந்திருக்கவேண்டும் என்று கருதுவது மிகையாகாது.

நந்திக் கலம்பகத்திலே,

"கொம்புயர் வாமை நாக மெதிர்வந்த
நந்தி குலவீர ராக மழியத்
தம்பிய ரெண்ண மெல்லாம் பழுதாக
வென்ற தலைமான வீர துவசன்" (செய்யுள் 81)

என்ற பகுதி காணப்படுகிறது. அதனால் அவனுக்கும் அவன் தம்பியருக்கும் விரோதம் இருந்து வந்ததென்பது தெரியவரும். சோமேசர் முதுமொழி வெண்பாவில் "நந்தி கலம்பகத்தால் மாண்ட கதை நாடறியும்" என்று கூறப்பட்டிருக்கிறது. கர்ண பரம்பரையாகவும் ஒரு கதை உண்டு. நந்தி வர்மனுக்கும் அவன் தம்பிக்கும் அரசுரிமைபற்றி விரோதம் இருந்து வந்தது. போரில் வெற்றி கொள்ளமுடியாத தம்பி வஞ்சத்தால் வெற்றி காண விழைந்தான். தமிழ்க் கவிகளில் தன் அண்ணனுக்கு உள்ள ஆசையை யறிந்த அவன் அறம்வைத்துப் பாடி அண்ணன்மீது இந்தக் கலம்பகத்தை இயற்றச் செய்தான். அதை அவன் கேட்பதற்கும் ஓர் உபாயத்தைக் கைக்கொண்டு வெற்றி கண்டான். கதை யாவரும் அறிந்ததே. கலம்பகத்தை முழுதும் கேட்ட மன்னன் கடைசியில் உயிரை யிழந்தானும். அவன் தம்பியருக்குச் சோழர்கள் உறுதுணையா யிருந்தனர் போலும்.

வட ஆர்க்காடு ஜில்லா திருமால்புரம் என்னும் இடத்திலிருந்து கிடைக்கும் பார்த்திவேந்திரவர்மனுடைய பதின்மூன்றாம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று (தே. இ. சாசனங்கள், மூன்றாம் வால்யூம், நெ. 197) நந்திவர்ம காடுபட்டிகள் மகளார் வஜ்ஜவை மகாதேவி அளித்த தானத்தைத் தெரிவிக்கிறது. அவள் பார்த்திவேந்திரவர்மன் தேவியாக இருக்கலாம். தெள்ளாற்றெறிந்த நந்திவர்மனே இக்கல்வெட்டில் குறிக்கப்பட்ட நந்திவர்ம காடுபட்டிகள் போலும்.

இவனுடைய சாசனங்கள் இவன் ஆட்சியின் இருபத்துமூன்றாம் ஆண்டுவரையில் தான் கிடைக்கின்றன,

## சோழர்கள்

சோழர்களிலே முதலாம் இராஜராஜனுக்கு முற்பட்டகாலத்தனவாகச் சுமார் எழுபத்தைந்து சாசனங்கள் இத்தொகுப்பிலே சேர்ந்துள்ளன. பார்த்திவேந்திரவர்மன் காலத்தனவான இரண்டு சாசனங்களும், (தெ. 497, 498), மதிரை கொண்ட பரகேசரிவர்மனுன முதற் பராந்தகனுடைய கல்வெட்டுக்கள் சுமார் இருபதும் போக மீதி உள்ளவை ராஜகேசரிவர்மன் என்றோ பரகேசரிவர்மன் என்றோ பொதுப்படக் குறிக்கும் அரசர்களுடைய காலத்தைச் சார்ந்தனவாகும். இவ்விதம் பொதுப்படையாகப் பெயர் ஏதும் இல்லாமலே குறிக்கப்பெறும் மன்னர்கள் யார் யார் என்று நிச்சயிப்பது சுலபமல்ல. பல சமயங்களில் ஆராய்ச்சியாளர்களுக்குள்ளே இதுபற்றிக் கருத்து வேற்றுமை ஏற்படுவதும் உண்டு.

சோழ மன்னர்கள் ராஜகேசரிவர்மன், பரகேசரிவர்மன் என்னும் பட்டப்பெயர்களை மாறிமாறித் தரித்து வந்திருக்கிறார்கள். தஞ்சாவூரில் சோழ பரம்பரையை நிறுவிய முதல் அரசனான விஜயாலயன் காலம்தொட்டு இது வழக்கில் வந்திருக்கிறது. அவன் ஒரு பரகேசரி. அவனுக்குப் பிறகு, முதலாம் இராஜராஜ சோழனுக்கு முன்னதாகச் சோழ சிங்காதனம் ஏறியவர்களாகக் கருதப்படும் மன்னர்களுள் முதற் பராந்தகன், அரிஞ்சயன், இரண்டாம் ஆதித்தியனான கரிகாலன், மதுராந்தக உத்தம சோழன் ஆகிய நால்வரையும் பரகேசரிவர்மர்களாகக் கொள்வர். அதேபோல் முதலாம் ஆதித்தியன், கண்டராதித்தியன், இரண்டாம் பராந்தகனான சுந்தரசோழன் ஆகிய மூவரையும் ராஜகேசரிவர்மர்களாகக் கொள்வர். முதலாம் ராஜராஜ சோழனும் ஒரு ராஜகேசரிவர்மனுவன்.

சோழர்கள் ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து பதின்மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதி வரையில் சுமார் நானூறு ஆண்டுகள் அரசு செலுத்தியிருக்கிறார்கள். இந்த நானூறு வருஷங்களையும், பகுதிக்குச் சுமார் நூறு வருஷங்கள் கொண்ட நான்கு பகுதிகளாகப் பிரிக்கலாம். வமிசம் நிறுவப்பெற்ற காலத்திலிருந்து முதலாம் இராஜராஜ சோழன் சிங்காதனம் ஏறிய கி. பி. 985-ஆம் ஆண்டு வரையில் உள்ள முதற்பகுதி தான் மிகவும் சிக்கலானது. அந்தக் காலத்து நிகழ்ச்சிகளில் பல இன்னும் தெளிவாகவில்லை,

N

**விஜயாலயன்**

புதிய பரம்பரையின் முதல் அரசனாக இவனையே எல்லாச் சரித்திரங்களும் கூறுகின்றன. திருவாலங்காட்டுச் செப்பேடுகளிலே இவன் தன்னுடைய இன்பத்துக்காகவே ஏற்பட்டதோவென்னும்படி தஞ்சாவூரைக் கைக்கொண்டு அங்கே நிசும்பசூதினி என்னும் பெயரால் துர்க்கைக்கு ஓர் ஆலயம் எடுப்பித்தான் என்று கூறப்படுகிறது. (சுலோகங்கள், 45, 46). அவன் எவ்விதம் தஞ்சையை அடைந்தான் என்பதைப்பற்றிய விவரமே கிடைக்கவில்லை. [1]

மூவருலாவும் சங்கர சோழனுலாவும் அம்மன்னன் தன்னுடைய மார்பில் தொண்ணூற்றாறு புண் கொண்டவன் என்று புகழ்ந்து கூறுகின்றன.

"எண்கொண்ட தொண்ணூற்றின் மேலுமிரு மூன்று
புண்கொண்ட வென்றிப் புரவலனும்"

(விக்கிரம சோழன் உலா-கண்ணி 15)

"சீறுஞ் செருவிற் றிருமார்பு தொண்ணூறும்
ஆறும் படுதழும்பின் ஆர்த்தோன்"

(குலோத்துங்க சோழன் உலா-கண்ணி 21)

"தொழும்புடைய வாகத்துத் தொண்ணூறு மாறுந்
தழும்புடைய சண்டப்ர சண்டன்"

(இராசராச சோழன் உலா-கண்ணி 19)

"புண்ணூறு தன்றிரு மேனியிற் பூணகத்
தொண்ணூறு மாறுஞ் சுமந்தோனும்"

(சங்கர சோழன் உலா-கண்ணி 17)

மேலே கூறியவற்றைத் தவிர, அம்மன்னனைப்பற்றி வேறு விவரம் ஏதும் தெரியவில்லை. எனினும், அவன் உண்மையில்

---

1. தஞ்சாவூர் நகரத்தை விஜயாலயனே நிர்மாணித்தான் என்று கன்யாகுமரிக் கல்வெட்டு கூறுகிறது. (திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் ஸீரிஸ், வால்யூம் III, பக்கம் 142, சுலோகம் 54). இது கவிஞரின் புனைந்துரையே. அந்தக் காலத்துக்கு முன்னரே முத்தரையர் அந் நகரிலிருந்து வந்தனர் என்பதும், அவர்கள் தஞ்சைக் கோன், தஞ்சை நற்புகழாளன் போன்ற விருதுகளைத் தாங்கியிருந்தனர் என்பதும் செந்தலைக் கல்வெட்டுக்களால் நமக்குத் தெளிவாகத் தெரிகின்றன. (எபி. இந்தி., வால்யூம் XIII, பக்கம் 134 முதல்.)

அரசு புரிந்திருக்கிறுன் என்பது திருச்சிராப்பள்ளித் தாலூகாவில் உள்ள திருநெடுங்களத்திலிருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டால் தெரிகிறது. திரிபுவன சக்கரவர்த்திகள் கோநேரின்மை கொண்டான் ஒருவனுடைய சாசனம் அது. பரகேசரி வர்மரான விஜயாலய சோழ தேவருடைய ஒரு பழைய சாசனப்படி நிலம் தானம் அளிக்கப்பெற்ற செய்தியைத் தெரிவிக்கிறது. (1909-ஆம் ஆண்டு 673 நெ. சாசனம்). அன்றி, வட ஆர்க்காடு ஜில்லாவில் உள்ள கீழ்ப்புத்தூரிலிருந்து கிடைக்கும் விக்கிரம சோழனுடைய ஐந்தாம் ஆண்டு கொண்ட கல்வெட்டு ஒன்று விஜயாலய சோழனுடைய நான்காம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றைக் குறிப்பிடுகிறது. (1915-ஆம் ஆண்டு 164 நெ. சாசனம்). தஞ்சைப் பெரிய கோயிலிலே காணும் முதலாம் இராஜராஜனுடைய கல்வெட்டுக்களில் அந்தக் கோயிலில் ஊழியம் பார்ப்பதற்காக எந்த எந்த ஊரார் மாணிகளை அனுப்பவேண்டும் என்று குறிக்கும் இடத்தில் பிரம்மதேயம் விஜயாலய சதுர்வேதிமங்கலத்தின் பெயரும் அத்தகைய ஊர்களில் ஒன்ருகக் காணப்படுகிறது. (தெ.இ. சாசனங்கள், இரண்டாம் வால்யூம், நெ. 69). பழைய புதுக்கோட்டை ராஜ்யத்தில் நார்த்தாமலை என்னுமிடத்திலிருந்து கிடைக்கும் பிற்காலத்துப் பாண்டியர் ஆட்சிக் காலத்துக் கல்வெட்டு ஒன்று விஜயாலய சோழீச்வரம் என்னும் ஆலயத்தின் பெயரைக் குறிக்கிறது.

இவற்ருல் விஜயாலயன் நாட்டிலே முறையாக அரசு செலுத்தியிருக்கிருன் என்னும் விஷயம் நன்கு வெளியாகும்.

பல்லவர்களுடைய ஆட்சியின் கடைசிக் காலத்திலே அவர்களுடைய சாசனங்கள் சிலவற்றில் சோழர்களுடைய பெயர் காணப்படுகிறது. திருப்பதிக்குப் பக்கத்தில் உள்ள திருச்சானூரிலிருந்து கிடைக்கும் கல்வெட்டு ஒன்று (தெ. இ. சாசனங்கள், வால்யூம் XII, நெ. 43) தந்தி விக்கிரம வர்மனுடை ஐம்பத்தோராம் ஆண்டில் (சுமார் கி. பி. 850) திருவேங்கடக் கோட்டத்துத் திருச்சோகினூரிலே திருவேங்கடத்துப் பெருமானடிகள் கோயிலில் நிறுவிய திரு இளங்கோயில் பெருமானடிகளுக்கு ஒரு நந்தா விளக்கு எரிப்பதற்காகச் சோழ நாட்டுச் சோழனூர் உலகப் பெருமானூர் முப்பது கழஞ்சு பொன் அளித்த செய்தியைக் குறிக்கிறது. மூன்ரும் நந்தி வர்மனுடைய ஆட்சியின் ஆரும் ஆண்டில் சுமார் கி. பி. 856) அளிக்கப்பெற்ற வேலூர்ப்பாளையம் செப்பேடுகள் யஜ்ஞ பட்டர் என்பார் எழுப்பிய சிவாலயத்துக்குத் திருக்காட்டுப்பள்ளி என்னும் கிராமத்தைச் சோழ மகாராஜா

குமராங்குசன் அளித்த செய்தியைத் தெரிவிப்பனவாகும். விஜயாலயன், குமாரங்குசன் ஆகிய இருவரும் ஒரே வமிசத்தைச் சேர்ந்தவர்களாக இருத்தல்கூடும் என்று சில சமயங்களில் நினைத்தது உண்டு. அவ்விதம் இருத்தற்கில்லை. அங்குசன் என்ற விகுதியுடன் முடியும் பெயர்களை வேங்கி நாட்டுச் கீழைச் சாளுக்கிய மன்னர்களே தரித்துவந்தனர். 'ரேநாண்டுச் சோழர்கள்' எனப்படும் தெலுங்குச் சோழர்களில் பல்லிய சோழன் என்பான் குமாரங்குசன் என்ற பெயரைத் தரித்திருக்கிறான் (ஜர்னல் ஆப் இந்தியன் ஹிஸ்டரி, வால்யூம் XV, பக்கம் 258). தங்களை வேங்கிச் சாளுக்கியர்களுடைய சிற்றரசர்கள் என்று குறிப்பதற்காகவே அவர்கள் அவ்விதம் தரித்துவந்தார் போலும். ஆகவே, விஜயாலயனையும் குமாராங்குசனையும் ஒரே கிளையினராகக் கொள்ளமுடியாது.

விஜயாலயனைத் திருச்சானூர்க் கல்வெட்டில் கண்ட உலகப் பெருமானாராகவோ அவனுடைய மகனாகவோ கொள்ளலாம் என்று எண்ணத் தோன்றுவது இயற்கையே. ஆனால், அவ்விதம் கொள்வதற்கு ஓர் ஆக்ஷேபணையும் உண்டு. தஞ்சையிலிருந்து ஆண்ட சோழ மன்னர்களுடைய சாசனங்களிலே அவர்களுடைய வமிசாவளியைக் கூறுமிடத்துச் சங்க காலத்திலிருந்த தங்கள் மூதாதையருக்குப் பிறகு விஜயாலயனையே குல முதல்வனாகக் குறித்திருக்கிறார்கள். இவர்களுடைய ராஜ பாரம்பரியத்தைக் கூறும் இலக்கிய நூல்களிலும் இதையேதான் காண்கிறோம். உலகப்பெருமானாருடைய பெயர் காணப்படவில்லை. விஜயாலயனுடைய தந்தையாக உலகப்பெருமானார் இருப்பாராகில் வமிச பரம்பரையை நிச்சயம் அவனையே முதல்வனாகக்கொண்டு ஆரம்பித்திருப்பர். விஜயாலயனுக்கு உலகப்பெருமானார் என்ற பெயர் இருந்ததாகவும் நமக்குத் தெரியவில்லை.

தஞ்சாவூர் தாலூகா திருப்பழனத்திலிருந்து கிடைத்த ராஜகேசரி வர்மனுடைய இருபத்தொன்றாம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று, [உ]லகப்பெருமாள் விண்ணப்பத்தால் கோயில் ஊழியத்துக்குப் பன்னிருவர், கண் காட்டிகள் இருவர், நந்தவனக் குடிகள் இருவர் ஆகப் பதினாறு பேர்களுக்கும் காணியாக அரசன் நிலம் அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. (தெ. இ. சாசனங்கள், வால்யூம் XIII, நெ. 295). இந்தச் சாசனம் அளித்த அரசன் முதலாம் ஆதித்தியனே எனக் கொள்ளலாம். இதில் காணும் உலகப்

பெருமாளுக்கும் திருச்சானூர்க் கல்வெட்டில் கண்ட உலகப் பெருமானுருக்கும் ஏதோ ஒரு தொடர்பு இருத்தல்வேண்டும்.

மைசூர் ராஜ்யத்திலே பங்களூர் ஜில்லாவில் கூடலூர் என்னுமிடத்திலிருந்து அரைகுறையாகக் காணும் தமிழ்க் கல்வெட்டு ஒன்று கிடைத்திருக்கிறது. ஆரம்பமும் முடிவும் இல்லாமல் ஓரே வரி கொண்டதாகக் காணப்படும் அது சோழ விஜயாலயனைக் குறிக்கிறது; அவனைப் "பத்தினிப்பார நாடன் (?) என்றும், வாள் வலிமிகுந்த கையை உடையவன் என்றும், கூடலில் வசித்து வந்தான்" என்றும் குறித்துச்செல்கிறது. மைசூர் ஆர்க்கியலாஜிகல் அறிக்கை, 1909-ஆம் ஆண்டு, பக்கம் 17, பாரா 68). சாசனம் கிடைத்திருக்கும் அளவைக்கொண்டு நாம் எதையும் நிச்சயமாகக் கூறமுடியாது. எனினும், இதனை ஆராய்ந்த மைசூர் புதையல் இலாகாத் தலைவர் காலஞ்சென்ற ஆர். எஸ். நரஸிம்ஹாசாரியார் இதைத் தஞ்சையில் புதிய பரம்பரை நிறுவிய விஜயாலய சோழனுடைய கல்வெட்டு என்றே கொண்டார்.

சாசனத்திலே அவன் கூடலில் தங்கிவந்தான் எனக் காணப்படுகிறது. கூடல் என்பது பாண்டியர் தலைநகரான மதுரையையே பிரசித்தமாகக் குறிக்கும். சுந்திரமூர்த்திகள் சேரமான் பெருமாளுடன் மதுரை மாநகருக்குச் சென்றபோது அவர்களைப்பாண்டிய வேந்தன் ஒருவனும், பாண்டியன் மகளை மணம்புரிந்து அந்நகரில் முன்னரே போய்த் தங்கியிருந்த அவன் மருமகன் சோழ மன்னன் ஒருவனும் எதிர் கொண்டு அழைததார்கள் என்று பெரிய புராணம் கூறுகிறது.

"சேரமான் தோழரு மச்சேரர் பிரானும் பணிப்பூண்
ஆரமார் பரைமதுரை ஆலவாயினில் வணங்க
வாரமா வந்தணைய வழுதியாக மனக்காதல்
கூரமாநகர் கோடித் தெதிர்கொண்டு கொடுபுக்கார்.

"தென்னவர்கோன் மகளாரைத் திருவேட்டு முன்னரே
தொன்மதுரை நகரின்கண் இனிதிருந்த சோழனூர்
அன்னவர்கள் உடன்கூட அணையவ வருங்கூடி
மன்னுதிரு ஆவலாய் மணிக்கோயில் வந்தணைந்தார்."

(கழறிற். புராணம் 91-2)

ஆயினும் இவ்விடத்திலே குறிக்கப்பட்டிருக்கும் கூடல் மதுரை மாநகரமாக இருக்குமா வென்பது சந்தேகம். சாசனம்

கிடைத்த கூடலூரே அதில் குறிக்கப்பட்ட கூடல் போலும். அவ்விதமாயின் விஜயாலய சோழனுடைய சாசனம் மைசூர் ராஜ்யத்திலே காணப்பெறுவது எங்ஙனம் ?

திருக்கோவலூர்த் தாலூகாவிலே வீரசோழபுரம் என்னும் இடத்திலிருந்து தஞ்சை கோட்ட கோப்பரகேசரி வர்மருடைய மூன்றும் ஆண்டு கொண்ட ஒரு வீரக்கல் கிடைத்திருக்கிறது. (1936-ஆம் ஆண்டு 31 நெ. சாசனம்). சாசனத்திலே வரும் தஞ்சை கோட்ட என்பதைத் தஞ்சை கோண்ட என்பதாகக் கொண்டு, தஞ்சையைக் கைப்பற்றிய பரகேசரி வர்மனுடைய மூன்றும் ஆண்டுக் கல்வெட்டென அதைக் கொள்வர். அவ்விதம் கருதக்கூடியவன் விஜயாலயனே ஆவன். சாசனம் பொறிக்கப்பட்டுள்ள எழுத்தின் வரிவடிவமும் அதற்கு ஒத்ததாகவே இருப்பதாகவும் கருதப்படுகிறது. இதிலிருந்து விஜயாலயன் தஞ்சையைக் கைப்பற்றியே தன் அரசை அவ்விடம் நிறுவினன் எனவும் கொள்வர். ஆனல் கோண்ட என்னும் சொல் கோட்ட என்ற உருவத்தில் எங்கும் வழங்கியதில்லை. அன்றி, 'கொட்ட' என்னும் சொல் 'கொண்ட' என்னும் பொருளில் வழங்கியதும் இல்லை. அதனல் அவ்விதம் திருத்துவது பொருந்தாது. சாசனத்தில் காணும் கொட்ட என்ற சொல் கோட்டம் அல்லது கோட்டை என்பதாகவே இருத்தல் வேண்டும். கோட்டை என்னும் சொல் அப்பொழுது பெரு வழக்கில் வரவில்லை. தவிர, சாசனத்திலே ஐகாரவிகுதியில்லாமல் 'கொட்ட' என்றே இருப்பதால் இச்சொல் கோட்டம் என்பதையே குறிப்பதாகும். கோட்டம் என்னும் சொல் அந்நாளிலேயே வழக்கில் இருந்திருக்கிறது. இது மேலே நாம் குறிப்பிட்ட திருச்சானூர்க் கல்வெட்டில் திருவேங்கடக் கோட்டத்தின் பெயர் காணப்படுவதிலிருந்து நன்கு விளங்கும். அதனல், சாசனத்தில் கண்ட அரசன் பெயர் தஞ்சைக் கோட்டத்துப் பரகேசரி வர்மன் என்றே ஆகும்.

விஜயாலயன் தஞ்சாவூரை முத்தரையரிடமிருந்து கைப்பற்றி அந்த இடத்திலே தன்னுடைய அரசை நிறுவினன் என்று பொதுவாகக் கொள்ளப்பட்டுள்ளது. அவ்விதமாயின், முத்தரையர் தங்கள் அரசுரிமையை இழந்திருக்க வேண்டும். ஆனல் அவர்கள் இழந்துவிட்டதாகத் தெரியவில்லை. சரித்தர அரங்கிலிருந்து அவர்கள் மறைந்து விடவும் இல்லை. அதற்குப் பிறகு நீண்ட காலம் வரை அவர்கள் அந்தப் பகுதியிலே

முக்கிய புருஷர்களாகத்தான் விளங்கியிருக்கிறார்கள். நாட்டின் அரசியலிலும் அவர்கள் ஈடுபட்டிருந்தார்கள். அவர்களைப் போலவே பக்கத்தில் கொடும்பாளூரில் வேளிர்குல அரச பரம்பரை வேறு ஒன்று இருந்திருக்கிறது. அவர்கள் அந் நாளிலே பலம் பொருந்தியவர்களாகத் திகழ்ந்திருக்கிறார்கள். தில்லைஸ்தானம் கல்வெட்டில் காணும் உலகப்பெருமாளுக்கும் திருச்சானூர்க் கல்வெட்டில் காணும் உலகப் பெருமானுருக்கும் உறவு முறை இருந்திருக்குமாயின், (அவ்விரண்டு சாசனங்களுக்கும் உள்ள இடைவெளி சுமார் நாற்பத்தைந்து ஆண்டுகள் இருப்பதையும் அவர்களுடைய பெயரையும் கொண்டு பாட்டனும் பெயரனுமாகக் கருதலாம்) சோழ வமிசத்தின் மற்றொரு கிளையினரும் அந்தப் பகுதியில் இருந்து வந்தார்கள் என்று எண்ணலாம்.

மற்றொரு விஷயத்தையும் நாம் நினைவு கூரவேண்டும். சோழ நாட்டின் காவிரிக்கரைப் பிரதேசம் அந்நாளிலே ஒரு போர்க்களமாக விளங்கியிருக்கிறது. இந்நிலை கி. பி. ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாதாபிச் சாளுக்கிய மன்னனை முதலாம் விக்கிரமாதித்தியன் பல்லவர்மீது படையெடுத்து வந்து (கும்பகோணத்துக்குப் பக்கத்திலே திருநாகேச்வரம் என்று வழங்கப்பெறும் பாம்பூராகிய) உரகபுரத்தில் பாடி இறங்கி இருந்தகாலம் முதலே ஏற்பட்டுவிட்டது. பழையாறை, குடமூக்கு (கும்பகோணம்) திருப்புறம்பயம், இடவை, நியமம் எனப் பல்வேறு இடங்களில் போர் அடிக்கடி நிகழ்ந்திருக்கின்றன. சில இடங்களிலே ஒன்றுக்கு மேற்பட்ட தடவைகளிலும் நிகழ்ந்திருக்கின்றன. இதைக் கவனிக்கும் போது, அந்தப் பகுதி எதிரி மன்னர்களால் அடிக்கடி தாக்குண்டு போர் நேரக்கூடிய எல்லைப்புறப் பிரதேசமாக இருந்து வந்ததென்பது தெளிவாகும். தந்திவர்மனுடைய ஆட்சியின் பிற்பகுதியிலே அவனுடைய சாசனம் ஏதும் சோழ நாட்டில் கிடைக்கவில்லை. அப்போது பாண்டியர்கள் அதைக் கைப்பற்றி ஆண்டு வந்திருக்கிறார்கள். ஆதலின் பல்லவர்கள், அவ்விதம் மேலும் அடிக்கடி நேராமல் அந்த இடத்தைக் கவனித்துப் பாதுகாக்க விரும்பியிருத்தல் இயற்கையே. இது கைகூடுவதற்குத் தங்களுக்கு நம்பிக்கை வாய்ந்த ஒருவன் அந்த இடத்திலே இருக்க வேண்டியது அவசியம். விஜயாலயனே அவனுடைய தோள்வலிமையாலும், பழைய சோழ பரம்

பரையைச் சேர்ந்தவனுதலாலும் இத்தகைய தகுதியும் நம்பிக் கையும் வாய்ந்தவனுகக் கருதப்பட்டான் போலும். பல்லவ மன்னன் அவனைத் தேர்ந்தெடுத்து, சோழ நாட்டில் அப் போது இருந்து வந்த குறுநில மன்னர்களை ஏதும் செய்யாமல் அப்படியே வைத்து விட்டு, அவர்களுக்கு மேலாக ராஜப் பிரதிநிதிபோன்ற ஒரு நிலையில் நியமித்திருத்தல்கூடும். அந்தப் பதவியை அடைவதற்குமுன் அவன் அதேபோன்ற ஒரு பதவியில் மைசூர் ராஜ்யப் பிரதேசத்தில் இருந்திருக்கவும் கூடும். இவ்விதம்தான் நாம் அவனுடைய கூடலூர்க் கல்வெட் டுக்கான காரணம் காட்ட முடியும். திருவாலங்காட்டுச் செப்பேடுகளிலே விஜயாலயன் தஞ்சையை அடைந்தான் என்று பொதுவாகக் கூறப்பட்டிருப்பதும் இதனையே வலி யுறுத்தும். இவ்விதம் விஜயாலயன் சோழ நாட்டு அரசு ரிமையை அடைந்தது, மூன்றும் நந்திவர்மன் ஆட்சிக் காலத் தின் இறுதியில், அரிசிலாற்றங்கரையில் நடந்த சண்டைக்குப் பிறகு, அதாவது சுமார் கி. பி. 860-க்குப் பிறகு, நேர்ந்திருத் தல் வேண்டும். நிருபதுங்கனுடைய ஆட்சியின் ஆரம்பகாலத் தில் நிகழ்ந்ததாகவும் கொள்ளலாம்.

விஜயாலயன் அந்தப் பதவியை நீண்ட காலம் ஆண்டனு பவித்ததாகத் தெரியவில்லை. அவனுடைய ஆட்சியைக் குறிப் பதாக நான்காம் ஆண்டுக் கல்வெட்டுக்கு மேல் நமக்குத் தெரியவில்லை. அவன் மகன் ஆதித்திய சோழனும் கி. பி. 870-1-ல் பட்ட மெய்தியிருக்கிறன். ஆகவே அவனுடைய ஆட்சி பத்து வருஷத்துக்குமேல் இருந்திருக்க முடியாது.

**ஆதித்திய சோழன்**

அவனுடைய ஆட்சியின் தொடக்கத்தையும் இவனுக்கும் பல்லவர்களுக்கும் இருந்த தொடர்பையும் பற்றி மேலே பல்லவர்களுடைய சரித்திர நிகழ்ச்சிகளைக் கவனிக்கும் போது கூறியிருக்கிறேம். அவனுடைய கடைசிக் காலத்தில் ஒரு பத்து வருஷம் சோழ நாடு அவன் கையை விட்டு நழுவியது. பாண்டியர்களும் பல்லவர்களும் சேர்ந்து கொண்டு அவனுக்கு விரோதமாக இருந்தார்கள். அந்தச் சச்சரவில் ராஷ்டிரகூட மன்னனும் ஓர் அளவு ஈடுபட்டான் என்று தெரிகிறது. அந் நாளில் ராஷ்டிரகூட அரசனுக இருந்தவன் இரண்டாம் கிருஷ்ணன் ஆவான்.

குணபத்ராசாரியார் என்னும் ஜைன முனிவர் எழுதிய உத்தரபுராணம் என்னும் ஜைனமதக் கிரந்தம் சகாப்தம் 830, அதாவது கி. பி. 908-9-ஆம் ஆண்டு பூர்த்தி அடைந்தது. அதிலே கடைசியில் அவர் தம்மைப் போற்றிய அரசனை ராஷ்டிரகூட இரண்டாம் கிருஷ்ணனைப் பற்றிப் புகழ்ந்து கூறும் இடத்தில் அவனுடைய போர் யானைகள் கங்கையில் நீராடிக் குமரி வனத்தில் சந்தன மர நிழலில் தங்கி இளைப் பாறின என்று கூறுகிறார் (உத்தரபுராணம், மைசூர்ப் பதிப்பு, மூன்றும் பாகம், பக்கங்கள் 877-8).

இது வெறும் புகழ் அல்ல. கி. பி. 907-இல் கன்னோசி நாட்டுக் கூர்ஜரப் பிரதிஹார மன்னனான மஹேந்திர பாலன் இறந்ததும் அவன் மகன் போஜனைச் சிங்காதனத்தில் நிறுவக் கிருஷ்ணன் கங்கை-யமுனைப் பிராந்தியத்தின்மீது படையெடுத்துச் சென்றான் என்பதை முன்னரே கண்டோம். ஆதலால், அவனுடைய போர் யானைகள் கங்கையில் நீராடின என்று குணபத்ராசாரியார் கூறியிருப்பது புனைந்துரை அல்லவென்பது தெளிவாகும். அதேபோல, அவனுடைய யானைகள் கன்யா குமரியின் சந்தனக் காடுகளில் இளைப்பாறின எனக் கூறப்படுவதும் உண்மையானதாகவே இருத்தல் வேண்டும்.

வீரராஜேந்திர சோழனுடைய கன்யா குமரிக் கல்வெட்டில் பராந்தகன், வெற்றிகொள்ள முடியாதவன் என்று புகழ் பெற்ற கிருஷ்ணராஜனை வென்று வீரசோழன் என்னும் பட்டத்தை அடைந்தான் என்று காணப்படுகிறது. (திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் ஸீரீஸ், வால்யூம் III, சுலோகம் 58). இந் நிகழ்ச்சி அவன் மதுரை கொண்டதைத் தெரிவிக்கும் சுலோகத்துக்கு அடுத்தபடியாக உள்ளது. சோளங்கிபுரத்திலிருந்து கிடைக்கும் பராந்தகனுடைய ஒன்பதாம் ஆண்டுக் கல்வெட்டில் அவனுக்கு வீரசோழன் என்ற விருது காணப்படுகிறது. இன்னும், அதன் இறுதியில் உள்ள ஒரு தமிழ்ச் செய்யுள் மூலம் அம் மன்னனுடைய சிற்றரசனான கங்க பிரிதிவீபதிக்கும் அந்த விருது ஏற்றிக் கூறப்பட்டுள்ளது. பராந்தகனே அந்த விருதைப் பிரிதிவீபதிக்கு அளித்திருத்தல் வேண்டும். (எபி. இந்தி., வால்யூம் IV, பக்கம் 124). இதனால் பராந்தகன்

தன்னுடைய ஆட்சியின் ஆரம்ப காலத்திலேயே கிருஷ்ண ராஜனுடன் போரிட்டிருக்க வேண்டும். இந்தக் கிருஷ்ணன் ராஷ்டிரகூட மன்னனை இரண்டாம் கிருஷ்ணனாகவே இருத்தல் முடியும். உத்தர புராணத்தில் குறிக்கப்பட்டுள்ள சம்பவமும் கன்யாகுமரிக் கல்வெட்டில் குறிக்கப்பட்டதும் ஒன்றாக இருக்குமானால், பராந்தகன் சிங்காதனம் ஏறிய சமயத்திலே கிருஷ்ணனுடன் அவன் சமர்புரிந்திருக்க வேண்டும்.

தந்தையும் மகனுமான ஆதித்தியன், பராந்தகன் ஆகிய இருவரும் இலங்கை வெற்றிகொண்டது, சிற்றம்பலத்துக்குப் பொன் வேய்ந்தது ஆகிய இரண்டையும் தங்கள் புகழாகக் கொண்டிருந்தனர் என்பதை நாம் மேலே கவனித்தோம். ஆதித்திய சோழனுடைய கடைசிக் காலத்தில் சில ஆண்டுகளாவது தந்தையும் மகனும் சேர்ந்து ஆட்சி நடத்தியிருக்கலாமோ என்றும் தோன்றுகிறது. ஆதித்தியன் அப்போது மிகவும் வயதானவனாக இருக்கவேண்டும். ஏனெனில், அந்நாளிலேயே அவன் மகனான பராந்தகனுக்கு வயது வந்த பிள்ளைகள் இருந்தனர் என்று தெரிகிறது.

திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் திருச்செந்துறையிலிருந்து கிடைக்கும் பரகேசரி வர்மனுடைய மூன்றாம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று அவ்வூரில் அரிகுல கேசரி தேவியார், தென்னவன் இளங்கோ வேளார் மகளார், பூதி ஆதிச்ச பிடாரியார் தான் சந்திரசேகரருக்கு எழுப்பிய கற்கோயிலுக்குப் பொன் அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. இந்தப் பரகேசரி வர்மன் முதற் பராந்தகனாகவே இருத்தல்வேண்டும். (தெ. இ. சாசனங்கள், மூன்றாம் வால்யூம், நெ. 96). அரிகுலகேசரி என்பான் பராந்தகனுடைய மூத்த மகன் அல்ல வென்பதை எண்ணும்போது, பராந்தகனுமே அப்போது வயது சென்றவனாக இருக்கவேண்டும் என்பது புலனாகும். அதனால் அந்நாளிலே ஆதித்தியன் பெயரளவில் அரசனாக இருந்தாலும், பராந்தகனே ராஜ்யபாரத்தைத் தாங்கி வந்தான் போலும்.

தந்தையின் ஆட்சியில் தங்களுக்கு ஏற்பட்ட சிறுமையைப் போக்கிப் பழைய நிலையை அடைவதற்கு அவன் பெரிதும் முயன்றிருத்தல் இயற்கையே. அது கைகூடுவதற்கு அவன் முதலில், சோழ நாட்டில் புகுந்து அதைக் கைப்பற்றி

ஆண்டு வந்த பாண்டியர்களை விரட்டியடித்து நாட்டைப் பழையபடி தான் அடையவேண்டுவது அவசியம். பல்லவ நிருபதுங்க வர்மன் அப்போது இறந்துபோய் விட்டான் போலும். அவன் தாயாதியும் பல்லவ அரசசைக் கவர்ந்தவனு மான அபராஜிதன் காஞ்சீபுரத்திலிருந்து தொண்டை நாட்டுப் பகுதியை மட்டுமே ஆண்டு வந்தான். அதுகாறும் பல்லவர் களின் கீழ்ச் சிற்றரசர்களாக விளங்கிய வாணர்கள் பேரரசை உதறியெறிந்து தங்கள் சுதந்தரத்தை நிலைநாட்டிக்கொண்ட னர். இது, அவர்கள் பேரரசன் பெயரைக் குறிக்கமால், தங் கள் பெயரிலேயே சகாப்தம் 810 முதல் 832 வரையில் (கி. பி. 888 முதல் கி. பி. 910 வரையில்) சாசனங்களை அளித்து வந்த திலிருந்து வெளிப்படை.

இன்னும், ஆதித்திய சோழன் ராஷ்டிரகூட ராஜகுமாரி யான இளங்கோப் பிச்சி என்பவளை மணந்திருந்தானென் றும் அவளே அவனுடைய பட்டமகிஷி என்றும் தெரிகிறது. திருமழுவாடியில் கிடைக்கும் ராஜகேசரி வர்மனுடைய இருபத் தோராம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று, "சோழப் பெருமா னார்க்கு முன்னம் புகுந்த மூத்த தேவியார் இளங்கோந் பிச்சி திருமழுவாடிப் பெருமானடிகளுக்கு" நொந்த விளக்கு வைக்கப் பொன் அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. (தெ. இ. சாசனங்கள், வால்யூம் XIII, நெ. 323) அதிலே பின்னல், "இவ்வைப்பில் வல்லவரையர் மகளார் இளங்கோப் பிச்சி வைத்த விளக்கு" என்பதும் காணப்படுகிறது. (எபி. இந்தி., வால்யூம் XXVI, பக்கம் 233). அவளுக்குக் கன்னர தேவன் என்னும் மகன் ஒருவன் இருந்தான் என்றும் தெரிகிறது. இது தில்லைஸ்தானத்திலிருந்து கிடைக்கும் ராஜகேசரி வர்மனு டைய எட்டாம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று, சோழப்பெருமா னடிகள் மகனர் ஆதித்தன் கன்னரதேவன் நொந்தா விளக்கு விளக்கு எரிக்கப் பொன் கொடுத்த செய்தியைத் தெரிவிப்பதி லிருந்து விளங்கும். (தெ. இ. சாசனங்கள், வால்யூம் V, நெ. 595). இவற்றை நோக்கும்போது ஆதித்திய சோழன் ராஷ்டிரகூட மன்னன் இரண்டாம் கிருஷ்ணனுடைய மகள் இளங்கோப் பிச்சியை மணந்திருந்தானென்பதும் அவர்களுக்குப் பிறந்த பிள்ளையான கன்னர தேவன் தன் தாய் வழிப்பாட்டன் பெய ரையே கொண்டிருந்தான் என்பதும் தெரியவரும். ஆனல், ஆதித்தியனுக்குப் பிறகு மூத்த தேவியின் மகனை கன்னர தேவன் பட்டத்துக்கு வரவில்லை. வேறு ஒரு தேவியிடம் பிறந்

தவன் என்று கருதக்கூடிய பராந்தகனே சிங்காதனம் ஏறி யிருக்கிறான். இதுவே ராஷ்டிரகூட கிருஷ்ணனுக்கும் பராந்த கனுக்கும் விரோதத்தை உண்டாக்கியிருக்கலாம். அவர்கள் போர்க்களத்தில் மோதிக்கொள்வதற்கு வேறு பல காரணங் களோடு இதுவும் முக்கியமானதாக இருந்திருக்கவேண்டும். (எபி. இந்தி., வால்யூம் XXVI, பக்கம் 234).

அப்போது விவகாரம் எந்தவகையில் உருவாகி எவ்விதம் சென்று எப்படி முடிந்ததென்பதை நாம் நிச்சயமாகக் கூறு வதற்கு வேண்டிய ஆதாரங்கள் கிடைக்கவில்லை. ஆயினும் நாம் மேலே எடுத்துக்காட்டியதும் மைசூர் ராஜ்யத்தில் இசா முத்திரம் என்னும் இடத்திலிருந்து கிடைப்பதுமான மூன்றும் அமோக வருஷனுடைய காலத்துக் கன்னடக் கல்வெட்டி லிருந்து திருப்புறம்பயத்தில் மீண்டும் ஒரு முறை போர் நிகழ்ந் திருத்தல் வேண்டும் என்றும் அதிலே பல்லவ அரசன் ஒருவன் உயிர் துறந்தான் என்றும் எண்ண வேண்டியிருக்கிறது. இந்தப் போர் நடந்த திருப்புறம்பயத்திலே இன்றைக்கும் கச்சியாண்டவன் கோயில் என்ற பெயருடன் நடுகற் கோயில் ஒன்று இருக்கிறது (தி. வை. சதாசிவ பண்டாரத்தார் எழுதிய பிற்காலச் சோழர் சரித்திரம், முதல் பாகம், பக்கங்கள் 22-3). பல்லவ மன்னன் போரில் உயிர் துறந்த இடத்திலே எழுப்பப் பட்டது போலும் அக்கோயில். அவ்விடம் நடந்த முதற் போரிலே பல்லவ நிருபதுங்கன் இறக்கவில்லை யென்பதை யும் நாம் மேலே கண்டோம். தொண்டை நாட்டைத் தன் ராஜ்யத்தோடு சேர்த்துக் கொள்வதற்கு முன்னர், ஆதித்திய சோழன் ஒரு பல்லவ அரசனைக் கொன்றான் என்பதும் மேலே குறிக்கப்பட்டது. இவற்றால் திருப்புறம்பயத்திலே இரண்டாம் முறையும் ஒரு போர் நடந்ததென்றும் பல்லவ அபராஜிதன் அந்தப் போரில் உயிர் துறந்தான் என்றும் எண்ணுதல் கூடும்.

ஆதித்திய சோழன் முதலில் நிருபதுங்கனுக்கு எதிராக அபராஜிதனுக்கு உதவி செய்து நாட்டை அவனுக்கு அளித் தது உண்மையே. ஆனால் அவன் பிற்காலத்தில் பல்லவனுக்கு நண்பன் என்ற முறையில் மட்டும் விளங்கவில்லை. தொண்டை நாடு பாவின என்ற விருதைத் தரித்துக்கொண்டான். திருக் கழுக்குன்றத்திலிருந்து கிடைக்கும் ராஜகேசரி வர்மனுடைய இருபத்து நான்காம் ஆண்டு கொண்ட ஒரு கல்வெட்டு (எபி.

இந்தி., வால்யூம் III, பக்கம் 279) முக்கியமானது. அவ்வரசன் ஆதித்தியனே ஆவான். பூர்வத்தில் ஸ்கந்த சிஷ்யன் என்னும் பல்லவ அரசனால் அளிக்கப்பெற்றுப் பின்னால் வாதாபி கொண்ட நரசிங்க போத்தரையரால் ஊர்ஜிதம் செய்யப் பெற்ற ஒரு தானத்தைப் புதுப்பித்து ராஜகேசரி வர்மன் கோயிலுக்கு நிலம் அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. இதன் வாசகம் வெற்றி கொண்ட ஓர் அரசன் தான் வெற்றி கொண்ட நாட்டுப் பழைய தானதர்மங்களைப் புதிப்பிக்கும் நிலையில் உள்ளதாகக் காண்கிறதேயன்றி, அந்நாட்டை ஆளும் அரசனுடைய நண்பன் என்ற நிலையில் ஆதித்தியனைக் காட்டவில்லை. இன்னும் இதே போல வேறு சாசனங்களும் உள்ளன. இவற்றிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக ஆதித்த னுடைய கை மேலோங்கி வருவதைக் காண்கிறோம். அபராஜி தன் அதைப் பொறுத்திருப்பானோ? அவர்களுக்குள் மன வேற்றுமை ஏற்படுவது சகஜமே. அதனாலேயே அவர்களுக் குள் விரோதம் முற்றியது போலும். பின்னால் ஆதித்தியன் சோழ நாட்டை இழந்தபோதும் அபராஜிதன் தன் நண்ப னுக்கு உதவியாக இருக்கவில்லை.

ராஷ்டிரகூட கிருஷ்ணன் தமிழ் நாட்டு விவகாரங்களில் சிரத்தை கொண்டு தலையிட்டதற்குக் காரணம் அவன் தன்னை அண்டிய பல்லவனுக்கும் பாண்டியனுக்கும் உதவுவதென் பதாக மட்டும் இருந்திராது. தன்னுடைய பெயரனான ஆதித் தன் கன்னர தேவனுக்கு உதவி அவனைச் சோழ சிங்கா தனத்தில் அமர்த்த வேண்டுமென்ற நோக்கமும் இருந் திருக்கலாம்.

### பராந்தகன்

இம்மன்னன் ஆட்சி பெரும் வெற்றியுடன் தொடங்கியது. அவன் புகழும் பரவியது. வெகு சீக்கிரம் அவன் பக்கத்து அரசுகளையும் வெற்றி கொண்டு தமிழ்நாடு முழுவதையும் தன் ஆட்சியின்கீழ்க் கொணர்ந்து விட்டான். ஆனால் அதை நீண்ட காலம் அவனால் காப்பாற்ற முடியவில்லை. பல்லவர் களோ தொண்டை நாடு மட்டுமல்லாமல் சோழ நாட்டையும் ஓர் அளவு பாண்டிய மண்டலத்தையும் தலைமுறை தலைமுறை யாக ஆண்டு வந்திருக்கிறார்கள். ஏழு நூற்றாண்டுகளுக்கு மேல் அந்நாட்டை அரசு புரிந்து வந்த அவர்கள் அவ்வளவு

சுலபமாக, அதுவும் அதுகாறும் தங்களுக்குக் கீழ்ச் சிற்றரசுப் பதவி வகித்து வந்த சோழர்களிடம், அடங்கி அரசுரிமையைக் கை விட்டு ஒதுங்கி விடுவார் என்று நினைப்பது பொருந்தாது. தங்களால் இயன்றவரையில் அவர்கள் போரிட்டே பார்ப்பர். அதற்குரிய செல்வாக்கும் ஓர் அளவு அவர்களுக்கு இல்லாமல் போகாது. அதே போலப் பாண்டியர்களும் தென்னாட்டிலே ஆதிக்கியம் மிகுந்திருந்தார்கள். அதனால்பராந்தகன் பல்லவ பாண்டியர்களோடும், ஈழத்து மன்னனோடும் ஓயாது போரிட்டு வரவேண்டி நேர்ந்தது.

அவனுடைய ஆட்சியின் பிற்பகுதியிலே ராஷ்டிரகூடர்களுடைய விரோதமும் சேர்ந்து கொண்டது. அவர்களையும் அவன் எதிர்த்து நிற்க வேண்டியதாயிற்று. அந்நாளிலே ராஷ்டிரகூட அரசனாக விளங்கியவன் மூன்றாம் கிருஷ்ணன். தக்கோலத்தில் அவன் போரிட்டுச் சோழ ராஜாதித்தியனைக் கொன்ற ஆண்டான கி. பி. 949 முதலாகத்தான் அவனுடன் பராந்தக சோழன் சண்டையிட நேர்ந்தது என்று பொதுவாகக் கொள்ளப்படுகிறது. ஆயினும் அந்தச் சண்டை அதற்கும் முன்னதாகவே ஆரம்பமாயிற்று என்னலாம்.

கச்சியும் தஞ்சையும் கொண்ட விருதுடன் காணப்படும் கன்னரதேவனுடைய ஐந்தாம் ஆண்டு (கி. பி. 944-5) கல்வெட்டு ஒன்று தென் ஆர்க்காடு ஜில்லா சித்தலிங்க மடம் என்னும் கிராமத்திலிருந்து கிடைக்கிறது (1909-ஆம் ஆண்டு 375 நெ. சாசனம்). அதை உண்மையானதன்று எனவும் போலி என்றும் சிலர் கருதுவர். அவ்வூரில் உள்ள வியாக்கிரபாதேச்வரர் ஆலயத்தை முதற் குலோத்துங்க சோழன் ஆட்சியில் புதுப்பித்த காலத்தில் பழைய கோயிலின் சுவர்களிலிருந்த கல்வெட்டுக்களைப் புதுப்பித்த கோயில் சுவர்களில் எழுதியவற்றுள் அதுவும் ஒன்றாகும். கன்னரதேவன் ஆட்சிக்கும் குலோத்துங்கன் ஆட்சிக்கும் இடைப்பட்ட காலம் ஒன்றரை நூற்றாண்டுக்குமேல் இல்லை. சரியாக வாசிக்க முடியாதபடி எழுத்தில் வேறுபாடு ஏதும் அந்தச் சிறிது காலத்திற்குள் நேர்ந்து விடவில்லை. அதனால் பிரதி செய்தவர்கள் அதைச் சரியாக வாசிக்க முடியாமல் தவறு ஏதும் செய்து விடுவதற்கில்லை. தவிர, இவ்விதம் பிரதி செய்த சாசனங்களில் தவறு நேர்ந்திருப்பதாகக் காட்டக்கூடிய ஆதாரம் வேறு ஏதும் இதுவரையில் கிட்டியதில்லை.

அதைப் போலியெனக் கொள்ள வேண்டிய அவசியமே இல்லை. சமீபத்திலே அவனுடைய ஏழாம் ஆண்டுச் சாசனம் ஒன்று, அதே கச்சியும் தஞ்சையும் கொண்டவன் என்ற விருதுடன் செங்கற்பட்டு ஜில்லாவிலும் கிடைத்துள்ளது. இவற்றைத் தவிர, அவன் தஞ்சாவூரை வெற்றிக்கொண்டான் என்று தக்கோலம் சண்டைக்கு முன்னதாகவே வழங்கப் பட்ட சாசனம் ஒன்றும் தெரிவிக்கிறது.

மூன்றும் கிருஷ்ணன் கி. பி. 939-ஆம் ஆண்டு டிஸம்பர் மாதத்திலோ அடுத்த 940-ஆம் ஆண்டு முதலிலோ சிங்காதனம் ஏறியிருத்தல் வேண்டுமென நிச்சயித்திருக்கிறார்கள். அவனு டைய பட்டாபிஷேக சமயத்தை அடுத்து வழங்கப்பட்டது, அவனுடைய சகோதரி கணவனும் சிற்றரசனுமான மேலைக் கங்க அரசன் பூதுகனுடைய ஸாடி செப்பேட்டுச் சாசனம். பூதுகன் சோழனை ராஜாதித்தியனை வெற்றி கொண்ட பிறகு தஞ்சாவூர், நாழ்கோட்டை முதலிய பல கோட்டைகளைத் தாக்கி ஜயித்து, அவ்விடங்களில் கைப்பற்றிய யானை, குதிரை, பருமணிக்குவியல் ஆகியவற்றைத் தன் பேரரசன் கிருஷ்ணன் முன்னிலையில் சமர்ப்பித்தான் என்று அது கூறுகிறது. (எபி. இந்தி., வால்யூம் III, பக்கங்கள் 189-90). கி. பி. 949-ல் தக்கோலத்தில் நடந்த சண்டையில்தான் பூதுகன் யானைமேல் உள்ள அம்பாரியையே போர்க்களமாகக் கொண்டு ராஜாதித் தியனுடன் சமர்புரிந்து அவனைக்கொன்றது. அதற்கு நீண்ட காலம் முன்னதாக அளிக்கப்பட்டது ஸாடிச் செப்பேட்டுச் சாசனம். அதிலே அவன் ராஜாதித்தியனை வென்றதாகக் கூறிக்கொள்கிறானே யன்றி, ஆதகூர்க் கல்வெட்டில் (எபி. இந்தி., வால்யூம் IV பக்கங்கள் 50-7; அதன் திருத்தத்துக்கு ராயல் ஏஷ்யாடிக் ஸொஸைட்டி ஜர்னல், 1909, பக்கங்கள் 443-6) காண்பதைப் போலக் கொன்றதாகக் கூறிக்கொள்ளவில்லை. கிருஷ்ணனுடைய சாசனங்களிலும் அவன் சோழர்கள்மீது வெற்றி கொண்டான் என்ற செய்தி அவனுடைய ஆட்சியின் ஆரம்ப நாட்களிலிருந்தே காணப்படுகிறது. ஆகவே, ஸாடிச் செப்பேடுகளில் காணும் சோழ நாட்டுப் படை யெடுப்பு கிருஷ்ணன் யுவராஜனாக இருந்த காலத்திலேயே நடைபெற்றிருத்தல் வேண்டும்.

மதுரைகொண்ட கோப்பரகேசரி வர்மனான பராந்தகனு டைய ஆட்சியின் முப்பத்தொன்றாம் ஆண்டுகொண்ட இரண்டு

கல்வெட்டுகள் (எபி. இந்தி., வால்யூம் XXVI, நெ. 29). கிடைத்துள்ளன. சோழப்பெருமானடிகள் பராந்தக தேவர் திருமகளார், கோவிந்தவல்லவரையர் மாதேவியார் வீரமாதேவியார் திருவூறல் மாதேவர்க்கு விளக்குஎரிக்கப் பொன் அளித்தசெய்தியை அவை தெரிவிக்கின்றன. பராந்தகன் தன் மகள் வீரமாதேவி என்பவளைக் கோவிந்த வல்லவரையனுக்கு, ராஷ்டிரகூட மன்னனான நான்காம் கோவிந்தனுக்கு, மணம்செய்து கொடுத்திருந்தான் என்பது இந்தக் கல்வெட்டுகளிலிருந்து விளங்கும். கோவிந்தனுடைய சாசனங்கள் கி. பி. 918-ஆம் ஆண்டு முதலே கிடைக்கின்றன. ஆனால், அவன் தந்தையான மூன்றாம் இந்திரன் கி. பி. 927-ஆம் ஆண்டின் முடிவு வரையில் உயிருடன் இருந்திருக்கிறான். அதற்குச் சிறிது காலத்துக்குப் பிறகு இந்திரன் காலமானான்; அவனுடைய மற்றொரு பிள்ளையும், கோவிந்தனுக்கு மூத்தவனுமான இரண்டாம் அமோகவருஷன் ராஷ்டிரகூட சிங்காதனம் ஏறினான். ஆனால், அவன் அதிகநாள் ஆட்சி நடத்தவில்லை. கோவிந்தன் தன் அண்ணனைச் சிங்காதனத்திலிருந்து விரட்டியடித்துத் தானே அதைக் கைப்பற்றினான். இது கி.பி. 930-ஆம் ஆண்டு நடந்தது (காம்பே செப்பேடுகள், எபி. இந்தி., வால்யூம் III, பக்கம் 29).

கோவிந்தன் தன்னுடைய சாசனங்களில், தான் தன்னுடைய அண்ணனைக் கொடுமைப்படுத்தவில்லை என்று கூறிக்கொள்கிறான். இவ்விதம் அவன் தன்னுடைய சாசனங்களிலே கூறிக்கொள்வதற்கு, அந்நாளிலே இதுபோன்ற வதந்தி ஏதோ ஒன்று நாட்டில் பரவியிருந்திருக்க வேண்டுமென்பதே காரணம். அவன் தன் அண்ணனைக் கொடுமைப் படுத்தினானா, இல்லையாவென்பது வேறு விஷயம். உண்மையை அறிய முடியாது. ஆனால், அத்தகைய வதந்தி நாட்டில் பரவிவிட்டது. அவனுடைய பெருமையை அது நிச்சயம் பாதிக்கும். கோவிந்தனைப்பற்றி மற்றொரு விஷயமும் கூறப்படுகிறது. அவனுக்கு மங்கையரிடம் மோகம் அதிகமாம். அதனால் அவன் அநேகம் பெண்களுடன்கூடி இன்பம் அனுபவித்து வந்தானும் இவ் விஷயங்கள் அவனுக்கு நாட்டிலே அபகீர்த்தியை உண்டாக்கி மக்களை வேறுபடுத்தி யிருக்கும். இது இயற்கையே. குடிகள் அவனுக்கு விரோதமாகக் குமுறிக் கொண்டிருந்தார்களாம். அந்நிலையில்தான் கோவிந்தனுடைய சிற்றப்பனான மூன்றும்

அமோகவருஷன், நாட்டைக் காப்பாற்ற வேண்டுமென்ற மக்களுடைய வற்புறுத்தலின்மீது, தன்னுடைய தள்ளாத வயதில் அரசுப்பொறுப்பை ஏற்றான். இவ்விதம் கூறுகின்றன சாசனங்கள். அமோகவருஷன் அப்போது தன்னுடைய வேட்டகமான சேதி நாட்டுத் தலைநகர் திரிபுரியில் இருந்துவந்தான். கோவிந்தனிடமிருந்து ராஷ்டிரகூட அரசைக் கைப்பற்றுவதற்காக அவன் திரிபுரியிலிருந்து மான்ய கேடத்துக்கு வந்தான். அரசை அமோகவருஷன் கைப்பற்றிக்கொண்டான். அவன் கிழவன் ஆதலால் பெயரளவில்தான் அவன் அரசன். உண்மையில் ராஜ்ய பாரத்தை அவன் மகன் கன்னரதேவனான மூன்றாம் கிருஷ்ணனே நிர்வகித்து வந்தான். கோவிந்தனிடமிருந்து சிங்காதனத்தைக் கைப்பற்றியதே கிருஷ்ணனுடைய முயற்சி எனக்கொள்ளலாம். பட்டம் இழந்த கோவிந்தன் நாடு துறந்து தெற்கே ஓடிவந்து தன் மாமனாரான பராந்தக சோழனிடம் அடைக்கலம் புகுந்தான்.

பராந்தகன் இதைக் கண்டு சும்மா இருந்திருக்கமாட்டான். தன் மருமகனுக்கு உதவ நிச்சயம் முன்வந்திருப்பான். கோவிந்தன் முதலில் தன் அண்ணனை விரட்டிச் சிங்காதனத்தைப் பிடித்துக்கொண்டதே அவனுடைய மாமனாரின் உதவியைக் கொண்டல்லாமல் நடந்திருக்க முடியாது என்றும் கொள்ளலாம். எவ்விதமாயினும், இப்போது பராந்தகனுக்கும் மூன்றாம் கிருஷ்ணனுக்கும் விரோதம் மூண்டது நிச்சயம். பராந்தகன் தன் மருமகனை மீண்டும் ராஷ்டிரகூட சிங்காதனத்தில் அமர்த்த முயற்சி எடுத்திருக்கலாம். ஆயினும், அது கைகூடவில்லை. எந்த நிலையில் அது முறிந்ததென்பது நமக்கு நிச்சயமாகத் தெரியாது. ஆயினும், அது கைகூடாதவாறு முறியடித்ததில் மேலைக் கங்க அரசனான பூதுகன் முக்கிய புருஷனாக விளங்கினான் என்பது மட்டில் நிச்சயம்.

வட ஆர்க்காடு ஜில்லா கீழ்முத்துகூர் என்னும் இடத்திலிருந்து ஒரு நடுகற் சாசனம் கிடைத்திருக்கிறது. (எபி. இந்தி., வால்யூம் IV, பக்கங்கள் 178-9). பராந்தகனுடைய ஆட்சியின் இருபத்தொன்பதாம் ஆண்டு (கி. பி. 936) கொண்ட அது மேலைக் கங்க அரசனான பெருமானடிகள் நடத்திய மாடு பிடி சண்டையில் ஒரு வீரன் இறந்ததைக் குறிக்கிறது. இதிலிருந்து அப்போதே போர் துவங்கிவிட்டது விளங்கும். அதே சமயத்திலிருந்து இளவரசனான ராஜாதித்தியன் பெரும்

P

படையுடன் பெண்ணையாற்றங் கரையில் திருமுனைப்பாடி நாட்டில் தங்கி வந்திருக்கிறான். கேரள சேனாபதியான வெள்ளன் குமரன் அவனிடம் ஊழியம் பார்த்து வந்தான். இந்தச் சேனாபதிதான் ராஜாதித்தியன் தக்கோலத்துப் போரில் இறந்த பிறகு, மனம் வெறுப்புற்று உலகைத் துறந்து சதுரானன பண்டிதர் என்னும் பெயரால் சைவத் துறவியானவர். (எபி.இந்தி., வால்யூம் XXVII, நெ. 47). சோழ ராஜகுமாரன் அரிகுலகேசரியும் இந்தப் பகுதியிலே தன் அண்ணனுக்கு உதவியாக இருந்து வந்திருக்கிறான். ராஷ்டிரகூடர்களும் மேலைக் கங்கர்களும் தன் நாட்டின்மீது படையெடுத்து வரக் கூடும் என்பதை எதிர்ப்பார்த்தே பராந்தகன் இவ்விதம் முன்னேற்பாடாக இவைகளைச் செய்துவைத்தான் போலும். இவற்றைக் கவனிக்கும்போது ஸொடிச் செப்பேட்டுச் சாசனத்தில் கூறியபடி பூதுகன் முதலில் ராஜாதித்தியனை வெற்றி கொண்டதால் காஞ்சீபுரத்தையும், பின்னால் தஞ்சாவூரைத் தாக்கி அதனையும் கைப்பற்றி யிருத்தல்கூடும். இந்தப் படையெடுப்பின் பயனாகவே கன்னரதேவனான மூன்றாம் கிருஷ்ணன் கச்சியும் தஞ்சையும் கோண்டவன் என்ற விருதை அடைந்தான்போலும்.

மேலே கூறிய காரணங்களால் இனியும் சித்தலிங்க மடம் கல்வெட்டைப் போலியென்று கருதவேண்டிய அவசியம் இல்லாமல் போய் விடுகிறது. தன்னுடைய ஆட்சியின் ஐந்தாம் ஆண்டை ஒட்டிக் கிருஷ்ணன் சோழ நாட்டின்மீது படையெடுத்து வந்திருக்கவேண்டுமென்பது மற்றோர் ஆதாரத்தாலும் உறுதியாகிறது. ராஜகேசரி வர்மன் ஒருவனுடைய மூன்றாம் ஆண்டு கொண்ட ஒரு கல்வெட்டு கும்பகோணம் நாகேச்வர ஸ்வாமி ஆலயத்திலிருந்து கிடைத்துள்ளது. அது (தெ. இ. சாசனங்கள், வால்யூம் XIII, நெ. 46). மதிரை கொண்ட உடையார் முப்பத்தெட்டாம் ஆண்டில் (கி. பி. 944-5) பாண்டிப் படையாருக்குத் தாங்கள் அளித்த ஏதோ உதவிக்காகத் தண்டம் கொண்ட பொன் மூவாயிரக் கழஞ்சு செலுத்தவே போலும் அவ்வூர் மூல பரடைப் பெருமக்கள் தாங்கள் அரசனிடமிருந்து அபிஷேக தக்ஷிணையாகப்பெற்ற நிலத்தை விற்ற செய்தியைத் தெரிவிக்கிறது.

ராஷ்டிரகூட மன்னனான இந்திரன் காலத்திலே பல்லவரும் பாண்டியரும் சோழருக்கு விரோதமாகச் சேர்ந்திருந்

தார்கள் என்பதை மேலே நாம் காட்டியிருக்கிறோம். அதற்குப் பிறகு அதிகநாள் ஆகிவிடவில்லை. அப்போது அவர்களுக்கு உதவியாக இருந்த கிருஷ்ணனே இப்போது ராஷ்டிரகூட மன்னனாக இருந்து வந்தான். ஆகவே, இந்தக் காலத்திலும் பாண்டியர்கள் ராஷ்டிரகூடர்களது பக்கத்திலே அவர்களுக்கு உதவியாக இருந்தார்கள் என்று எண்ணுவது மிகையாகாது.

இவற்றால் தக்கோலம் சண்டை நடப்பதற்கு முன்னதாகவே கிருஷ்ணன் சோழ நாட்டின்மீது படையெடுத்துவந்து வெற்றிகொண்டதோடு மட்டுமல்லாமல் சோழர்களுடைய ஆட்சிக்குள் ளிருந்த பிரதேசத்தின் சில பகுதிகளையும் கைப்பற்றியிருந்தான் என்பது தெளிவாகும்.

அரிகுலகேசரி என்ற பெயர்கொண்டவனை அரிஞ்சயன் தன் தந்தை பராந்தகன், அண்ணன் ராஜாதித்தியன் ஆகிய இருவரும் உயிருடன் இருக்கும் காலத்திலேயே உயிர் துறந்தான் என்று தெரிகிறது. இதை நாம் பின்னால் விளக்குவோம். அவன் ஆற்றூர்த் துஞ்சின தேவர் என்று குறிக்கப்படுவதால் அவன் ஆற்றூர் என்னும் இடத்திலே காலமானான் என்பது வெளிப்படை. அவ் வாற்றூர் காளஹஸ்திக்குப் பக்கத்தில் உள்ளது. அதைக் கவனிக்கும்போது அந்தக் காலத்தில் கிருஷ்ணனோடு சோழர்கள் நடத்தியப் போர்களுள் ஒன்றிலே அவன் உயிர்துறந்தான் என்று நிச்சயிக்கலாம்.

### பராந்தகனுக்குப் பிறகு அரசு முறை

சகாப்தம் 871 (கி. பி. 849-50)-ஆம் ஆண்டு தக்கோலத்தில் நடந்த சண்டையில் மேலைக் கங்க அரசனான பூதுகனால் ராஜாதித்திய சோழன் கொல்லப்பட்டான். இது சோழர் சரித்திரத்திலே முக்கியமான கட்டங்களுள் ஒன்று. ராஜாதித்தியன் பட்டத்துக்கு உரிய இளவரசன்; தந்தையின் முதுமைப் பருவத்தில் அவனே ராஜ்ய நிர்வாகத்தை நடத்தி வந்தான். அவன் இறந்தது பராந்தகனுக்குமட்டுமன்றி, சோழ ராஜ்யத்துக்கே ஒரு பேரிடியாகும். இந்தச் சம்பவத்துக்குப் பிறகு ஓர் ஐந்துவருஷகாலம் பராந்தகன் ஜீவித்திருக்கிறான். இது சித்தூர் ஜில்லா புங்கனூர் தாலூகாவில் உள்ள வனமாலதின்னே என்னும் ஊரிலிருந்து கிடைத்த ஒரு கன்னட நடுகற்

சாசனம் 'மதுரகொண்டகோப்பரகேசரி நால்வத்தேண்டாகே' என்று அவனுடைய நாற்பத்தெட்டாம் ஆண்டு (கி. பி. 954-5) கொண்டிருப்பதிலிருந்து தெரியவரும். ராஷ்டிரகூடர்களைத் தன் ராஜ்யத்தின் வடபகுதியிலிருந்து வெளியேற்றப் பராந்தகன் எடுத்துக்கொண்ட முயற்சிகளுள் அது ஒன்றுபோலும். ஆயினும் அவனுடைய முயற்சி வெற்றிபெறவில்லை. அதற்கு மாறாக ராஷ்டிரகூட மன்னன் அந்தப் பகுதியை நிரந்தரமாகக் கைப்பற்றி ஆளத் தொடங்கினான். கன்னரதேவனுடைய ஆட்சியின் பதினைந்தாம் ஆண்டு முதல் அவன் ஆட்சியின் இறுதிவரையில், அதாவது இருபத்தெட்டாம் ஆண்டு வரையில் அவனுடைய சாசனங்கள் அங்கே கிடைக்கின்றன.

ராஜாதித்தியன் இறந்துபோன கி. பி. 949-க்கும் மதுராந்தக உத்தமசோழன் சிங்காதனம் ஏறிய கி. பி. 969-க்கும் இடைப்பட்ட இருபது வருஷகாலம் சோழ சரித்திரத்திலேயே மிகவும் சிக்கலான பகுதிகளுள் ஒன்று. லீடன் பட்டயத்தில் காணப்படுவதைக்கொண்டு பராந்தகனுக்குப் பிறகு ராஜாதித்தியன், கண்டராதித்தியன், அரிஞ்சயன், இரண்டாம் பராந்தகனான சுந்தரசோழன், இரண்டாம் ஆதித்தியனான கரிகாலன், மதுராந்தகன் என்ற முறையில் சோழசிங்காதனம் ஏறினார்கள் என்பதாகக் கொள்ளப்பட்டுள்ளது. அந்த அடிப்படையிலேயே அவர்களுடைய ஆட்சிக்காலமும் நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது. இந்த விஷயத்திலே ஆராய்ச்சியாளர்கள் பற்பலவிதமாகக் கருதிவந்திருக்கிறார்கள். அவைகளையெல்லாம் இவ்விடம் எடுத்துக்காட்டி ஆராய்வது அதிகம் இடம்கொள்ளும். ஏற்கெனவே, ஆசிரியர்களிடையே காணும் கருத்து வேற்றுமைகளோடு புதிதாக நானும் ஒன்று அதிகமாக்க விரும்பவில்லை. ஆயினும் நிலைமையை நன்கு ஆராய்ந்தால் இதுகாறும் மற்றவர்கள் கொண்டுள்ள கருத்துகளுக்கு முற்றிலும் மாறாகவே நிலைமை காணப்படுகிறது.

பெயர் தெரிவிக்காமல் ராஜகேசரி வர்மன் என்றோ பரகேசரி வர்மன் என்றோ பொதுப்படக் கூறும் சாசனங்களிலே ஒரு பகுதி நிச்சயமாக இந்த இடைக்காலத்தைச் சார்ந்தனவாகும். இவை தவிர, அரசன் பெயரைத் தெளிவாகக் கூறும் சாசனங்களும் உள்ளன.

மதுரை கொண்ட ராஜகேசரிவர்மனுடைய சாசனங்கள் பதினொன்று கிடைத்துள்ளன. அவை அவன் ஆட்சியின் ஐந்தாம் ஆண்டுக்கும் பதினேழாம் ஆண்டுக்கும் இடைப்பட்டவை. சுந்தர சோழனுடைய கல்வெட்டுகள் நான்கு உள்ளன. அவற்றுள், அவன் மதுராந்தகன் என்றும் பாண்டியனைச் சுரம் இறக்கினவன் என்றும் குறிக்கப்படுகிறான். அவற்றுள் ஒன்று அவனுடைய ஐந்தாம் ஆண்டும் மற்றொன்று ஏழாம் ஆண்டும் கொண்டவை. மற்றுமுள்ள இரண்டின் காலம் கிடைக்கவில்லை. பாண்டியன் தலைகொண்ட அல்லது வீரபாண்டியன் தலைகொண்ட என்னும் விருதுடன் காணப்படும் பரகேசரிவர்மன் ஒருவனுடைய சாசனங்கள் அவனுடைய ஆட்சியின் இரண்டாம் ஆண்டு முதல் ஐந்தாம் ஆண்டுவரையில் கிடைத்துள்ளன. இன்னும், அதேபோலப் பாண்டியன் தலைகொண்ட அல்லது வீரபாண்டியன் தலைகொண்ட என்ற விருதுடன் கூடிய பார்த்திவேந்திரவர்மன் என்பவனுடைய சாசனங்களும் கிடைக்கின்றன. அவன் பெயர் சாசனங்களிலே பார்த்திவேந்திராதிபதிவர்மன் என்பதுபோலப் பல வேறு உருவங்களில் கானப்படுகிறது. அவன் சாசனங்கள் பதினைந்தாம் ஆண்டு வரையில் உள்ளன. பெருநற்கிள்ளி என்னும் பெயரைக்கொண்டிருந்த ராஜகேசரிவர்மன் ஒருவனுடைய சாசனங்கள் இரண்டு கிடைத்துள்ளன. இரண்டும் அவன் ஆட்சியின் இரண்டாம் ஆண்டைச் சேர்ந்தவை. கடைசியாக, மும்முடிசோழ கண்டராதித்திய தேவனுடைய இரண்டாம் ஆண்டு கொண்ட கல்வெட்டு ஒன்றும் இருக்கிறது.

ஒன்றுமட்டில் நிச்சயம். இந்தச் சாசனங்களிலே காணப்படும் அரசர்கள் அனைவரும் ஒருவருக்குப்பின் ஒருவராகச் சோழ சிங்காதனம் ஏறி ஆண்டிருக்க முடியாது. ஏனெனில், அந்த அரசர்களுடைய அதிகப்பட்சமான ஆண்டுகளைக் கூட்டி வந்த தொகையே உள்ள இடைவெளியைக் காட்டிலும் மும்மடங்கு அதிகமானது. சாசனங்களிலே அவர்களுக்குக் காணும் அதிகப்பட்சமான ஆண்டுகளைவிட அவர்கள் அதிகமாகவும் ஆண்டிருத்தல் கூடும்.

இவ்விஷயத்தை ஆராயுங்கால் நாம் மற்றொன்றையும் நினைவில் இருத்திக்கொள்ளுதல் அவசியம். ராஷ்டிரகூட அரசனான கன்னரதேவன் எனப்படும் மூன்றாம் கிருஷ்

ணன் தமிழ் நாட்டின் ஒரு பகுதியைக் கைக்கொண்டு அரசு புரிந்திருக்கிறன். தென்னார்க்காடு ஜில்லாவில் பாயும் பெண்ணையாற்றின் வடக்கில் உள்ள பிரதேசம் அவன் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. அதனால் அந்தப் பகுதியில் காணும் சோழ மன்னர் ஆகியோருடைய கல்வெட்டுக்களைக் கொண்டு அவர்கள் அவ்விடத்திலே தனியரசு செலுத்தினர் கள் என்று கொள்ளமுடியாது. அம்மன்னர்கள் ராஷ்டிர கூடர்களுக்கு அடங்கியவர்களாகவோ சிற்றரசர்களாகவோ அவர்களுடைய ஆதரவைப் பெற்றவர்களாக இருத்தல் வேண்டும்.

இடைக்காலத்தில் ஆண்டவர்களாகக் குறிக்கப்பெறும் சோழ மன்ர்களான கண்டராதித்தியன், அரிஞ்சயன், சுந்தர சோழன், ஆதித்திய கரிகாலன் ஆகிய நால்வருள் சுந்தர சோழன், என்பான் ராஜகேசரியாவான். இது அவனுடைய அன்பில் செப்பேடுகளால் நமக்குத் தெரிகிறது. சுந்தர சோழனுடைய நான்கு சாசனங்களும் பின்வருமாறு:

ஆண்டு 5. திருவிசலூர் (தஞ்சாவூர் ஜில்லா)

[சுந்தர சோழன். இருங்கோள குலப்பிரதீப பிராந்தகஸ்யாத்மஜ வர்கவர்யனுயின சிறுவேளான் ஒரு விளக்கு அளித்தது]

தெ. இ. சாசனங்கள் III, நெ. 121.

ஆண்டு 7. திருக்களித்தட்டை (தஞ்சாவூர் ஜில்லா)

[பாண்டியனைச் சுரம் இறக்கின பெருமாள் ஸ்ரீ சுந்தர சோழ தேவர். அரசனுடைய சேனபதி யான பிராந்தகன் சிறிய வேளானுயின திருக்கற் றளிப்பிச்சன் பொன் அளித்தது]

எபி. இந்தி., XII, பக். 121-6

ஆண்டு இல்லை. கொடும்பாளூர். (புதுக்கோட்டை) புதுக்கோட்டை [மதுராந்தக சுந்தர சோழன்] சாசனம் நெ. 82.

ஷை திருக்களித்தட்டை (தஞ்சாவூர் ஜில்லா.)

[பாண்டியனைச் சுரம் இறக்கின பெருமாள் சுந்தர சோழன். சேனுபதி பிராந்தகன் சிறிய வேளாரை யும் பொன் மாளிகையையும் குறிப்பிடுகின்றன]

1908 ஆண்டு நெ. 302

அவனுடைய சாசனங்கள் எல்லாம் தஞ்சாவூர் ஜில்லா விலும் அதைச்சுற்றியுள்ள பகுதியிலுமே கிடைத்துள்ளன. அவன் சாசனங்களிலே குறிக்கப்பெற்ற சேனுபதியான கொடும்பாளூர் பராந்தகன் சிறியவேளான், உடையார் பொன் மாளிகையில் துஞ்சினதேவர், அதாவது சுந்தரசோழனுடைய ஆட்சியின் ஒன்பதாம் ஆண்டு நடந்த ஈழத்துப் படையெடுப் பிலே இறந்துபட்டான் என்று தஞ்சாவூர் ஜில்லா திருவெண் காட்டில் கிடைக்கும் முதலாம் ராஜராஜ சோழனுடைய ஆட் சியின் இருபத்தேழாம் ஆண்டு கொண்ட ஒரு கல்வெட்டால் நாம் அறிகிறோம். (தெ. இ. சாசனங்கள் வால்யூம் V, 980 நெ.) இந்த ஈழத்துப் படையெடுப்பு சுந்தரசோழனுடைய ஒன்ப தாம் ஆண்டிலே நடந்ததென்பதை வேறு இரண்டு சாசனங் களாலும் அறிகிறோம். சேலம் ஜில்லா திருச்செங்கோட்டி லிருந்து கிடைத்த ராஜகேசரி வர்மனுடைய பத்தாம் ஆண்டுச் செப்பேட்டுச் சாசனம் ஒன்று, கொல்லிமழவன் பிரதிகண் டனுயின சுந்தரசோழன் என்பான் ஈழத்துப்போரில் இறந்த அவனுடைய தந்தையின் தாகத்தைத் தணிக்க (எங்கள் ஆச்சர் ஈழத்துப்பட அவர் ஸ்ரீமஹாதாஹத்துக்குச் சிறுபாடு) தர்மம் செய்த தைக் கூறுகிறது. சாசனத்தில் கண்ட ராஜகேசரி வர்மன் சுந்தரசோழனேயாவான் (தெ. இ. சாசனங்கள், மூன்றும் வால் யூம், நெ. 212). அதேபோலக் கும்பகோணத்துக்குப் பக்கத் தில் உள்ள திருநாகேச்வரத்திலிருந்து கிடைக்கும் ராஜகேசரி வர்மனுடைய ஒன்பதாம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று, பிள்ளை யார் அரிகுலகேசரி மகளார் ஸ்ரீ பாணப்பெருந்தேவியான அறிஞ்சிகைப்பிராட்டியார் அந்தக் கோயிலிலே தான் நிறு விய அமரசுந்தரதேவருடைய வழிபாட்டுக்காக நிபந்தம் அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது, சாசன ஆரம்பத்தில் உள்ள இரண்டு வடமொழிச் சுலோகங்கள் மிகவும் சிதிலமாக உள்ளன. எனினும், அவற்றிலிருந்து நாம் பலிகுல திலக னை அந்தப்பாண அரசன் ஈழத்திலே தன்னுடைய பராக்கிர மத்தால் புகழை நிறுவி உயிர் துறந்தான் என்பதைக் காண லாம். அவன் நினைவாகவே அவன் மனைவி, அமரசுந்தரதேவர் என்ற பெயரில் லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தாள்போலும். (தெ. இ. சாசனங்கள், வால்யூம் XIII நெ. 197).

ஈழத்துமீது சென்ற இப் படையெடுப்பைப்பற்றி இலங் கைச் சரித்திரமான மகாவமிசத்திலும் கூறப்பட்டிருக்கிறது. நான்காம் மஹிந்தன் ஆட்சியில் (கி. பி. 956 - 72) இது நிகழ்ந்

தது. 'வல்லப அரசன் நாகதீபத்தை (இலங்கையின் வடமேற்குப் பகுதியை)ப் பிடிக்க ஒரு சேனை அனுப்பினான்.' சிங்கள மன்னனும் அதை எதிர்க்கும்படி தன் சேனாபதியான சேனனைத் திட்டம் செய்து அனுப்பி வைத்தான். 'வல்லபனைத் தலைவனாகக் கொண்டு வந்த மன்னர்கள் நம் (இலங்கை) அரசனை வெற்றிகொள்ள முடியாமையால் இலங்கை அரசனுடன் சமாதானமாக உடன்படிக்கை செய்துகொண்டார்கள்' (சூளவமிசம் அத்தியாயம் 54, சுலோகங்கள் 12-16). இந்தப் படையெடுப்பின் உண்மையை மஹிந்துவின் வெஸ்ஸகிரிச் சாசனமும் உறுதிப்படுத்துகிறது. (எபிகிராபியா சிலானிகா, வால்யூம் I, பக்கம் 29 முதல்).

ஆனால் மஹாவமிசத்திலே அந்த நாட்டின்மீது அநேக சிற்றரசர்களுடன் படையெடுத்து வந்தவன் அவர்களுக்குத் தலைவனை வல்லபன் என்று கூறப்பட்டிருக்கிறது. அந்தச் சரித்திரத்திலே வல்லபன் என்று வரும் இடங்களிலெல்லாம், அந்தச் சொல் சோழர்களுடைய தமிழ்ச் சாசனங்களைப் போலவே மேலைச் சாளுக்கியர்களையும் அவர்களுக்குப் பின்னால் குந்தளத்தை ஆண்ட ராஷ்டிரர்களையும் குறித்துவந்திருக்கிறது. உதாரணமாக, சூளவமிசம் 47-ஆம் அத்தியாயத்தில் 15-ஆம் சுலோகத்தில், "அவர்கள் இருவரும், (காடுவெட்டி நரஸிம்ஹனும், ஸிம்ஹள ராஜகுமாரன் மானவர்மனும்), சேர்ந்து வாழ்ந்துவந்த காலத்தில் நரஸிம்ஹன்மீது வல்லபன் படையெடுத்துவந்தான்" என்று கூறப்பட்டுள்ளது. பல்லவ நரஸிம்ஹவர்மன்மீது மேலைச் சாளுக்கிய மன்னன் படையெடுத்துவந்ததையே வல்லபன் என்ற சொல்லால் அந்தச் சரித்திரம் குறித்துள்ளது என்பது நன்கு விளங்கும். அதனால் அதை வளவன் எனக்கொண்டு சோழனைக் குறிப்பதாகக் கருதுவதற்கு இடம் இல்லை. சோழர்களைக் குறிப்பிடும் இடங்களில் எல்லாம் அவர்களை அவ்விதமே சோழர்கள் என்று தெளிவாகக் கூறியிருக்கக் காண்கிறோம். அந்நாளிலே ராஷ்டிரகூட மன்னனாக இருந்தவன் மூன்றாம் கிருஷ்ணன். அவன் தன்னுடைய தென்திசைத் திக்கு விஜயத்தின்முடிவில் மேல்பாடியில் தங்கியிருந்த காலத்தில் கி. பி. 959-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 9-ஆம் தேதி அளித்த தானத்தைத் தெரிவிப்பன கர்ஹாட் செப்பேடுகள் (எபி. இந்தி., வால்யூம் IV பக்கம் 280). அந்தச் சாசனத்திலே மன்னன் 'சோழர்களை வேரறுத்து அவர்களுடைய நாட்டைத் தன்னை அண்டியவர்

களித்து, இலங்கை அரசன் உள்படப் பல மன்னர்களிடம் திறை கொண்டு, ராமேச்வரத்தில் ஒரு ஜயஸ்தம்பம் நிறுவினன்' என்று கூறப்பட்டுள்ளது. இதனால் ராஷ்டிரகூட கிருஷ்ணனும் ஈழத்தின்மீது படையெடுத்துச் சென்று வெற்றிகொண்டான் என்பது விளங்கும். மஹாவமிசத்தில் அந்தக் காலத்தில் இந்த ஒரே படையெடுப்புமட்டும்தான் கூறப்படுகிறது. ஆகவே மஹாவமிசத்தில் குறிப்பிட்ட படையெடுப்பு ராஷ்டிரகூட மன்னனை மூன்றும் கிருஷ்ணன் தலைமையில் நடந்ததேயாகும். கொடும்பாளூர் வேளிரான பராந்தகன் சிறிய வேளான், பாண குல மன்னன் ஆகியவர்களும் அந்தப் படையெடுப்பிலேயே ஈடுபட்டிருத்தல் வேண்டும்.

கர்ஹாட் சாசனத்தின்படி இந்தப் படையெடுப்பு கி. பி. 959-க்கு முன்னதாக நடந்திருக்கவேண்டும். அது சுந்தர சோழனுடைய ஆட்சியின் ஒன்பதாம் ஆண்டு நடந்ததென்பதை நாம் அறிவோம். ஆகவே சுந்தரசோழனுடைய ஆட்சியின் ஒன்பதாம் ஆண்டு கி. பி. 959-க்கு முன்னதாக இருத்தல் வேண்டும். திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் உள்ள அள்ளூர் பாலூர் ஆகிய இடங்களிலிருந்து கிடைத்துள்ள ராஜகேசரி வர்மனுடைய ஐந்தாம் ஆண்டுக் கல்வெட்டுக்கள் அந்த வருஷத்துக் கன்னிமாதம் நேரிட்ட ஒரு சந்திர கிரகணத்தின் போது கொடும்பாளூர் வேளிர் குலத்தைச் சேர்ந்த மஹிமாலய இருக்கு வேளான பராந்தகன் வீரசோழன் என்பவன் அளித்த தானங்களைக் குறிக்கின்றன. அந்தச் சந்திர கிரகணத்தைக்கொண்டு அந்தச் சாசனங்களில் காணும் ராஜகேசரி வர்மன் கி.பி. 949-50-ஆம் ஆண்டிலே சிங்காதனம் ஏறியிருத்தல் வேண்டும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். (எபி. இந்திகா, வால்யூம் XXVI, பக்கங்கள் 82-4). அவ்விதமானால் கி. பி. 949-50-ல் சோழ சிங்காதனம் ஏறிய ராஜகேசரி வர்மன் பராந்தக சுந்தர சோழனாகவே ஆவான்.

சுந்தர சோழன் கி. பி. 949-50-ஆம் ஆண்டில் சோழ சிங்காதனம் ஏறினன் என்று கொள்வதானால், அதே ஆண்டில் நடந்த தக்கோலத்துப் போரில் உயிர்துறந்த தன்னுடைய பெரியப்பன் ராஜாதித்தியனுக்கு அடுத்தபடியாக, அவனைத் தொடர்ந்து, சுந்தரசோழன் பட்டம் கட்டப்பெற்றிருத்தல் வேண்டும்.

சுந்தர சோழனுடைய தந்தையான அரிஞ்சயன் அரசு செலுத்தினான் என்பதை நேரிடையாகத் தெரிவிக்கும் சாசனம் ஏதும் இதுவரையில் கிடைக்கவில்லை. அதற்கு மாறாக, உள்ள ஆதாரங்களைக் கவனிக்கும்போது அரிஞ்சயன் தக்கோலத்துச் சண்டைக்கு முன்னதாகவே, தந்தை பராந்தகனும் அண்ணன் ராஜாதித்தியனும் உயிருடன் இருக்கும்போதே இறந்துபோனான் என்று எண்ணவேண்டி யிருக்கிறது. சுந்தர சோழன் காலத்தில் நடந்த ஈழத்துப் படையெடுப்பைக் குறிப்பதாகத் திருநாகேச்வரத்திலிருந்து கிடைக்கும் கல்வெட்டு (தெ. இ. சாசனங்கள், வால்யூம் XIII, நெ. 197) தானம் வழங்கிய அறிஞ்சிகைப் பிராட்டியாரைப் பிள்ளையார் அரிகுலகேசரி மகளார் என்றே குறிக்கிறது. உண்மையில் அரிஞ்சயன் சிங்காதனம் ஏறி அரசுபுரிந்திருந்தானாயின் அவனுடைய மகனான சுந்தர சோழன் கல்வெட்டில் அவன் பிள்ளையார் என்று குறிக்கப்பெற்றிருக்க மாட்டான். மகன் தன் தந்தையை அரச விருதுடனேயே குறித்திருப்பான். திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் திருச்செந்துறையிலிருந்து கிடைக்கும் கல்வெட்டுக்களிலிருந்து பராந்தகனுடைய காலத்தனவென்று கருதக்கூடிய பரகேசரி வர்மனுடைய மூன்றாம் ஆண்டுக்கு முன்னதாகவே சோழப்பெருமானடிகள் மகனார் அரிகுலகேசரியின் தேவியும் தென்னவன் இளங்கோ வேளார் மகளுமான பூதி ஆதிச்ச பிடாரியார் சந்திரசேகரருக்கு அவ்வூரில் ஒரு கற்கோயில் எடுப்பித்திருந்தாள் என்னும் விவரம் தெரிகிறது. (தெ. இ. சாசனங்கள், மூன்றாம் வால்யூம், நெ.96). இதிலிருந்து அரிஞ்சயன் தன் தந்தையின் ஆட்சி ஆரம்பித்த காலத்திலே காளைப்பருவத்தனாக விளங்கியமை தெரியவரும்.

திருச்சிராப்பள்ளி ஜில்லா திருப்பராய்த்துறையிலிருந்து கிடைக்கும் ராஜகேசரிவர்மனுடைய எட்டாம் ஆண்டுக் கல்வெட்டுகள் பிள்ளையார் அரிகுலகேசரி தேவருடைய பெருந்தரத்து அதிகாரிகளையும் ஆழ்வார் அரிகுலகேசரி தேவர் சேவகனையும் குறிக்கின்றன. அதிலிருந்து அரிஞ்சயன் இறந்து போவதற்கு முன்னதாக, அதாவது பராந்தகன் உயிருடன் இருந்த காலத்திலேயே, ராஜகேசரி என்ற பட்டம் தாங்கிய ஒருவன் இருந்தான் என்பதும் தெரியவரும். (டை நெ. 111-2) கி.பி. 949-50-ல் சிங்காதனம் ஏறிய சுந்தர சோழனுக்கு முன்னதாக அவ்விதம் அரசுரிமையை அடைந்தவனாகக் கருதக்கூடியவன் ராஜாதித்தியன் ஒருவனே யாவான். ராஜாதித்தியனை வெற்றி கொண்ட பூதுகனுடைய ஆதகூர்க் கல்வெட்டிலே ராஜாதித்தனுக்கு மும்முடி

சோழன் என்ற பட்டம் காணப்படுகிறது. மூவடி சோழ ராஜாதித்ய மேலே பந்த என்று அது குறிக்கிறது. (எபி. இந்தி., வால்யூம் VI, பக்கங்கள் 50-7). அதனால் ராஜாதித்தியனும் முறைப்படி மகுடாபிஷேகம் செய்யப்பெற்று அரசுரிமையை அடைந்தவன் என்பது பெறப்படும். அவ்விதமாயின், பிள்ளை யார் அரிகுலகேசரியைக் குறிக்கும் திருப்பராய்த்துறைக் கல் வெட்டை அளித்த ராஜகேசரி வர்மன் ராஜாதித்தியனாகவே இருத்தல்வேண்டும் என்பதும் அவன் எட்டு வருஷகாலமாவது அந்தப் பதவியை வகித்து வந்தான் என்பதும் தெளிவாகும்.

சுந்தர சோழன் பதினான்கு ஆண்டுகளாவது ஆட்சிபுரிந் திருத்தல்வேண்டும். தென் ஆர்க்காடு ஜில்லா உடையார்குடியி லிருந்து கிடைக்கும் ராஜகேசரி வர்மனுடைய பன்னிரண்டாம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று அவ்வூர்க் கோயில் மகாதேவரை மாதந்தோறும் சங்கராந்தி தினத்தன்று ஆயிரம் குடம் நீராட்டுவ தற்காக அரிஞ்சய பிராந்தக தேவர் ஆச்சியார் உடைய பிராட்டி யார் வீமன் குந்தவையார் நிலம் கொண்டுவிட்ட செய்தியைத் தெரிவிக்கிறது. (1920-ஆம் ஆண்டு, 572 நெ. சாசனம்). அவ் விடத்திலிருந்து கிடைக்கும் அதே ராஜகேசரி வர்மனுடைய பதினான்காம் ஆண்டு கொண்ட மற்றொரு கல்வெட்டு ஒன்றும், அதேபோன்ற மற்றொரு தானத்தைத் தெரிவிக்கிறது (1920-ஆம் ஆண்டு, 589 நெ. சாசனம்). தஞ்சாவூர் ஜில்லா திருக்களித் தட்டையிலிருந்து கிடைக்கும் ராஜகேசரி வர்மனுடைய பதினான் காம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று சிறிய வேளார் தேவி ராஜாதிச்சி யும், மகள் குஞ்சரமல்லியும் இரண்டு விளக்கு எரிக்க இருபத் தைந்து ஈழக்காசு அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. (தே. இ. சாசனங்கள், மூன்றாம் வால்யூம், நெ. 122). அதிலே குறிக்கப்பட்ட சிறிய வேளார் ஈழத்துப்போரில் உயிர் துறந்த கொடும்பாளூர் வேளிராகவே இருத்தல் வேண்டும். இந்த ராஜகேசரிவர்மனைச் சுந்தர சோழனாகவே கொள்ளவேண்டும். அவன் தன்னுடைய பதினான்காம் ஆண்டுக்கு மேல் எவ்வளவு காலம் அரசு செலுத் தினான் என்பதை நிச்சயமாகக் கூறமுடியாது.

சுந்தர சோழ பராந்தகனுடைய இரண்டு குமாரர்களுள் கரிகாலன் என்று பெயர் பூண்ட இரண்டாம் ஆதித்தியன் மூத்த வன். அவன் சிறுவனாக இருக்கும்போது, 'சிங்கக் குட்டியுடன் விளையாடும் யானைக் கன்றுபோல' வீரபாண்டியனோடு விளையாடி னான் என்று லீடன் பட்டயம் கூறுகிறது. (எபி. இந்தி., வால்யூம்

XXII, சுலோகம் 28). திருவாலங்காட்டுச் செப்பேடுகளோ அவன் வீரபாண்டியனைக் கொன்றான் என்று தெரிவிக்கின்றன. சாசனங் களிலே அவன் வீரபாண்டியன் தலை கொண்டவன் என்ற விரு துடன் குறிக்கப்படுகிறான். பரகேசரி வர்மனான அவனுடைய சாசனங்கள் ஐந்து ஆண்டுகள் வரையிலேதான் கிடைக்கின்றன. (தே. இ. சாசனங்கள், வால்யூம் VII, நெ. 800).

சிதம்பரத்துக்குப் பக்கத்தில் உள்ள உடையார்குடியிலிருந்து ராஜகேசரி வர்மன் ஒருவனுடைய இரண்டாம் ஆண்டுக் கல் வெட்டு ஒன்று கிடைத்திருக்கிறது. அரசன் திருமுகப்பாடி 'வீரபாண்டியன் தலைகொண்ட கரிகால சோழனை'க் கொன்ற துரோகிகள் சிலருடைய நிலங்களைப் பறிமுதல் செய்து வீரநாரா யண சதுர்வேதிமங்கலத்துச் சபையார் விற்ற செய்தியைத் தெரி விக்கிறது அந்தக் கல்வெட்டு. (எபி. இந்தி., வால்யூம் XXI, நெ. 27). அதில் குறிக்கப்பட்ட ராஜகேசரி வர்மன் கரிகால சோழன் தம்பியான முதலாம் இராஜராஜனாகவே இருத்தல் வேண்டும். அந்தச் சாசனத்திலிருந்து ஆதித்தியன் எதிரிகளின் சூழ்ச்சியால் கொலையுண்டு இறந்தான் என்பது விளங்கும். திருவாலங்காட்டுச் செப்பேடுகளிலே, 'ஆதித்தன் தேவலோகத் தைக் காணவேண்டுமென்னும் ஆசையினால் மறைந்தான்' என்று கூறப்பட்டிருக்கிறது. இன்னும் ஆதித்தியனுடைய அஸ்தமனத் தால் நாட்டில் பரவியிருந்த பாபம் என்னும் இருளைப்போக்கும் படி குடிமக்கள் மிகவும் வேண்டிக்கொண்டபோதிலும், க்ஷத்ர தர்மத்தை நன்கு அறிந்த அருண்மொழி வர்மன், (அதாவது ராஜராஜன்), "தன்னுடைய சிற்றப்பனுக்கு அந்த ராஜ்யத்தின் மீது ஆசையிருக்கும் வரையில் தான் மனத்தாலும் அதைப்பற்றி நினைப்பதில்லை என்று தீர்மானமாக இருந்தான்." அன்றி, மதுராந் தகனும் அருண்மொழியை யுவராஜப் பதவியில் நியமித்தானாம். (சுலோகங்கள் 68-9). மேலேகாட்டியிருப்பதிலிருந்து ஆதித்தியன் கொலையுண்டது மதுராந்தகன் சிங்காதனம் ஏறியதற்குச் சற்று முன்னதாகவே இருத்தல் வேண்டும் என்பது தெளிவாகும்.

ஆதித்தியன் ஐந்து ஆண்டுகளே அரசு புரிந்திருப்பதால் கி. பி. 964-ம் ஆண்டு அளவில் சிங்காதனம் ஏறியிருத்தல் வேண் டும். அவன் தந்தையான சுந்தர சோழன் பதினான்கு ஆண்டு களுக்குக் குறையாமல் ஆண்டிருக்கிறான் என்பதால் சுந்தர னுடைய ஆட்சியும் அப்போது முடிவு பெற்றிருக்க வேண் டும். இவ்விதம், தக்கோலம் சண்டைக்குப் பிறகு மதுராந்தக

உத்தம சோழன் சிங்காதனம் ஏறியதற்குமுன், சுந்தர சோழனும் ஆதித்திய கரிகாலனும் இடைவெளி ஏதும் இல்லாமல் முறையே ஒருவன் பின் ஒருவனாக அரசு புரிந்திருக்கிறார்கள் என்பது தெளிவாகும்.

மற்றவர்களிலே அரிஞ்சயன் அரசு புரியவே இல்லை என்பதை மேலே நாம் கண்டோம். அப்பால், கண்டராதித்தியன் நிலை என்னவென்பது தெரியவேண்டும். அது தவிர, பதினேழு ஆண்டு வரையில் அரசுபுரிந்த மதுரைகொண்ட ராஜகேசரிவர்மன், பதினைந்து ஆண்டுகள் ஆட்சி நடத்திய பார்த்திவேந்திரவர்மன் ஆகிய இருவரும் இருக்கிறார்கள். இவ்விருவரும் யார் என்பதையும் அவர்கள் ஆட்சிக் காலத்தையும் அவர்கள் எவ்விதம் எங்கே அரசு புரிந்தனர் என்பதையும் நிச்சயிக்கவேண்டும்.

கண்டராதித்தியன் நிச்சயமாக அரசுக் கட்டில் ஏறி இருக்கிறான். இது திருக்கோவலூருக்குப் பக்கத்திலே சோழவாண்டிபுரம் என்னுமிடத்திலிருந்து கிடைக்கும் மும்முடி சோழதேவ கண்டராதித்தியனுடைய இரண்டாம் ஆண்டுக் கல்வெட்டால் நன்கு விளங்கும் (*1937*-ஆம் ஆண்டு *252*-நெ. சாசனம்). இன்னும் தஞ்சாவூர் ஜில்லா திருவெண்காட்டிலிருந்து கிடைக்கும் ராஜகேசரிவர்மன் ஆன இராஜராஜனுடைய ஆறும் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று கண்டராதித்தியன் தேவியான செம்பியன் மாதேவியார் அக்கோயிலுக்குப் பல சமயங்களில் அளித்த திருமேனிகள், ஆபரணங்கள், பாத்திரங்கள் ஆகியவற்றை விவரித்துக் கூறும் போது, மும்முடி சோழதேவனான கண்டராதித்தியனுடைய இரண்டாம் ஆண்டில் கொடுத்தவற்றையும் விவரித்துக் கூறுகின்றது. (*1918*-ஆம் ஆண்டு *444*-நெ. சாசனம்.)

மதுரை கொண்ட ராஜகேசரிவர்மனுடையனவாக இதுகாறும் கிடைத்துள்ள பதினொரு கல்வெட்டுகளும் பின் வருமாறு :

| | | |
|---|---|---|
| வருஷம் *5* | கரிகல் (வ. ஆ.) | எபி. இந்தி. IV, ப. 331 |
| ,, | திருவொற்றியூர் (செங்) | தெ. இ. சா. III, 115 |
| ,, | வேளச்சேரி ,, | ஷை 114 |
| வருஷம் *7* | ஷை | ஷை 116 |
| ,, | தென் மகாதேவ மங்கலம் (வ. ஆ.) | ஷை XIII, 173-A |

| | | |
|---|---|---|
| வருஷம் 12 நாள் 130 | மதுராந்தகம் (செங்) | 1922 ஆண்டு 396 நெ. |
| வருஷம் 14 | திருப்புறம்பயம் (தஞ்) | தெ. இ. சா. VI, 24 |
| வருஷம் 17 | அள்ளூர் (திருச்சி) | ஷை VIII, 691 |
| ,, | திருமழுவாடி ,, | 1910 ஆண்டு 2 நெ. |
| ,, | திருமால்புரம் (வ. ஆ.) | தெ. இ. சா. III, 117 |
| ,, | ஷை | ஷை 118 |

அவனுடைய சாசனங்களில் பதினுன்கு, பதினேழாம் ஆண்டுகொண்ட மூன்று சாசனங்களைத் தவிர மற்றவையெல்லாம் வட ஆர்க்காடு, செங்கற்பட்டு ஜில்லாக்களிலே தான் காணப்படுகின்றன. அந்நாளிலே, ராஷ்டிரகூட கிருஷ்ணனுடைய ஆட்சியின் 15-ஆம் ஆண்டு முதல் 28-ஆம் ஆண்டு வரையில் (கி. பி. 954 முதல் 967-வரையில்), அந்தப் பிரதேசம் அவனுடைய நேர்ப்பார்வையில் இருந்திருக்கிறது. கிருஷ்ணன் கி. பி. 959-இல் மேல்பாடியில் தங்கியிருந்திருக்கிறுன். சோழர்களை வேரறுத்து அவர்களுடைய நாட்டைத் தன்னை அனுசரித்துச் செல்பவர்களுக்கு வழங்கி வந்தான் என்று கர்ஹாட்சாசனம் கூறுகிறது. இதைக் கவனிக்கும்போது மதுரைகொண்ட ராஜகேசரி என்பவன், அவன் யாராக இருந்தாலும், ராஷ்டிரகூட கிருஷ்ணனுக்கு அடங்கியவனுகவே இருத்தல்வேண்டும் என்பது வெளிப்படை; அனுசரித்துச் செல்வதால் பயன் அடைந்தவர்களுள் அவனும் ஒருவன் ஆவான்.

சோழவாண்டிபுரத்தில் கிடைத்துள்ள மும்முடி சோழதேவ கண்டராதித்திய சோழனுடைய இரண்டாம் ஆண்டுக் கல்வெட்டு தமிழ்ச் செய்யுள் வடிவத்தில் அமைந்திருக்கிறது. (1937-ஆம் ஆண்டு சாசன இலாகா அறிக்கை). சித்தவடவன் என்பவன் புகழைப் பாடுவது. கடையெழு வள்ளல்களில் ஒருவனுன பறம்பு நாட்டு மன்னன் பாரியின் மகளை மணந்து கொண்ட சேதிநாட்டு ஓரியின் வழிவந்தவன் என்றும், கோவல் அதிபன் என்றும், தமிழ் மக்களைக் காப்பவன் என்றும், வீரசோழபுரத்தில் நடந்த சண்டையில் எதிரிகள் பலர் கூடிவந்தபோதும் அவர்களை முறியடித்தவன் என்றும் அவன் புகழப்படுகிறுன். மலய குலோதபவன், ரணபீமன் என்ற விருதுகளும் அவனுக்குக் காணப்படுகின்றன.

அந்தச் சாசனம் அவ்விடமுள்ள பிண்டிக்கடவுள் (ஜைன தீர்த்தங்கரர்) பூஜைக்கும் மாதவர் ஜீவனத்துக்குமாகப் பரப்பாடி என்னும் கிராமத்தைச் சித்தவடிவன் தானம் அளித்த செய்தியைக் கூறுகிறது. ஊரிலே ஆண்டிமலையென்று குறிக்கப்பெறும் பாறைகளில் ஜைன விக்கிரகங்கள் செதுக்கப்பட்டுள்ளன. மகாவீரர் உருவம் ஓர் இடத்தில் காணப்படுகிறது. சிறிது தூரத்திலே இரண்டு பாறைகள் ஒன்றோடு ஒன்று சேரும் இடத்தில் நடுவிலே பத்மாவதியின் உருவமும் பக்கத்திலே பாறைக்கு ஒன்றாகக் கொம்மடேசுவரர் உருவமும் பார்சுவநாதர் உருவமும் எதிர் எதிராகச் செதுக்கப்பட்டுள்ளன. கொம்மடர் உருவத்துக்குப் பக்கத்திலே வேளி கொங்கரையர் புத்தடிகள் என்பவர் அந்தத் தேவாரத்தை நிறுவியதாகக் கூறும் சாசனம் ஒன்று பொறிக்கப்பட்டிருக்கிறது. (1937-ஆம் ஆண்டு 237 நெ. சாசனம்.)

திருநாமநல்லூரிலிருந்து கிடைக்கும் கன்னர தேவனுன மூன்றாம் கிருஷ்ணனுடைய பதினேழாம் ஆண்டு (கி.பி. 956) கொண்ட ஒரு கல்வெட்டு சித்தவடவன் என்பான் அவ்வூர்க் கோயிலில் ஒரு விளக்கு எரிக்கப் பொன் அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. (எபி. இந்தி., வால்யூம் VII, பக்கங்கள் 135-6). இந்தக் கல்வெட்டிலும் அவன் பெயர் 'சக்ரான்வய உதயாசல ஆதித்ய, சக்திநாத, சிம்ஹத்வஜ சிகிமகர லாஞ்சந, மலய குலோத்பவ, மலயகுல சூளாமணி, ஸ்ரீமந் நரஸிம்ஹவர்மா, மிலாடுடைய நாட்டான் சித்தவடவன் ஆகிய நரஸிம்ஹவர்மன்' என்று காணப்படுகிறது. தஞ்சாவூர் ஜில்லா திருச்செந்துறையிலிருந்து கிடைக்கும் பரகேசரி வர்மனுன மதுராந்தக உத்தம சோழனுடைய பதினேராம் ஆண்டு கொண்ட கல்வெட்டு ஒன்றில் மலாடுடைய சித்தவடத்தடிகள் தேவியார் சேதிமாதேவியார் விளக்கு எரிக்க ஆடு அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. (1931-ஆம் ஆண்டு 193 நெ. சாசனம்).

அந்தத் தேவாரம் நிறுவிய பிறகே அதற்குத் தானம் அளித்த செய்தியைக் குறிக்கும் கண்டராதித்திய தேவனுடைய இரண்டாம் ஆண்டுக் கல்வெட்டு பொறிக்கப்பட்டிருக்கவேண்டும். இந்தத் தானத்தை வழங்கிய புத்தடிகளே சகாப்தம் 875 (கி. பி. 953)-ல் தொண்டை நாட்டுப் பகுதியில் ராஷ்டிரகூட அரசன் கன்னர தேவனுடைய சிற்றரசன் அத்திமல்லராகிய கன்னரதேவ பிரிதிவி கங்கரையரிடம் அதிகாரியாக இருந்தவன் என்பது வேலூருக்குப் பக்

கத்தில் உள்ள சோழபுரத்திலிருந்து கிடைக்கும் கல்வெட்டி லிருந்து தெரியவரும் (எபி. இந்தி., வால்யூம் VII, பக்கம் 196). அந்தச் சாசனம் அவன் சிவ விஷ்ணு ஆலயங்களுக்கு நிலம் அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. புத்தடிகள் என்னும் பெயரையும் அவன் ஜைன தேவாரம் எழுப்பியதையும் கொண்டு அவனை ஒரு சமணனாகக் கொள்ளலாம். ஆயினும் அவன் மற்ற மதக் கோயில்களுக்கு நிபந்தங்கள் வழங்குவதில் பின்வாங்கவில்லை போலும். வேளி கொங்கரையன் என்பவன் உத்தரமேரூரிலும் விஷ்ணுவுக்கு ஓர் ஆலயம் எழுப்பியுள்ளான். பார்த்திவேந்திரனுடைய ஆட்சியின் பன்னிரண்டாம் ஆண்டில் அவன் தேவி தம்பிராட்டியார் திரிபுவனமாதேவியார் ஸ்ரீ வேளி விஷ்ணு கிரகத்துக்கு நிவந்தம் அளித்த செய்தியைத் தெரிவிக்கும் கல்வெட்டு ஒன்று அங்கே உள்ளது (தே. இ. சாசனங்கள், மூன்றும் வால்யூம், நெ. 194).

இவைகளைக் கவனிக்கும்போது கண்டராதித்திய சோழன், தொண்டைநாட்டுப் பகுதியை ராஷ்டிரகூட மூன்றும் கிருஷ்ணன் ஆண்டுவந்த காலத்தில், அந்தப்பகுதியில் அரசுபுரிந்து வந்திருக்கிறான் என்பது விளங்கும். அப்படியானால் மதுரை கோண்ட ராஜகேசரி என்பான் கண்டராதித்தியனே ஆவான். இதுகாறும் கொண்டிருப்பதுபோல அவன் சுந்தரசோழன் ஆகமாட்டான். சென்னைக்குப் பக்கத்தில் உள்ள திருவொற்றியூரிலிருந்து கிடைக்கும் அவனுடைய சாசனம் ஒன்று, மதுராந்தக உத்தம சோழனைக் குறிப்பதும் நாம் மேலே எடுத்துக் காட்டியதை வலியுறுத்தும்.

மதுரை கொண்ட ராஜகேசரிவர்மனுடைய ஐந்தாம் ஆண்டு கொண்ட அக்கல்வெட்டு உடையார் உத்தம சோழ தேவருடன் சென்ற காலேசிப் பெருந்தரத்தைச் சேர்ந்த ஒருவர் திருவொற்றியூர் மகாதேவருக்கு விளக்கு எரிக்க ஆடு அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. அதிலே உத்தம சோழன் பிள்ளையார் என்று குறிக்கப் பெறுமல் உடையார் என்ற அரசு விருதுடன் காணப்படுகிறான். தவிர, அவனுக்கெனப் பெருந்தரத்து அதிகாரிகள் தனியாக இருந்து அவனுடன் சென்றனர் என்பதும் அதிலிருந்து தெரியவரும். (தே. இ. சாசனங்கள், மூன்றும் வால்யூம், நெ. 115).

மேலே கண்ட நிலையைப் பிரதிபலிப்பதாக வேறொரு குறிப்பும் கல்வெட்டுக்கள் மூலம் தெரியவருகிறது. உடையார்குடியி

லிருந்து கிடைக்கும் பரகேசரிவர்மனுடைய இரண்டாம் ஆண்டு கொண்ட கல்வெட்டு ஒன்று (1920-ஆம் ஆண்டு 540 செ. சாசனம்) வீரநாராயண சதுர்வேதி மங்கலத்துத் திருவனந்தேச் வரத்தாழ்வாருக்கு விளக்கு எரிக்கக் கண்டராதித்தியன் தேவியார் மழவரையர் மகளார் செம்பியன் மாதேவியார் ஆடு அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. அதிலே கண்டராதித்தன் மேற்கெழுந் தருளின தேவரான கண்டராதித்தியர் என்று குறிக்கப்படுகிறான்.

மன்னர்கள் காலகதியடைந்த பிறகு அவர்களுக்கு இவ் விதம் திருநாமம் சூட்டும் பழக்கம் சோழர்களிடையே இருந்திருக் கிறது. முதலாம் ஆதித்திய சோழன் தொண்டைமான் ஆற் றூர்த் துஞ்சினதேவர் என்று குறிக்கப்பெற்றிருக்கிறான். இதே போல ராஜாதித்தியன் 'ஆனைமேல் துஞ்சினதேவர்' என்றும், அரிஞ்சயன் 'ஆற்றூர்த் துஞ்சினதேவர்' என்றும், சுந்தர சோழன் 'பொன் மாளிகையில் துஞ்சினதேவர்' என்றும் வழங் கப் பெறுவர். கண்டராதித்தியனோ 'துஞ்சின' என்று இறந்த செய்தி குறிக்கப்படவில்லை. 'மேற்கு எழுந்தருளின தேவர்' என்று குறிக்கப்பெறுகிறான். இதனால் இறப்பதற்கு முன்ன தாகவே அவன் மேற்கே சென்றுவிட்டான் என்று சொல்லலாம். அவன் சோழர்களிடமிருந்து விலகிக் கன்னடர்களான ராஷ்டிர கூடர்களுடன் சேர்ந்து கொண்டதையே அவ்விதம் பிற்காலச் சாசனங்களில் குறித்துவந்தார்கள் போலும்.

அவ்விதமாயின், ராஷ்டிரகூட கிருஷ்ணன் தொண்டை நாட்டுப் பகுதியைத் தன் ஆளுகையில் கொண்டிருந்த காலத்தில் சோழர் அரசே இருபிளவாகப் பிரிந்திருந்ததென்பது பெறப் படும்; தென் பகுதியிலே சுந்தரசோழனும் அவனுக்குப் பின் அவன் மகன் ஆதித்திய கரிகாலனும் ஆட்சி புரிந்திருக்க வேண்டும்; வட பகுதியில் கண்டராதித்தியனும் அவனுக்குப் பிறகு மதுராந்தக உத்தம சோழனும் ஆண்டு வந்தனர்.

இந்த நிலையை ஐயத்துக்கு இடமின்றித் தெள்ளத்தெளிய எடுத்துக்காட்டுவனவாக உள்ள ஆதாரங்கள் போதாவென்று நினைக்கக் கூடும். அது ஓர் அளவு உண்மையே. ஆயினும் இது காறும் கிடைத்த ஆதாரங்களைக் கொண்டு வேறு விதமாக நாம் முடிவுகட்ட முடியாது. நாடு அந்நாளிலே இருந்த நிலையும் கிடைக்கும் ஆதாரங்களும் இத்தகைய முடிவையே தான் காட்டு கின்றன.

R

பராந்தகனுக்குப் பிறகு சோழ ராஜ்யம் இரு பகுதிகளாகப் பிரிந்து இருந்ததென்பதைக் கோங்குதேச ராஜாக்கள் சரித்திரமும் வலியுறுத்துகிறது. வீர சோழ ராயன் என்னும் பெயரால் குறிக்கப்பெற்ற பராந்தகன் ஆட்சியைக் கூறிவிட்டு அது பின் வருமாறு தொடர்ந்து உரைக்கிறது.

"இந்த இராசாவுக்கு (வீர சோழ ராயனென பராந்தகனுக்கு) வெகு பேர் பிள்ளைகள். அவர்களிலே தேசோதித்தியராயனுக்கு (அதாவது ராஜாதித்தியனுக்கு)ச் சோள தேசமும் அரிஞ்செய ராயனுக்குத் திராவிட தேசமும் கொடுத்து ஸ்வர்க்கத்தை அடைந்தான்.

"அவன் மகன் தேசோதித்தியராயன் தஞ்சாவூரிலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு அண்ணன் அரிஞ்செய ராயனுக்கு திராவிட தேசம் பட்டாபிஷேகம் பண்ணுவித்து கொங்க தேச முதலானத்துக்கும் இராச்சிய பரிபாலன தருமத்துடனே இராச்சிய விசாரணை செய்து காவேரி தீரத்திலே சதுச் சமுத்திரமென்கிறதாய் நாலு அக்கிரகாரம் பண்ணி இராச்சியம் இரக்ஷித்தான். அவனுக்கு புத்திரனில்லை."

(சென்னை சர்க்கார் ஓரியண்டல் சீரீஸ்--
ஓலைச்சுவடி நிலையப்பதிப்பு—பக்கங்கள் 10-11)

இந்தக் காலத்திலே அரசு செலுத்தியவனாகக் காணும் பார்த்திவேந்திரவர்மன் யார் என்பது தெளிவாக விளங்கவில்லை. அவன் யார் என்பதை நிச்சயிப்பதற்குப் போதிய ஆதாரங்கள் கிடைக்கவில்லை. பாண்டியன் தலைகோண்டவன் அல்லது வீரபாண்டியன் தலைகோண்டவன் என்று பார்த்திவேந்திரவர்மனுக்குக் காணும் விருது ஆதித்திய கரிகாலனுக்கும் காணப்படுவதைக் கொண்டு இருவரும் ஒருவராகவே இருத்தல்வேண்டும் என்று முடிவுகட்டி யிருக்கிறார்கள். ஆனால், இவ்விதம் கருதுவதற்கு முக்கியமான ஆக்ஷேபணை ஒன்று இருக்கிறது. 'வீரபாண்டியன் தலைகொண்ட பரகேசரி வர்மன்' ஆகிய ஆதித்திய கரிகாலனுடைய சாசனங்கள் ஐந்தாம் ஆண்டு வரையில்தான் கிடைக்கின்றன. பார்த்திவேந்திரனுடைய சாசனங்களோ அவனுடைய ஆட்சியின் பதினைந்தாம் ஆண்டு வரையில் கிடைத்துள்ளன. ஒரே அரசன் இவ்விதம் தனித்தனியான இரண்டு பெயர்களையும் இரு வேறு ஆட்சி ஆண்டுகளையும் கொண்டு, சாசனங்களை அளித்திருக்க முடியுமா? அவ்விதம் அவன் அளித்த இருவகைச் சாச

னங்களும் ஒரே இடத்தில் ஒரே சமயத்தில் கிடைக்கும் என்று கொள்ளமுடியுமா? ஆகவே ஆதித்தியன், பார்த்திவேந்திர வர்மன் ஆகிய இருவரையும் ஒருவராகக் கொள்ளமுடியாது. அவர்கள் வெவ்வேறான இருவர் என்றே கொள்ளவேண்டும். பார்த்திவேந்திர வர்மன் சாசனங்கள் காணும் பகுதி அந்நாளில் ராஷ்டிரகூட கிருஷ்ணன் ஆதிக்கத்தில் இருந்துவந்ததென்பதைக் கவனிக்கும் போது நாம் மேலே கூறியது இன்னும் வலிமையுடன் உறுதி பெறும். ஆதித்திய கரிகாலன் சாசனங்கள் காணும் பகுதியை அவ்விதம் கொள்ளமுடியாது.

பார்த்திவேந்திரனை ஆதித்திய கரிகாலனாகக் கொள்ள முடியாவிட்டால், அவனைக் கண்டராதித்திய சோழனுடைய மகன் ஒருவனாகவே கொள்ளவேண்டும். கண்டராதித்தனுக்கு மதுராந்தக உத்தம சோழன் என்ற மகன் ஒருவன் இருந்ததை நாம் அறிவோம். ஆனாலும் பார்த்திவேந்திர வர்மனை மதுராந்தக உத்தம சோழனாகக் கொள்வது கடினம். இரண்டு பெயர்களும் ஒருவரையே குறிக்குமானால், இரண்டு தனித்தனியான பட்டப்பெயர்களையும் வெவ்வேறான ஆரம்ப காலத்தையுடைய ஆட்சி ஆண்டுகளையும் அவன் ஒன்றன்பின் ஒன்றாகக் கொண்டிருக்கவேண்டிய அவசியம் என்ன என்பதை நாம் அறியவேண்டும். இதுவரையில் வேறிடங்களிலே காணாத புதுமை அது. அன்றி, பார்த்திவேந்திர வர்மன், உத்தம சோழன் ஆகிய இருவருடைய சாசனங்களிலும் அவர்களுடைய தேவியரின் பெயர்கள் பல காணப்படுகின்றன. இரு பெயர்களும் ஒருவரையே குறிக்குமானால், தேவியார் பெயர்களும் ஒன்றாகக் காணப்படவேண்டும். ஆனால் அவ்விதம் காணவில்லை. இருவருடைய தேவியார் பெயர்களும் வெவ்வேறாக உள்ளன.

ஆகவே, பார்த்திவேந்திர வர்மனைக் கண்டராதித்தியனுடைய குமாரர்களுள் வேறு ஒருவனாகவே கொள்ளவேண்டும். அவனைப்பற்றிய விவரம் ஏதும் நமக்குத் தெரியாது. அவன் சுமார் கி.பி. 969-ஆம் ஆண்டில் காலகதிஅடைந்திருக்கவேண்டும். அதற்குப் பிறகே மதுராந்தக உத்தம சோழன் சிங்காதனம் ஏறினான் போலும்.

பெருநற்கிள்ளிச் சோழன் என்ற பெயரையுடைய ராஜகேசரி வர்மன் சாசனங்கள் இரண்டு தஞ்சாவூர் ஜில்லாவிலிருந்து கிடைத்துள்ளன. சீகாழித் தாலூகா திருவெண்காட்டிலிருந்து கிடைக்கும் ராஜகேசரி வர்மனுடைய இரண்டாம் ஆண்டுக் கல்

வெட்டு விளக்கு எரிக்கப் பெருநற்கிள்ளிச் சோழர் ஆடு அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது (தே. இ. சாசனங்கள், வால்யூம் XIII, நெ. 15). தஞ்சாவூர்த் தாலூகா திருப்பழனத்திலிருந்து கிடைக்கும் அதே ஆண்டு கொண்ட மற்றொரு கல்வெட்டு ஒரு நந்தா விளக்கு எரிக்கச் சோழப்பெருமானடிகள் பெருநற்கிள்ளிச் சோழர் பொன் அளித்த செய்தியைக் கூறுகிறது (ஷை நெ. 21). அந்தச் சோழ மன்னன் யார் என்பது கல்வெட்டிலிருந்து விளங்க வில்லை. எனினும் அவன் பெயர் ராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்று சங்க நூற்களில் குறிக்கப்பட்ட அவனுடைய மூதாதையர் களுள் ஒருவன் பெயரேயாகும். பழைய பொற்காலத்தை நினைவு படுத்தவே அவன் அந்தப் பெயரைத் தரித்திருந்தான் என்பது புலனாகும்.

சுந்தர சோழன் மகன் இரண்டாம் ஆதித்தியனுக்குக் கரிகாலன் என்ற வேறு பெயரும் உண்டு. இது மேலே நாம் எடுத்துக் காட்டிய உடையார்குடிச் சாசனத்திலிருந்து நன்கு தெரியும். கரிகாலன் என்பதும் சோழவமிசத்துப் பழைய மன்னர்களிலே பிரசித்தமானவன் ஒருவன் பெயர். ஆதித்திய கரிகாலனுக்குத் தம்பியான ராஜராஜ சோழன் பெருநற்கிள்ளி என்ற பெயரைத் தரித்திருத்தல் கூடும். தமிழ் நாட்டின் ஒரு பகுதியைக் கைப்பற்றி ஆண்டுவந்த வேற்றர சர்களான ராஷ்டிரகூடர்களுக்கு எதிராகத் தமிழ் மக்க ளுக்குச் சோழ மன்னர்களின் பழம் பெருமையை நினைப் பூட்டி ஒருமையுணர்ச்சியை உண்டாக்குவதற்காகவே போலும் இந்தப் பெயர்களை அவர்கள் தாங்கியிருந்தனர்.[1]

ஆதித்தியன் இறந்த சமயத்தில் சோழநாடு இருபிளவாகப் பிரிய, ஆதித்தியன் தென்பகுதியில் ஆண்டு வந்தான்; வட பகுதியைப் பார்த்திவேந்திர வர்மன் ஆண்டுவந்தான். இவ்

---

1. புதுக்கோட்டைக்குப் பக்கத்தே உள்ள திருக்கோகர்ணத்திலிருந்து கிடைக்கும் சுந்தரபாண்டியன் காலத்துக் கல்வெட்டு ஒன்று, 'பெருநற்கிள்ளிச் சோழப் பெரும்பள்ளியாழ்வார்' என்னும் ஜினாலயத்துக்கு வழங்கப்பெற்ற தானத்தைக் குறிக்கிறது. (புதுக்கோட்டைச் சாசனங்கள், நெ. 530). அங்கே சாசனம் பொறிக்கப்பட்டிக்கும் இடத்துக்குப் பக்கத்திலே குன்றில் சமண தீர்த்தங்கரர் ஒருவருடைய உருவம் அமைக்கப்பட்டிருக்கிறதாம். சிற்ப வடிவ முறைப்படி அந்த உருவம் கி.பி. பத்தாம் நூற்றாண்டுக்கு முற்பட்டதாக இருக்கமுடியாது என்று புதைபொருள் இலாகாவின் தென்வட்டத்து அதி காரி ஸ்ரீ. கே. ஆர். ஸ்ரீநிவாஸன் அவர்கள் தெரிவிக்கிறார்.

விரண்டு பிரிவுகளையும் அப்படியே விட்டுவிடாமல் ஒன்ருகச் சேர்த்துப் பழையபடியே சோழநாட்டை ஒன்ருக்கிவிட வேண்டுமென்ற முயற்சிகளும் நடைபெருமல் இல்லை. அதைப் போர்முறையிலே செயல்படுத்த எடுத்துக்கொண்ட முயற்சி களின் விளைவாகவே ஆதித்தியன் இறக்க நேரிட்டது என்றும் கூறலாம்.

ஆதித்தியனுடைய சாசனங்கள் எந்த எந்த இடங்களில் கிடைக்கின்றன வென்பதை ஆராயும்போது சில விஷயங்கள் புலப்படுகின்றன. அவன் ஆட்சியின் பிற்பகுதியைச் சேர்ந்த கல்வெட்டுக்கள் சிலவே பெண்ணையாற்றுக்கு வடக்கே உள்ள பகுதியில் கிடைக்கின்றன. அந்தப் பகுதியை நிர்வகித்து வந்த ராஷ்டிரகூட கிருஷ்ணன் கி. பி. 967-ஆம் ஆண்டின் முடிவிலோ கி. பி. 968-ஆம் ஆண்டின் ஆரம்பத்திலோ இறந்து போனுன். கிருஷ்ணன உயிருடன் இருக்கும் வரையில் ஆதித்தியனும் அவனைச் சேர்ந்தவர்களாலும் வட பகுதியைத் தங்கள் நாட்டுடன் சேர்த்து ஒன்ருக்கி விடுவதற்கு யாதும் செய்யக்கூட வில்லை. கிருஷ்ணன் இறந்து போனது அவர்கள் விருப்பத்தைச் செய்து முடிக்க நல்ல வாய்ப்பை அளித்தது. ஆதித்தியன் தன் னுடைய முயற்சியிலே ஓர் அளவு வெற்றி கண்டான் என்றே கூறவேண்டும். அவனுடைய ஆட்சியின் பிற்பகுதிச் சாசனங்கள் தொண்டை நாட்டில் கிடைத்துள்ளன. அதுகாறும் அவ் விடத்தில் கிடைத்து வந்த பார்த்திவேந்திரவர்மனுடைய கல் வெட்டுக்கள் அவனுடைய பதின்மூன்ரும் ஆண்டுக்கு மேல் காணவில்லை. பார்த்திவேந்திரனுடைய ஆட்சியின் பதினன்கு, பதினைந்தாம் ஆண்டு கொண்ட கல்வெட்டுக்கள் மிகவும் அருகி நாட்டின் வடகோடியிலே தான் கிடைக்கின்றன.

முதலாம் ராஜராஜ சோழன் என்று பிற்காலத்திலே பிர சித்திபெற்ற அருண்மொழி வர்மன், ஆதித்தியனுடைய தம்பி. பரகேசரிவர்மனுன ஆதித்தியன் கொலையுண்டு இறந்ததும் அவன் நிச்சயம் ராஜகேசரி என்ற பெயரோடு சிங்காதனம் ஏறியிருப் பான். நாட்டின் தென்பகுதியையும் முடிவாக மதுராந்தகன் கைப் பற்றுவதற்குச் சிறிது காலம் பிடித்திருக்கும். மதுராந்தக உத்தம சோழனுடைய ஆட்சி கி. பி. 969-70-ஆம் ஆண்டி லிருந்து தொடங்கியதாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அவ னுடைய கல்வெட்டுக்களும் இதனையே எடுத்துக் கூறுகின்றன. ஏனினும், அவன் ஆட்சி இன்னும் இரண்டு ஆண்டுகள் கழித்தே தொடங்கியதாக எடுத்துக் காட்டும் கல்வெட்டுக்களும் உள்ளன

கும்பகோணத்திலிருந்து கிடைத்துள்ள அவனுடைய இரண்டு கல்வெட்டுக்களில், நான்காம் ஆண்டு கொண்ட ஒன்று கி. பி. 975-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 22-ஆம் தேதியையும், எட்டாம் ஆண்டு கொண்ட மற்றொன்று கி. பி. 979-ஆம் ஆண்டு ஜனவரி மாதம், 30-ஆம் தேதியையும் கொடுக்கின்றன. (தெ. இ. சாசனங்கள், மூன்றாம் வால்யூம், நெ. 129, 131). அந்த இடைக்காலம் ராஜராஜனுக்கும் மதுராந்தகனுக்கும் போர் நிகழ்ந்த காலம் போலும்.

ஆதித்திய கரிகாலன் துரோகிகளால் கொலையுண்டதையும் அந்தத் துரோகிகளின் நிலங்கள் பறிமுதல் செய்யப்பெற்றதையும் தெரிவிக்கும் ராஜகேசரி வர்மனுடைய உடையார்குடிக் கல்வெட்டு அவன் ஆட்சியின் இரண்டாம் ஆண்டு மேஷ மாதம் ஞாயிற்றுக் கிழமையும் பூரட்டாதி நாளும் கொண்டது. அந்தச் சாசனத்தில் கண்ட ராஜகேசரிவர்மன் என்பான் முதலாம் ராஜராஜ சோழனே யாகையால் அதன் காலம் கி. பி. 988-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 15-ம் தேதி ஆகும் எனக் கொண்டார்கள் (எபி. இந்தி., வால்யூம், XXI, நெ. 27). ராஜராஜனுடைய ஆட்சியின் ஆரம்பகாலம் கி.பி. 985-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 25-ஆம் தேதிக்குப் பிறகு ஜூலை மாதம் 25-ஆம் தேதிக்குள்ளாக இருக்க வேண்டு மென்று நிர்ணயித்திருக்கிறார்கள். அவ்விதமானால், கி. பி. 988 கொண்ட உடையார்குடிக் கல்வெட்டு ராஜ ராஜனுடைய ஆட்சியின் மூன்றாம் ஆண்டு கொண்டதாகும். கல்வெட்டில் கண்டபடி இரண்டாம் ஆண்டு ஆகாது. அதனால் அந்தத் தேதி பொருந்தவில்லை யென்பது தெளிவாகும். சாசனத்தில் கண்ட பஞ்சாங்கக் குறிப்புகளைக் கொண்டதாகக் காணும் அடுத்த முன் தேதி கி. பி. 971-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 26-ஆம் தேதியாகும். மேலே நாம் காட்டிய காலமுறைக்கு இது பெரிதும் பொருந்தும். ஆதித்தியன் மரணத்தை யொட்டி ராஜ ராஜ சோழன் கி. பி. 969-70-ஆம் ஆண்டில் சிங்காதனம் ஏறியதாகக் காட்டும். மதுராந்தக உத்தம சோழனுக்கும் இரண்டு வருஷங்கள் கழித்துக் காணும் தினம் ஒன்று இருப்பினும், அவன் சிங்காதனம் ஏறியதாகக் கொள்ளப்படும் ஆண்டும் இதுவே. இவற்றைக் கவனிக்கும்போது கி. பி. 969-70-ல் ராஜராஜன் தென்பகுதியில் சோழ சிங்காதனம் ஏறி, அதைக் கைப்பற்றுவதற்கு வடபகுதி அரசன் மதுராந்தகன் செய்த சூழ்ச்சிகளை முறியடிக்கத் தன்னால் இயன்ற அளவு முயற்சித்திருக்கிறான் என்று எண்ணுவது தவறாகாது.

இவ்விடத்திலே நாம் மற்றொரு விஷயத்தையும் கவனிக்க வேண்டும். தன் அண்ணன் கொலையுண்டதற்கு வஞ்சம் தீர்த்துக் கொள்ள ராஜராஜன் உடனே முயன்றாலும் துரோகிகளை அவனால் பிடிக்க முடியவில்லை. அவர்கள் மதுராந்தக உத்தமசோழன் கீழ் மந்திரி போன்ற உயர்ந்த பதவி வகித்த அதிகாரிகளாக இருந்தனர். ராஜராஜனால் அவர்களுடைய உறவினர்களின் நிலங்களையே பறிமுதல் செய்ய முடிந்தது.

மதுராந்தகனுக்கு ராஷ்டிரகூடர்கள் அவர்களைச்சேர்ந்தவர்கள் ஆகியோருடைய உதவி இருந்திருக்கவேண்டும். அவ்விதம் பலம்பொருந்தியவனோடு நேரடியாகப் போரிட்டு வெற்றி கொள்வது சிரம சாத்தியமென்பதை ராஜராஜன் உணர்ந்திருக்கலாம். இன்னும் இவ்விதம் தாயாதிகள் தங்களுக்குள்ளே சண்டைபோட்டுக் கொள்வது இரு தரத்தாரையும் அழித்துவிடுமன்றோ? நிலைமையை உணர்ந்த ராஜராஜன் தன் சிற்றப்பனுக்குப் பணிந்துபோயிருக்கவேண்டும். மதுராந்தகனுக்குக் கண்டராதித்தியன் என்ற மகன் ஒருவனும் இருந்திருக்கிறான். சிற்றப்பனுக்குப் பிறகு சிங்காதனம் அவனுடைய பரம்பரையில் செல்லாமல், தனக்குத் திரும்புவதான வழியில் தன்னை இளவரசனாக ஒப்புக்கொள்வதாக இருந்தால் மதுராந்தகனே இருபகுதிகளுக்கும் அரசனாக இருப்பதை அவன் ஏற்றுக்கொண்டிருக்கலாம். மதுராந்தகன் தாயான செம்பியன் மாதேவியும் இந்தச் சமரச முயற்சிக்குப் பெரிது உதவியிருத்தல் கூடும். அன்றி, மதுராந்தகன் மகனான கண்டராதித்தியனும் தனக்கு அரசுப்பதவி வேண்டாம் என்று ஒதுக்கி இருக்கலாம். அவன் பிற்காலத்தில், ராஜராஜன் ஆட்சியில் கோயில் நிர்வாகத்தை ஆராயும் அதிகாரியாக விளங்கியிருக்கிறான்; வாழ்க்கையின் கடைசி நாளில் சிவஞான தேவர் என்னும் பட்டத்தையும் கொண்டிருந்தான்.

இந்தக் காலத்திலே மற்றொரு அரசனும், பல்லவ மன்னனான கம்பவர்மனும், ஆண்டிருக்கிறான் என்று தெரிகிறது. அவனுடைய ஆட்சிக்காலம் இன்னும் சரியாக நிர்ணயம் ஆகவில்லை. அவன் யார் என்பதைப் பற்றிக்கூட ஆசிரியர்களுக்குள்ளே சில சமயங்களில் சந்தேகம் எழுந்தது உண்டு.

மதுராந்தக உத்தம சோழனுடைய (மதராஸ் மியூஸியம்) சென்னைக் கண்காட்சி சாலைச் செப்பேடுகளில் கம்ப வர்மனைப் பற்றிக் குறிக்கப்பட்டிருக்கிறது. அவனுடைய பதினொரும்

ஆண்டில், அதாவது, கி. பி. 984-5-ல், வழங்கப்பட்ட அச்செப்பேடுகளில் குறிக்கப்பட்டுள்ள நிபந்தங்களை ஏற்படுத்துவதற்கு அடியில் கண்ட வகையில் பொன் பெறப்பட்டதாக அந்தச் சாசனம் கூறுகிறது.

(1) 'சிலாலேகைப்படி கோப் பரகேசரி வர்மற்கு யாண்டு இருபத்திரண்டாவது கூரத்து சபையாரும் அரியற் பெரும்பாக்கத்து சபையாரும் கொண்ட பொன்';

(2) [அதே வருஷம்] 'உழையூர் சபையார் சிலாலேகைப்படி கொண்ட பொன்';

(3) 'கோ விசைய கம்ப பந்மற்கு யாண்டு ஒன்பதாவது ஒழுக்கைப்பாக்கத்து ஸபையார் சிலாலேகைப்படிக் கொண்டு கடவ பொன்'. (தெ இ. சாசனங்கள், மூன்ரும் வால்யூம், நெ.128)

அதிலே பழைய நிவந்தங்களைக் குறிக்கும் சிலாலேகைகள் கால முறைப்படி கொடுக்கப்பட்டிருக்குமானல் கம்ப வர்மனுடைய ஒன்பதாம் ஆண்டு, பரகேசரி வர்மனுடைய, அதாவது முதற் பராந்தக சோழனுடைய இருபத்திரண்டாம் ஆண்டுக்குப் பிறகு, (கி. பி. 928-9) சாசனம் அளித்த காலமான கி. பி. 984-க்கு முன்னதாக இருத்தல்வேண்டும்.

இந்த இடைவெளியை இன்னும் நெருக்கி விடமுடியும். சோழபுரத்திலே கிடைக்கும் கம்ப வர்மனுடைய எட்டாம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று, 'ப்ரதிவி கங்கரையர் அதீதராயின பிற்பாடு தத்புத்ர ராஜாதித்யன் மகாதேவன் பரங்ரிபதி மகுட கட்டிக சரணன் தகப்பனுரைப் பள்ளி படுத்த விடத்து ஈச்வராலயமும் அதீய்தகரமும்' எடுப்பித்தான் என்று கூறுகிறது. (எபி. இந்தி., வால்யூம் VII, பக்கம் 193). அந்தச் சாசனத்தின் ஆரம்பத்தில் உள்ள வடமொழிப் பகுதி மிகவும் சிதிலமாகக் காணப்படுகிறது. எனினும், இறந்த ப்ரிதிவிகங்கரையரின் பெயர் அத்தி வர்மா என்று தெரிகிறது. இறந்தவனுக்குக் கோயில் எழுப்பிய அவன் மகன் ராஜாதித்தியன் என்ற பட்டப்பெயர் பூண்டிருப்பதும் கவனிக்கத்தக்கது.

அதே இடத்திலிருந்து கிடைக்கும் மற்ருெரு கல்வெட்டு (எபி. இந்தி., வால்யூம் VII, பக்கம் 195) "பங்கள நாடுடைய வயிரி அடியான் மகனுர் அத்தி மல்லராகிய கன்னர தேவ பிரிதிவி

கங்கரையர்க்கு வாணகோவரையர் ஒற்றியூரடியான்மகளார்.காமக்கனுரான கங்கமாதேவியார் வயிற்றுப் பிறந்து அருங்குன்றத்திற் ஸ்வர்க்கராயின கள்ளி நங்கையர்" பெயரால் குளம் கண்ட செய்தியைத் தெரிவிக்கிறது. இந்தச் சாசனத்தின் ஆண்டு பெயர் குறிக்கப் படாத யாரோ ஓர் அரசனுடைய "யாண்டு இரண்டாவது: சகவர்ஷம் எண்ணூற்றெழுபத்தொன்று. சக்கர வர்த்தி கன்னர தேவ வல்லபன் தொண்டை மண்டலம் புகுந்த வாண்டு" என மூன்று விதமாகக் குறிக்கப்பட்டுள்ளது. சாசன காலம் சகாப்தம் 871 அல்லது கி. பி. 949 ஆகும். (ஷை பக். 195)

இந்த அத்திமல்லனுயின பிரிதிவிகங்கரையர் அதற்கு நான்கு ஆண்டுகளுக்குப் பிறகும் உயிருடன் இருந்திருக்கிறுன். இதுவும் அவ்வூரிலிருந்து கிடைக்கும் மற்றொரு கல்வெட்டால் விளங்கு கிறது. "சகரயாண்டு ...... மூபத்தைந்தாவது. ஸ்ரீ அத்திமல்ல ராகிய கன்னர தேவ பிரிதிவிகங்கரையர் கல்லெடுப்பூர் மஜ்ஜாதி ஆளாவிருப்ப"அவர் அதிகாரி புத்தடிகள் அவ்வூர்ச் சிவன்கோவி லுக்கும் விஷ்ணு ஆலயத்துக்கும் நிலம் அளித்த செய்தியைக் குறிக்கிறது. சாசன காலம் சகாப்தம் (8)75 அல்லது கி. பி. 953 ஆகும். (எபி. இந்தி., வால்யூம் VII, பக்கம் 196) இவ்விதம் கி. பி. 953-இல் உயிருடன் இருந்த அத்திமல்லனுகிய பிரிதிவி கங்கரையர், கம்பவர்மனுடைய எட்டாம் ஆண்டுக்குள் இறந்து போய்விட்டான் என்பது விளங்கும். அவன் இறந்த ஆண்டும் கி. பி. 953-க்குப் பிறகு நீண்ட காலம் தள்ளி இருத்தற்கில்லை. ஏனெனில், அந்தக் கல்வெட்டிலே புத்தடிகள் நிலம் வழங்கிய தாகக் குறிக்கப்பட்டிருக்கும் சிவன் கோயிலின் பெயர் நந்திகம் பீசம் என்று காணப்படுகிறது. நந்தியின் மகன் கம்பவர்மன் ஆகிய அவன் பெயரால் எழுப்பப்பெற்ற அக்கோயில் கி.பி. 953-ல் எழுப்பப் பெற்றிருக்கிறது. அது கம்பவர்மன் பட்டத்துக்கு வந்தபிறகே இருத்தல் வேண்டும். அதனுல், கம்பவர்மன் கி. பி. 953-க்கு முன்னதாகச் சிங்காதனம் ஏறியிருத்தல் வேண்டும் என்பது பெறப்படும். கி. பி. 953-ஆம் ஆண்டையே அவனுடைய ஆட்சியின் எட்டாம் ஆண்டாகக் கொள்வதாயினும் அவனுடைய ஆட்சித் துவக்கம் கி. பி. 946-க்கு முன்னதாக இருத்தற்கில்லை. இதனுல் கம்பவர்மன் சிங்காதனம் ஏறியது கி. பி. 946-க்கும் 953-க்கும் இடையில் நேரிட்டிருக்கவேண்டும்.

திருவொற்றியூர் ஆதிபுரீச்வரர் கோவிலின் இரண்டாம் பிராகாரத்தில் உள்ள ஒரு கல்லில் கம்பவர்மனுடைய பத்

தொன்பதாம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று பொறிக்கப்பட்டிருக்கிறது. (தெ. இ. சாசனங்கள், வால்யூம் XII, நெ. 105). திருவொற்றியூருடைய நிரஞ்சன குருவென்பவர் எடுப்பித்த சிவாலயமான நிரஞ்சநேச்வரத்து மகாதேவர்க்கு இறையிலி தேவ போகமாக நிலம் கொண்டுவிட்ட செய்தியை அது அறிவிக்கிறது. ராஜாதித்தியனிடம் சேனுபதியாக இருந்த கேரளன் வெள்ளன் குமரன் தக்கோலத்துச் சண்டைக்குப் பிறகு உலகைத் துறந்து துறவியாக மாறிய காலத்தில் நிரஞ்சன குருவின் குகையில் விரதம் ஏற்று, அப்பால் சதுரானன பண்டிதர் என்ற பெயரில் ஒரு மடத் தலைவரானுர். அவர் நிரஞ்சன குருவிடம் தீக்ஷை பெற்ருர் என்பது இதிலிருந்து பெறப்படும். இந்தச் செய்தியைத் தெரிவிக்கும் கல்வெட்டு கன்னர தேவனுடைய இருபதாம் ஆண்டு கொண்டது. (எபி. இந்தி., வால்யூம் XXVII, நெ. 47).

தஞ்சாவூர் ஜில்லா திருமாளம் என்னும் இடத்திலிருந்து பாண்டியன் தலைகொண்ட பரகேசரி வர்மனுன இரண்டாம் ஆதித்தியனுடைய இரண்டாம் ஆண்டுகொண்ட சாசனம் ஒன்று கிடைத்திருக்கிறது (1910-ஆம் ஆண்டு 117-நெ. சாசனம்). அதிலே அம்பர் ஸ்ரீமஹாகாளஸ்தானத்திலே நிரஞ்சன பண்டிதர் என்பவர் இருந்ததாகக் குறிக்கப்பட்டுள்ளது. நிரஞ்சனகுரு அல்லது நிரஞ்சன பண்டிதர் என்ற பெயர் கொண்ட சைவப் பெரியாரைப்பற்றி நமக்கு வேறு எதிலிருந்தும் செய்தி கிட்டவில்லை. அந்தப் பெயரே வேறிடங்களில் காணப்படவில்லை. ஆதலின் இரு பெயரும் ஒருவரையே குறிப்பனவாகக் கொள்ளலாம்.

மேலே கூறியவற்றை நோக்கும்போது கம்பவர்மன் ராஷ்டிரகூட கிருஷ்ணனுக்கு வேண்டியவன் என்றே நினைத்தல் வேண்டும். அன்றி, அவன் கி. பி. 946-க்கும், 953-க்கும் இடைப்பட்ட காலத்தில் சிங்காதனம் ஏறியிருக்க வேண்டுமென்றல் அது ராஷ்டிரகூடர்களுடைய உதவி இல்லாமல் நடந்திருக்காது. அவன் தந்தையான நந்திவர்மனும் அவ்விதமே தான் ராஷ்டிரகூடர் உதவியைப் பெற்றவன்.

சோழபுரம் சாசனம் மூன்றுவிதமாகக் காலம் குறிப்பிடுவதை நாம் மேலே காட்டினேம். அவற்றுள் ஒன்று சக வருஷம், மற்ருென்று சக்கரவர்த்தி கன்னரதேவன் தொண்டை நாட்டைக் கைப்பற்றியது. மூன்ருவது யாரோ ஓர் அரச

னுடைய ஆட்சியின் இரண்டாம் ஆண்டு. ஆனல் அந்த அரசன் யார் என்பது சாசனத்தில் கூறப்படவில்லை.

அந்தச் சாசனம் சோழ அரசனுன ராஜாதித்தியனுடைய இரண்டாம் ஆண்டைச் சேர்ந்ததாகச் சில சமயங்களில் கொள்ளப்படுவது உண்டு. இது சிறிதும் பொருந்தாது. சாசனத்தில் குறிக்கப்பட்ட குளத்தைத் தோண்டிய பிரிதிவி கங்கரையன், கன்னரதேவன் என்னும் பேரரசன் மூன்றும் கிருஷ்ணன் பெயரைத் தாங்கியவனுகக் காணப்படுகிறுன். அது அல்லாமல், ராஷ்டிரகூட மன்னன் ராஜவிருதுடன் சக்கரவர்த்தி என்று குறிக்கப்பட்டிருக்கிறுன். ஆகவே அந்தச் சாசனம் ராஷ்டிரகூடர்களுக்கு அடங்கியவர்களான வேறு ஏதோ ஓர் அரச பரம்பரையைச் சேர்ந்த ஒருவனுடைய ஆட்சியின் ஆண்டாகவே இருக்கவேண்டும். அவ்விதம் அந்தக் காலத்தில் அந்தப் பிரதேசத்தில் காணப்படுபவன் பல்லவ அரசனுன கம்பவர்மனே ஆவான். இதே கங்க மன்னனுன கன்னரதேவ பிரிதிவி கங்கரையன் கம்பவர்மனுடைய எட்டாம் ஆண்டில் அவன் கீழ்ச் சிற்றரசனுக இருந்திருக்கிறுன் என்பதை அவ்விடத்திலே கிடைக்கும் மற்ருெரு கல்வெட்டு எடுத்துக் கூறுவதை நாம் மேலே கண்டோம். ஆகவே இரண்டாம் ஆண்டு கொண்ட இக்கல்வெட்டும் கம்பவர்மனுடைய ஆட்சியைக் குறிப்பதாகவே கொள்வது தவருகாது.

அவ்விதமாயின், கம்பவர்மன் சகாப்தம் 870, அதாவது கி. பி. 948-9-ஆம் வருஷம் சிங்காதனம் ஏறியவனுகவேண்டும்.[1]

---

1. நந்திவர்மன் மகனுன கம்பவர்மன் கி. பி. 948-ல் சிங்காதனம் ஏறியவனுகக் கொண்டால் நந்திவர்மன் அதே வருஷம்தான் இறந்திருத்தல்வேண்டும். அந்த நந்திவர்மன் தெள்ளாற்றெறிந்த நந்திவர்மனுகவே ஆவான் என்பது மேலே நாம் காட்டியுள்ள விவரங்களிலிருந்து தெரியவரும். அவன் இருபத்து மூன்று ஆண்டுகளே அரசு செலுத்தியதாகக் காண்கிறது. ஆதலின், அவன் கி. பி. 925-இல் மூன்றும் இந்திரனுடைய வடநாட்டுப் படையெடுப்பு நடந்த உடனே சிங்காதனம் ஏறியிருத்தல்வேண்டும். அவ்விதமாயின் தெள்ளாற்றுச் சண்டை மூன்றும் அமோகவருஷனுடைய ஆட்சியில், கிருஷ்ணன் சார்பில் பூதுகன் சோழநாட்டின்மீது படையெடுத்துவந்த காலத்தில், நடைபெற்றிருத்தல்வேண்டும். அந்தப் படையெடுப்பின் பயனுகத்தான் கிருஷ்ணன் 'கச்சியும் தஞ்சையும் கொண்ட' விருதை அடைந்தான். நந்திக் கலம்பகம் தன் பாட்டுடைத் தலைவன் தொண்டைநாடு சோழநாடு ஆகிய இரண்டைமட்டும் ஆண்டுவந்ததாகக் கூறிச் செல்வது இவ்விடம் குறிப்பிடத்தக்கது.

அவன் முப்பத்திரண்டு ஆண்டுகள் வரையில் அரசு புரிந்திருப்பதாக அவனுடைய கல்வெட்டுக்களிலிருந்து தெரிகிறது. அதிலிருந்து மதுராந்தக உத்தம சோழனுடைய ஆட்சியின் பிற்பகுதியிலே கி. பி. 980 வரையில் அவன் ஆண்டிருக்க வேண்டும் என்பது பெறப்படும்.

இதுகாறும் நாம் விவாதித்த விஷயங்களின் முடிவைப். பின்வருமாறு கொள்ளலாம்:

ராஜாதித்தியன்

பராந்தக சோழன் கி. பி. 934-5-ஆம் ஆண்டு அளவில், ராஷ்டிரகூடர்களுடைய அரசியல் விவகாரங்களில் ஈடுபட நேர்ந்தது. அமோகவருஷனும் அவன் மகன் கன்னரதேவனை மூன்றும் கிருஷ்ணனும் சேர்ந்து கொண்டு ராஷ்டிரகூட சிங்காதனத்தைக் கைப்பற்றி அதுகாறும் அரசனுக இருந்த கோவிந்தனைத் துரத்திவிட்டார்கள். தன் மருமகனை கோவிந்தனை மீண்டும் ராஷ்டிரகூட சிங்காதனத்தில் அமர்த்துவதற்குப் பராந்தகன் முன் வந்தான். அதனல் அவன் அமோகவருஷனுடனும் கிருஷ்ணனுடனும் போராடநேர்ந்தது. இந்தச் சண்டையின் பயனுகச் சோழ ராஜ்யத்துக்கு வடபகுதியிலிருந்து ஆபத்து நேரிடக்கூடும் என்பதையும் அவன் உணராமல் இல்லை. வடக்கு, மேற்கு ஆகிய இரு திசைகளையும் ஒருங்கே கவனித்துக் கொள்ளக்கூடியதான திருமுனைப்பாடி நாட்டில் தன் மகன் ராஜாதித்தியனைப் பராந்தகன் நிறுவினன். பெண்ணையாற்றின் கரையில் உள்ள திருநாமநல்லூர் அந்நாளில் ராஜாதித்தியபுரம் என்ற பெயர் பெற்றிருக்கக் காண்பதால் அதுவே ராஜாதித்தியன் பாடியாக இருந்தது போலும். அவனேடு அரிகுலகேசரியும் உடன் இருந்து உதவி வந்தான்.

என்றாலும் இந்தப் பாதுகாப்புகளால் ராஷ்டிரகூடர்களுடைய படையெடுப்பைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. தங்களுடைய ராஜ்யத்தின் உள் விவகாரங்களில் பராந்தகன் தலையிட்டது கிருஷ்ணனுக்குப் பொறுக்கவில்லை. அவன் சோழ நாட்டின் மீதே போருக்குக் கிளம்பினன். அவ்விதம் அவன் புறப்பட்டு வந்ததற்கு மற்றொரு காரணமும் இருந்திருக்கக் கூடும். ராஷ்டிரகூட சிங்காதனத்திலிருந்து அவன் விரட்டி

யடித்த கோவிந்தன் சோழ நாடு வந்து அங்கே தன் மாமனர் ஆதரவில் தங்கியிருந்தான். அவன் அவ்விடம் இருக்கும் வரையில் தனக்கு ஆபத்துதான் என்பதை உணர்ந்த கிருஷ்ணன் அவனல் மேலும் தனக்குத் தொந்தரவு ஏதும் ஏற்படாதவாறு தடுத்துவிட விரும்பி இருத்தல் இயற்கையே. கோவிந்தனல் தனக்கு இனி ஆபத்து எதுவும் உண்டாகாது என்று நிச்சயமான நிலையை ஏற்படுத்திக்கொள்ள அவன் விரும்பினன்.

அதே நோக்கத்தோடு அவன் சோழர்களைத் திருப்பித் தாக்கியதில் பூர்ண வெற்றி கிட்டியது என்றே தெரிகிறது. பராந்தகனே தனக்கு உள்ளதை நிலைநிறுத்திக் கொண்டால் போதும் என்ற நிலையை அடைந்துவிட்டான். அதற்குப் பிறகு கோவிந்தனைப்பற்றிய பேச்சே எழவில்லை.

அரிஞ்சயனும் ராஷ்டிரகூடர்களுடன் இந்தக் காலத்தில் நடத்திய போர்களிலே ஒன்றில் காளஹஸ்திக்குச் சமீபமாக உள்ள ஆற்றூரில் இறந்துபோனன் என்பதை நாம் முன்னரே காட்டியிருக்கிறோம். அவன் இறந்தது கி.பி. 949-இல் தக்கோலம் சண்டையில் ராஜாதித்தியன் கொல்லப்பட்டதற்கு முன்னதாகவே நேர்ந்தது.

சுந்தரசோழனும் கண்டராதித்தியனும்

தக்கோலத்துப் போரில் ராஜாதித்தியன் இறந்தது, முதுமைப் பருவத்திலிருந்த பராந்தக மன்னனுக்கு ஒரு பேரிடி. அடுத்தப்படியாகச் சிங்காதனம் ஏறுவதற்குத் தகுதியானவரைத் தேர்ந்தெடுக்கவேண்டிய நிர்ப்பந்தம் அவனுக்கு ஏற்பட்டு விட்டது. அவனுக்குப் பிள்ளைகள் அநேகர் இருந்தும் அவர்களில் பெரும்பாலோர் அதற்கு முன்னதாகவே இறந்துவிட்டனர் எனத் தெரிகிறது. எஞ்சியிருந்தவன் கண்டராதித்தியன் ஒருவன் தான்.

நாடு உள்ள நிலைமையையும் ராஷ்டிரகூடர்களிடமிருந்து எந்தச் சமயத்திலும் ஆபத்து நேரலாம் என்ற அபாயம் இருந்ததையும் கவனித்தால், நாட்டை ஆளுவதற்கு அந்நாளில் நல்ல யௌவனமும் அஞ்சா நெஞ்சமும் தோள்வலியும் பெற்ற ஒருவனே அரசனுக இருத்தல் அவசியம் என்பது விளங்கும்.

ஆயினும், பராந்தகன் மனத்திலே என்ன நினைத்தானே நமக்குத் தெரியாது. அவன் தன்னுடைய பெயரனும், அரிஞ்சயன் மகனுமான சுந்தர சோழனைத் தனக்குப் பிற்காலம் சிங்காதனம் ஏற வேண்டியவன் என்று தேர்ந்தெடுத்து ராஜகேசரி என்ற பட்டத்துடன் அவனுக்கு மகுடாபிஷேகம் செய்துவைத்தான்.

இது கண்டராதித்தியனுக்கு ஒப்பவில்லை. உயிருடன் இருக்கும் பிள்ளையான தன்னை ஒதுக்கிவிட்டு, இறந்துபோன ஒரு மகன் (அதுவும் மூத்தமகன் அல்ல) வழிப் பெயரான சுந்தர சோழனைத் தேர்ந்தெடுத்ததைக் கண்டராதித்தியனல் ஏற்றுக்கொள்ள முடியுமா?

கண்டராதித்தியன் தெய்வபக்தி மிகுந்தவன், சிவனை மறவாத சிந்தையான் என்பர். எம்பெருமான் மீது அவன்பாடியுள்ள பாடல்கள் திருவிசைப்பா என்னும் பெயரில் பன்னிரு திருமுறையுள் ஒன்பதாம் திருமுறையிலே இடம் பெற்றிருக்கின்றன. அப்படி உலகத்தை வெறுக்கும் மனப்பக்குவத்தை அடைந்திருக்கக்கூடிய அவன் முதுமை பருவத்திலிருக்கும் தன் தந்தைக்கு விரோதமாகக் கிளம்பிக் கலகம் செய்திருப்பான் என்று சொல்லுவது சிறிது கஷ்டம் தான். ஆனல், திருவிசைப்பா இயற்றிய கண்டராதித்தியன் இவர் அல்லவென்றும் இவர் பெயரனும் மதுராந்தக உத்தம சோழன் மகனுமான கண்டராதித்தியரே என்றும் ஆராய்ச்சியாளர் சிலர் கருதுவர். (து. அ. கோபிநாத ராவ் எழுதியுள்ள சோழ வமிச சரித்திரச் சுருக்கம், பக்கம் 16, அடிக்குறிப்பு). இவ்விரண்டாம் கண்டராதித்தியர் சிங்காதனம் ஏறவே இல்லை. ராஜராஜ சோழன் ஆட்சிக்காலத்திலே கோயில் நிர்வாகத்தை ஆராயும் அதிகாரியாக அமர்ந்து அவர் சைவப்பணி ஆற்றியிருக்கிறார். மைசூர் ராஜ்யத்திலிருந்து கிடைக்கும் கல்வெட்டிலே இவருக்குச் சிவஞான தேவர் என்ற பட்டமும் காணப்படுகிறது. இதைக் கவனிக்கும்போது திருவிசைப்பாப் பாடிய கண்டராதித்தியர் இரண்டாம் கண்டராதித்தியராகவே இருத்தல் வேண்டும் என்பதும் புலப்படும்.

எவ்விதமாயினும், கண்டராதித்தியனே தனக்கு அரசுரிமை வேண்டாமென்று விலகினும் அவனை அவ்வளவு சுலபமாக விட்டுவிட மற்றவர்கள் தயாராக இல்லை போலும். கண்டராதித்தியனுக்கு வயது வந்த இரு பிள்ளைகள் நல்ல

காளைப்பருவ மிடுக்கில் இருந்தார்கள். பார்த்திவேந்திர வர்மன், மதுராந்தக உத்தம சோழன் என்ற பெயர்களில் முறையே ஒருவர் பின் ஒருவராகச் சிங்காதனம் ஏறி அரசு புரிந்த இருவருமே அவர்கள். அவர்கள் தங்கள் தந்தையைத் தூண்டித் துளைத்திருக்கக் கூடும். நடந்த அநீதியை மாற்றி நீதி வழங்க வேண்டுமென்று அவர்கள் வற்புறுத்தி யிருத்தல்கூடும். கண்டராதித்தியன் அதற்குச் செவிசாய்க்காமல் இருந்துவிட முடியுமா? ஆயினும், சுந்தர சோழனைச் சிங்காதனத்தில் அமர்த்தியதை மாற்ற முடியாதென்பதை அறிந்தபோது அவன் மனம் முறிந்து வெகுண்டு தன் குமாரர்களுடன் ராஷ்டிரகூடர்கள் பக்கம் சேர்ந்துவிட்டான்போலும். ராஷ்டிரகூடர்களும் அவர்களை வரவேற்றுச் சோழநாட்டின் வடபகுதியை அவர்களுக்கு அளித்துக் கண்டராதித்தியனுக்கு முடிசூட்டிவைத்தனர்.

நடக்கக் கூடாதது நடந்துவிட்டது. சோழ ஸாம்ராஜ்யம் இருபகுதிகளாகப் பிளவு உண்டது. ஆயினும் பராந்தகன் உயிருடன் இருந்தவரையில் அதிலே தீவிரமான முன்னேற்றமோ நடவடிக்கையோ ஏதும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. பராந்தகனே இந்தப் பிரிவினையை ஒப்புக்கொண்டவனாகவும் தெரியவில்லை. பராந்தகன் என்பது உபசார வார்த்தைதான். சுந்தரசோழன் என்றே குறிக்கவேண்டும். வடபுலத்தைத் தன் அரசின்கீழ்க் கொணர முயன்றிருக்கிறான். பராந்தகனுடைய ஆட்சியின் நாற்பத்தெட்டாம் ஆண்டு கொண்டதாக வனமாலதின்னேயில் கிடைக்கும் கன்னடக் கல்வெட்டு இதை எடுத்துக் காட்டுகிறது. வீரன் ஒருவன் மரணத்துக்காக எழுப்பப்பெற்ற நடுகல் அது. பராந்தகன் அதற்குப் பிறகு நீண்டகாலம் உயிருடன் இல்லைபோலும்.

அதனால் கிருஷ்ணன் மறுபடியும் சோழர் விஷயத்திலே தலையிட நேர்ந்தது. இந்தத் தடவை அவன் முன் தடவைகளைப் போல் வெற்றிகொண்டபிறகு திரும்பித் தன் நாடு சென்றுவிடவில்லை. வெற்றிகொண்ட நாடுகளைத் தன்னுடைய ஆதிக்கியத்தில் கொண்டு அரசுபுரியவும் முனைந்தான். செங்கற்பட்டு ஜில்லா கூரம் என்னுமிடத்தில் கிடைக்கும் அவனுடைய பதினைந்தாம் ஆண்டுக் கல்வெட்டு (தெ. இ. சாசனங்கள், வால்யூம் VII, கெ. 37) முதல் அவனுடைய ஆட்சிக்காலம் முழுதும் இந்தப் பகுதியில் அவன் கல்வெட்டுகள் கிடைப்பதிலிருந்து இது தெரியவரும்.

**பார்த்திவேந்திர வர்மன்**

இவனுடைய சாசனங்கள் வட ஆர்க்காடு, செங்கல்பட்டு, சித்தூர் ஜில்லாக்களில் கிடைக்கின்றன வென்பதையும் அவை அவனுடைய ஆட்சியின் பதினைந்தாம் ஆண்டுவரையில் உள்ளன என்பதையும் நாம் மேலே குறிப்பிட்டிருக்கிறோம். சாதாரணமாக அவனுடைய கல்வெட்டுக்கள் பதின்மூன்றாம் ஆண்டுவரையில்தான் அதிகமாகக் கிடைக்கின்றன. பதினான்காம் ஆண்டுச் சாசனங்கள் இரண்டும் பதினைந்தாம் ஆண்டுச் சாசனம் ஒன்றும் கிடைத்துள்ளன. பதினைந்தாம் ஆண்டுச் சாசனம் செங்கற்பட்டு ஜில்லா பரந்தூர் கிராமத்திலிருந்து கிட்டியுள்ளது. கோவிலில் ஸ்ரீபலி கொட்டும்போது இசை எழுப்ப ஏழு வாத்தியக்காரர்களுக்கு இறையிலி நிலம் அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. (1923-ஆம் ஆண்டு 75-ந. சாசனம்). பதினான்காம் ஆண்டு கொண்ட மற்ற இரண்டும் திருப்பதி தேவஸ்தானத்திலிருந்து கிடைப்பவை.

அவை சத்திவிடங்கனாயின ஸ்ரீ காடபட்டிகள் பெற்கடையார் மகளார் சாமவ்வையான காடவப் பெருந்தேவி கோவிலுக்கு அளித்த தானத்தைக் குறிப்பனவாகும். இந்தச் சாசனங்களிலே அரசன் பார்த்திவேந்திர வர்மன் பெயர் ஒன்றிலே கோப் பாத்ர மஹேந்த்ர பன்மர் என்றும் மற்றொன்றில் கோப் பாத்ர பந்மர் என்றும் காணப்படுகிறது. இந்தப் பெயர் பற்பல விதமாகப் பல்வேறு எழுத்துப் பிழைகளுடன் எழுதப்பட்டு வந்திருப்பதை நாம் அறிவோம். 'வீரபாண்டியன் தலை கொண்ட பாதம மகாராஜா' என்ற உருவமும் காணப்படுகிறது. (தே. இ. சாசனங்கள், மூன்றாம் வால்யூம், 152-ந.) இந்தச் சாசனங்களில் வரும் பெயரான சத்திவிடங்கன் என்பது, முதலாம் ராஜராஜ சோழன் மாதேவியான தந்தி சத்தி விடங்கியாரான ஒலோக மாதேவியாரின் பெயரை நமக்கு நினைப்பூட்டுகிறது. இவ்விருவருக்கும் உறவு முறை ஏதாவது உண்டாவென்பது நமக்குத் தெரியாது. எவ்விதமாயினும் இந்தச் சாசனங்களின் அரசன் பார்த்திவேந்திர வர்மனேயாவான் என்று கொள்வதில் தவறு ஒன்றும் இல்லை. அவன் வேறு யாராகவும் இருக்கமுடியாது. (திருப்பதி தேவஸ்தான சாசனங்கள், வால்யூம் I, ந. 8-9; இன்னும் தே. இ. சாசனங்கள், வால்யூம் IV, ந. 671-2).

சுந்தரசோழனுக்குப் பின்னல் வந்த மன்னர்களின் சாசனங்கள் சிலவற்றுள் அவன் போன்மாளிகையிற் றுஞ்சின தேவர் என்று குறிக்கப்பெறுகிருன். பொன் மாளிகை என்பது காஞ்சீபுரத்திலிருந்த அரண்மனையின் பெயராகும். இதனல் அவன் காஞ்சீபுரத்திலிருந்த பொன் மாளிகை யென்னும் அரண்மனையில் இறந்தான் என்பதையே அந்தத் தொடர் குறிக்கிறது. (தே. இ. சாசனங்கள், மூன்ரும் வால்யூம், பக்கம் 228, கீழ்க்குறிப்பு) அவன் மற்ற அரசர்களைப்போலப் போரில் இறந்தான் என்று கூருமல், பொன் மாளிகையில் இறந்தான் எனக் கூறுவதிலே சிறப்பான அம்சம் ஏதோ ஒன்று இருத்தல் வேண்டும். அது என்ன யென்பது சுலபமாக விளங்காவிட்டாலும், சுந்தரசோழன் மரணம் சாதாரணச் சாவு அல்ல என்பது விளங்கும்.

அவன் காலமானது கி. பி. 964 - 5-ஆம் ஆண்டாகக் கொள்ளவேண்டும் என்பதை மேலே காட்டினேம். அந்தச் சமயத்தில், மதுரை கொண்ட ராஜகேசரியான கண்டராதித்தியனுடைய பதினன்காம் ஆண்டையும் பதினேழாம் ஆண்டையும் கொண்ட மூன்று கல்வெட்டுகள் காவிரிக்கரைப் பகுதியில் காணப்படுகின்றன. அப்போது நாடு இரு பிளவாகப் பிரிந்து ஒன்றுக்கு ஒன்று விரோதம் பாராட்டி நின்ற நிலையில், வட பகுதி மன்னனுன கண்டராதித்தியனுடைய கல்வெட்டுகள் தென்பாதியில் காண்பதைச் சாதாரணமான நிகழ்ச்சியாகக் கொள்ளமுடியாது.

தென் பகுதியையும் கைக்கொண்டு இருபகுதிகளை ஒன்ருக்க வேண்டுமென்ற முயற்சியில் கண்டராதித்தியன் இறங்கியிருத்தல்கூடும். அவ்விதமாயின் அவன் அதில் ஓர் அளவு வெற்றிபெற்ருன் என்றே கொள்ளவேண்டும். தென்பகுதியை வெற்றிகொண்ட அவன் அங்கே அரசுசெலுத்தி வந்த சுந்தர சோழனைச் சிறைப்பிடித்து வந்து காஞ்சீபுரத்து அரண்மனையிலே வசிக்க செய்திருக்கலாம். அவ்விதம் அவன் சிறைப்பட்டிருந்த விவரத்தையே பொன்மாளிகையில் துஞ்சிய தேவர் என்ற அவனுடைய பெயர் குறிக்கிறது போலும்.

கண்டராதித்தியன் தன் தமையன் குமாரன் சுந்தரசோழனுடைய உரிமையை ஏற்காமல் முதுமைப் பருவத்திலிருந்த தந்தைக்கு விரோதமாகக் கிளம்பி வடபத்தியில் தனியரசு ஸ்தாபித்த நாளையில் அவனும் பெயரளவிலேதான் அரசன் என்று இருந்தான் போலும். அவன் மகனை பார்த்திவேந்

திர வர்மனே தந்தையின் சார்பில் ராஜ்ய பாரத்தைத் தாங்கி வந்தான். அதனால் சுமார் கி. பி. 954-55-ல் முதல் பராந்தக சோழன் இறந்து போனதும் கண்டராதித்தியன் தன் மகனை, பார்த்திவேந்திரனை, முறைப்படி இளவரசாகப் பட்டம் கட்டி. நாட்டின் நிர்வாகத்தை அவனிடம் ஒப்படைத்தான் போலும்.

பார்த்திவேந்திரனுடைய சாசனங்கள் அவன் ஆட்சியின் பதிமூன்றும் ஆண்டுவரையில்தான் அதிகமாகக் கிடைத்திருக்கின்றன. அது கி. பி. 967-ஆம் ஆண்டு ஆகும். அது ராஷ்டிரகூட அரசனை கிருஷ்ணனுடைய கடைசிக் காலம். அவன் அப்போது இறந்ததும், அதுகாறும் கண்டராதித்தியனுக்கும் பார்த்திவேந்திர வர்மனுக்கும் வடபகுதியில் இருந்து வந்த ஆதரவு போய்விட்டது.

## இரண்டாம் ஆதித்தியன்

தென் பகுதியிலே அரசனாக விளங்கிய சுந்தர சோழன் சுமார் கி. பி. 964-5-ல் இறந்துபோனதும் அவன் மகனை ஆதித்திய கரிகாலன் பரகேசரி என்ற பட்டத்துடன் சிங்காதனம் ஏறியிருத்தல் வேண்டும். அவன் தன் தாயாதிகளான வடபகுதியினரை விரோதக் கண்கொண்டே பாவித்து அவர்களை வென்று அவர்கள் நாட்டையும் கைப்பற்றி, சோழ அரசு இரு பகுதிகளையும் கொண்டதாக அமைப்பதற்கு உரிய சமயத்தை எதிர்பார்த்திருத்தல் இயற்கையே. அந்தச் சமயம் இப்போது கிட்டியது. கிருஷ்ணனுடைய மரணம் ராஷ்டிரகூட ராஜ்யத்தை நிலைகுலையச் செய்து விட்டது. அந்த நாட்டிலே உள்நாட்டுச் சண்டைகள் ஏற்பட்டன. வடக்கிலிருந்து வேறு விரோதிகள் அவர்கள் நாட்டைக் கவர முயன்று வந்தனர். அதனால் அவர்கள் சோழர்களுடைய விவகாரத்தில் தலையிடுவதற்கு அதிக அவகாசமும் சௌகரியமும் இல்லாமல் போயிற்று. ஆதித்தியன் இந்தச் சமயத்தைப் பயன்படுத்திக் கொண்டு வடபகுதியின் மீது படையெடுத்துச் சென்றான். பார்த்திவேந்திர வர்மனுடைய பதின்மூன்றும் ஆண்டுக்கு மேல் கல்வெட்டுக்கள் அதிகம் கிடைக்காமையைக் கொண்டு ஆதித்தியன் வெற்றி பெற்றான் என்பது பெறப்படும். பார்த்திவேந்திரனுடைய ஆட்சி அவனுடைய நாட்டின் வடவெல்லையை ஒட்டிய சில பகுதிகளில் மட்டும் ஊசலாடி வந்தது. அதுவும் சிறிது காலம் தான். பதினைந்தாம் ஆண்டுக்கு மேல் அவனுடைய சாசனங்கள் கிடைக்கவில்லை. அது கி. பி. 969-ஆம் ஆண்டு ஆகும். அப்போது பார்த்திவேந்திர வர்மன் காலமாகி

இருக்கவேண்டும். அதற்குப் பிறகே அவன் தம்பி மதுராந்தகன் சிங்காதனம் ஏறியிருத்தல் வேண்டும்.

வெற்றி வீரனாகத் திகழ்ந்த ஆதித்தியனை மதுராந்தகனால் போரில் புறங்காண முடியவில்லை. அதைக் கண்ட அவன் மனம் தடுமாறியிருத்தல் கூடும். வேறு வழியில்லாமல் அவன் வஞ்சனையால் ஆதித்தியனைக் கொன்று தன் காரியத்தைச் சாதித்துக்கொள்ள முன் வந்தான். அவன் நினைத்தபடியே செய்து முடித்தான்.

பெருநற்கிள்ளி

ஆனால் அப்போதும் தென்பகுதியைக் கைக்கொண்டு அவன் சோழ நாட்டின் தனிப்பேரரசனாக விளங்கமுடியவில்லை. ஆதித்திய கரிகாலன் தம்பியான அருண்மொழி வர்மன், ராஜகேசரி என்னும் பட்டத்துடனும் பெருநற்கிள்ளி என்னும் அபிஷேக நாமத்துடனும் சிங்காதனம் ஏறினான். இவன்தான் பிற்காலத்தில் ராஜராஜசோழன் என்று புகழ் பெற்றவன். தன் அண்ணன் இறக்கும் தறுவாயில் விட்ட இடத்திலிருந்து போரைத் தொடர்ந்து நடத்த முற்பட்டான்.

மதுராந்தகனும் இராஜராஜனும்

இந்தத் தாயாதிச் சண்டை நெருக்கடியான கட்டத்தை அடைந்தது. தென் பகுதியிலே சுந்தர சோழனும் அவன் மகன் ஆதித்திய கரிகாலனும்: வடபகுதியில் கண்டராதித்தனும் பார்த்திவேந்திரனும்: இவ்விதம் இரு தரப்பிலும் இரண்டு தலைமுறைகள், இருபது வருஷகாலம்போர் நிகழ்த்தியாகிவிட்டது. இப்போது கடைசியாக இறந்தவர்களுடைய சகோதரர்கள் அந்தச் சண்டையைத் தொடர அரங்கில் குதித்துவிட்டனர். இதனால் நாட்டுக்கே பெரிய அனர்த்தம் நேரிடக்கூடும்.

இதை உணர்ந்த மற்றவர்கள் சண்டையை நிறுத்தி அவர்களிடையே சமரசம் ஏற்படுத்த விழைந்தனர். கண்டராதித்தியன் மனைவியும் மதுராந்தகன் தாயுமான செம்பியன் மாதேவி அதிலே முக்கியமாக ஈடுபட்டிருந்தாள் என்னலாம். ராஜராஜனும் நிலைமையை ஊன்றிக் கவனித்துக் கொஞ்சம் விட்டுப் பிடிப்பதே மேல் என்று எண்ணியிருக்கலாம். எனினும் தனக்குக் கிட்டவிருந்த அரசுரிமையை இழக்கத் தயாராகவும் இல்லை. ஆகவே, ஒரு நிபந்தனையின்மீது அவன் சமரசத்துக்கு இணங்கியிருத்தல் கூடும்.

வயதில் மூத்தவனும் உறவு முறையில் பெரியவனுமான மதுராந்தக உத்தம சோழன் அரசனாக அமர்ந்திருப்பதை அவன் ஆக்ஷேபிக்கவில்லை. ஆனால் அவனுக்குப் பிறகு அரசுரிமை மதுராந்தகனுடைய சந்ததியாருக்குப் போய்விடக் கூடாது, தனக்கே கிட்டவேண்டும்; அதை நிரூபிக்க அப்போதே தன்னை யுவராஜனாக அமர்த்தி அபிஷேகம் செய்து விடவேண்டும் என்று ராஜராஜன் விரும்பினான்.

இந்த ஏற்பாட்டுக்கு மதுராந்தகன் ஒப்புக்கொண்டால் மட்டும் போதாது. அவன் மகன் கண்டராதித்தியனும் இந்த ஏற்பாட்டுக்கு இணங்கினான். அரசுரிமையை உதறித் தெய்வ நெறியில் இறங்கினான். அவனே ராஜராஜன் ஆட்சிக் காலத்தில் கோயில் நிர்வாகத்தைக் கண்காணிக்கும் அதிகாரியாக விளங்கியவன். சிவஞான தேவர் என்று குறிக்கப்பெறுபவன்.

முதலாம் ராஜராஜ சோழன்

ராஜராஜன் ஆட்சிக் காலத்திலேதான் கொங்கு நாட்டில் புதிய அரச பரம்பரை ஒன்று தோன்றியது. அவர்கள் சோழர் என்ற பட்டப்பெயரைச் சூட்டிக்கொண்டிருந்தனர். ஆனால் சோழ பரம்பரையினர் அல்லர். தஞ்சாவூரிலிருந்து ஆண்ட சக்கரவர்த்தி பரம்பரையினரைப்போல அவர்களும் ராஜகேசரிவர்மன், பரகேசரிவர்மன் என்ற பட்டப் பெயர்களை மாறிமாறித் தரித்து வந்திருக்கிறார்கள். அவர்களுடைய அதிகாரிகளும் சோழ அதிகாரிகளின் பெயர்களையே தரித்துக் கொண்டிருந்தனர். இது அவர்களுடைய கல்வெட்டுகளில் காணும் அதிகாரிகளின் பெயர்களிலிருந்து விளங்கும். மற்றும் ஒன்று. சோழர் வலிகுன்றி அவர்களுடைய ஸ்தானத்தில் பாண்டியர்கள் தோன்றிய நாளிலே இந்தக் கொங்கு மன்னர்கள் சோழன் என்ற பட்டப்பெயரை விடுத்துப் பாண்டிய விருதைத் தரித்து வந்திருக்கிறார்கள். ஆயினும், ராஜகேசரி பரகேசரி விருதை விடவில்லை.

இந்தத் தொகுப்பிலே உள்ள சாசனங்களுள் ஏறக்குறைய நாலில் ஒரு பங்கு கொங்கு நாட்டிலிருந்து பெறப்பட்டவை. கொங்கு நாட்டு மன்னர்களைப்பற்றிய சரித்திரத்தை இதுவரையில் யாரும் ஆராய்ந்து எழுதவில்லை. அதைப் பற்றிச் சற்று விரிவாகக் கூறவேண்டியிருக்கிறது. அதை அடுத்த பகுதியில் கூறுவோம்.

# கோயிற் சாசனங்கள்

## [மூன்றாம் பாகம்]

—:o:—

### விஜயமங்கலம் — Vijayamaṅgalam

கோயம்புத்தூர் ஜில்லா ஈரோடு தாலூகாவில் உள்ளது இவ்வூர். இவ் விடத்திலிருந்து பிரதி செய்யப்பட்ட பத்துச் சாசனங்கள் 267–276 எ. ஆக இந்தத் தொகுதியின் முதல் பாகத்தில் வெளியாகியுள்ளன.

This village, now in the Erode taluk of the Coimbatore district, was included in the Perundurai taluk of the district in the days of Mackenzie.

சாசனம் — 1091] [D. 2811-க

'கோயம்புத்தூர் ஜில்லா பெருந்துறை தாலூகா விஜயமங்கலம் மிட்டா மவுசெ (சேர்ந்த) பெடாரியூர் நாகேசுவர சுவாமி கோவில் கர்ப்பகிரகத்தில் வடபுறம் கிழக்கு மூலையில் இருக்கப்பட்ட சிலா சாசனம்' என்று மக்கென்ஸி யின் பிரதியில் குறிக்கப்பட்டிருக்கிறது.

(No. 558 of 1905). On the south wall (east side) of the central shrine in the Nāgēśvarasvāmin temple. Record dated in the 21st year, Paṅguni, in the reign of the Koṅgu king **Virarajendradeva** (written by mistake as Vīrarājakēsaridēva), registering the gift of one *palañśalāgai achchu* of gold by a S'ivabrahmaṇa of Piḍāriyūr in Pūndurai-nāḍu for a twilight lamp in the temple of Tirunagīśvaram-uḍaiyār at Vijayamaṅgalam. The Epigraphical Report gives the date as the 41st year.

ஸ்வஸ்தி [॥*] வீற ராச கேசரி தேவருக்கு [1] ஆண்டு உம்க இருபத் தொன்றாவது [2] பங்குனி மீ பூந்துறை நாட்டு[ப்*] பெடாரியூரில்

---

1. 'வீர ராஜேந்திர தேவர்க்கு' என்று வாசிக்க.

2. சாசன இலாகாவினர் இதை 'நாற்பத்தொன்றாவது' என்று வாசித்திருக்கிறார்கள்.

ஆருட[1] முகமலை யிந்த நாயநார் கொயில் காணி ஒடய சிவப் பிரும்மணரில் ஆலம்பிய கொத்தறத்து ரு ..................ய..................
ருஞ் செய்வ புறந்தற செக்கரவர்த்தியென்[2] புகைய மலை விச[ய*] மங்கலத்தா [ரூ](ரு)டயா[ர் திருநாகீசுவரமுடையா*] ருக்கு னந்தா தீபம்[3] ஒன்றுக்கு ஒடிக்கின பளஞ்சால[ர*]கை அச்சொன்று யிக் கொயில் சிவப் பிரும்மணரில் ஆத்தரய கொத் தரத்து ஆளவந்தீ மாணிக்கன் அவனுடைய[4] மாடலய கொத்த ரத்து உடயனை அவிநாசி உள்ளு[ட்*]டா(யா)ரும் பிள்ளையா ருக்கு வாளவந்தாரும் கைக்கொண்டொம் [॥*]

சாசனம் — 1092] [D. 2811-எ

அதே கோவிலில் கர்ப்பகிரகம் தென்புறத்தில் எழுதியிருக்கிற சிலா சாசனம்.

(No. 578 of 1905). On the south wall of the [maṇḍapa in front of the] central shrine in the same temple. Record dated in S'aka 1085 which was the 7th year in the reign of the Koṅgu king **Vikramacholadeva** stating that the maṇḍapa and the prākāra of the temple of god Tirunāgīśvarasvāmin at Vijayamaṅgalam were re-constructed and that before beginning the work of renovation copies of all the inscriptions registering the gift of twilight lamps found on the walls were made and re-copied after the work was completed. Of such copies made the following are found:

(1) Record dated in the 14th year in the reign of **Kulottungacholadeva** registering the gift of one *puduch-chalāgai achchu* of gold by one of the captains, *Vēḷāḷan-paḍait-talai*, probably stationed at Vijayamaṅgalam.

(2) Another record of the same year, i.e., the 14th regnal year of **Kulottungachola** registering a similar gift by a *Kaikkōḷar*.

(3) Record dated in the 2nd year in the reign of **Virarajendradeva** registering the gift of one *puduch-chalāgai achchu* by a captain, *Vēḷāḷan paḍait-talai*.

---

1. 'ஆளுடையார்' என்று வாசிக்க.
2. 'சைவபுரந்தர சக்கரவர்த்தியென்' என வாசிக்க.
3. 'நுந்தா தீபம்' என்று வாசிக்க.
4. 'உள்ளிட்டாரும்' என்று இருத்தல் வேண்டும்.

(4) Another record dated in the 2nd+1st year in the reign of **Virarajendradeva** registering a similar transaction by a *Paṭṭāli Vēṭṭuvan* of Vijayamangalam. The record stops with this.

From the Epigraphical Report it is learnt that one more transaction, the 5th, of the reign of Vīrarājēndra is also found re-engraved there. Again, the report gives the S'aka date as 1[1]85 which would correspond to A.D. 1263-64. Another inscription (No. 555 of 1905) in the same temple gives S'aka 1179 or A.D. 1257-8 as the second regnal year of this Kongu king Vikramachōḷadēva, thus yielding A.D. 1256-7 as his initial date.

ஸ்வஸ்தி ஸ்ரீ [॥*] விக்கிறம சொழ தேவர்க்கு ஆண்டு யெழாவது சகை யாணடு ஆயிரத்தி யெண்பத்தி அஞ்சு[1] குரும்பநாட்டு[2] விஜயமங்கலத்து ஓ[டை*]டயார் திருநாகெசுவற சுவாமி கொயில் முதல்ப் பிருகாற மண்டபமாகி[3] திருப்பணி செய்யக் கொண்ட படியால் மண்டபம் செயிது முன்னுள் வைத்த சந்தியா தீபங்களையெ மங்கலம் சொன்ன படியெடுத்து மண்[டபத்தி*]ல் வெட்டினபடி யாவது:

ஸ்ரீ குலோத்துங்க சோள தேவர்க்கு பதிநாலாவது விசய மங்கலத்து வெளாளன் ப[டை*]டத் தலைகளில் நம்ம தெவன் ஆருக்குய[4] திருநாகெசுவற மு[டை*]டயாருக்கு வைத்த சந்தியா தீபம் ஒன்று[க்*] கொடிக்கிந(ா) [பு]து செலாகை அச்சு ஒன்றும்.

ஸ்ரீ குலோத்துங்க சோளர்க்கு ஆண்டு பதிநாலாவது விசய மங்கலத்து கைககொள ளமற மெகு தெவனு ருக்குபரு[4]-திருநாகெசுவற மு[டை*]டயாருக்கு வைத்த சந்தியா தீபம் ஒண்ணு[க்*] கொ[ா*]டிக்கின புது சாலகை அச் சொன்று[ம்*].

ஸ்ரீ விற [ரு*]சந்திற தேவர்க்கு ரெண்டாவது விஜய மங்கலத்து வெளாளன் ப[டை*]டத்தலைகளில் மாமொதெவன் மனசெரில் உடயான் பெர் கணக்கப் பிள்ளை யாருக்குய[4] திருநாகெசுவற முடயாருக்கு வைத்த சந்தியா தீபம் ஒண்ணு[க்*] கொடிக்கின புதுச் ச(ா)லாகை [ஒன்றும்*]

---

1. சாசன இலாகாவினர், 'யாண்டு ஆயிரத் தொரு நூற்றெண்பத்தைந்து' என வாசித்திருக்கிறார்கள்.

2. 'குறுப்பு நாட்டு' என்று வாசிக்க.

3. 'மண்டபம் இறக்கி' என்று இருத்தல் வேண்டும்.

4. 'ஆளுடையார்' என்று இருத்தல் வேண்டும்.

ஸ்ரீ விற [ரூ*]சந்திற தேவர்க்கு ஆண்டு இறண்டாவதுக் கெதிருவது விசய மங்கலத்து பட்டாலி வெட்டுவன் சொக்க கூறன்............[1]

சாசனம் — 1093] [D. 2811-அ

விஜயபுரி ஈசுவரன் கோவில் மகா மண்டபத்திலே தென்புறம் இருக்கப் பட்ட சிலாசாசனம்.

(No. 579 of 1905). At the same place. Record dated in the 13th year in the reign of the Koṅgu king **Kulottungacholadeva** registering the gift by Kulōttuṅgachōḻa Vikramādityadēva, a *sāmanta* of the king (*Perumāḷ*), of 2 *achchu* of *Paḻañśalāgai* for *Tiruppudiyidu* and one *achchu* of *puduch-chalāgai* for a twilight lamp in the temple of god Tirunāgīśvaram-uḍaiyār at Vijayamaṅgalam in Kuṟuppu-nāḍu.

ஸ்வஸ்தி ஸ்ரீ [॥*] குலோத்துங்க சோழ தேவர்க்கு ஆண்டு பதிமூன்ருவது: பெருமாள் [சாமந்தர்*] குலொத்துங்க சொள விக்கிறமா தித்த தெவன் குரும்ப நாட்டு விசய மங்கலத்தா ருக்குய...[2] திரு நாகெசுவறமு[டை*]டயாருக்கு திருப்புகிஇதர்க்கு கொடிக்கன்ன[3] வச்சு பளம்ஞ்சலகை[4] யிறண்டு; சந்தியாதீபம் [ஒன்றுக்*]கொடிக் கன புதுச் சாலகை அச் சொன்று கைக் கொண்டொம் யிக் கொயில் காணியு[டை*]டய சிவப் பிறும்மணரில் ஆ(தி)த்தருய கொத்திறம் தக்ஷிணாமூர்த்தி குரும்ப நாட்டுப் பட்டனும் மாணிக்கப் பட்டனும் மாடல(வி) கொத்தறத்தில் தெத்தியப்ப னும் இம் மூவர் உபயம் காண(ங்) கல(லு) நெல்லு அளந்து வெஞ்சநாதி உள்பட செலுத்துவொமாகவும். யிது சந்திருதித்தர் உள்ள வரைக்கும் செலுத்திவிப்பாருகவும். கொடங் கொண்டு கொவில்ப் புகுவா[ர் செலுத்துவா*]ருகவும். [இது*] ப(ற்)[ன்] மெசுவற ரெக்ஷெ [॥*]

---

1. சாசனம் இதனேடு நின்றுவிடுகிறது. சாசன இலாகாவின் அறிக்கையிலிருந்து வீரராஜேந்திர தேவன் காலத்துச் சாசனம் மற்றொன்றும் சேர்ந்து மொத்தம் ஐந்து சாசனங்களின் படியெடுத்து வெட்டியிருப்பதாகக் காண்கிறது.

2. 'ஆளுடையார்' என்று வாசிக்க.

3. 'திருப்புதியிதுக்கு ஒடுக்கின' என இருத்தல் வேண்டும்.

4. 'அச்சு பழஞ்சலாகை' என்று வாசிக்க.

சாசனம் — 1094 ]  [ D. 2811-சு

ஷை ஊர் பெருமாள் கோவில் மகாமண்டபத்தில் சந்நிதிக்குத் தென்புறம் மேற்குச் சுவரில் இருந்த சிலாசாசனம்.

On the south wall (western side) of the central shrine in the temple of Vishṇu known as Kariyamāṇikka-p-perumāḷ in the village. Record, the date of which is lost, in the reign of the Pāṇḍya king Tribhuvana chakravartin **Sundara Pandyadeva** registering the gift by a resident of Pāṇḍimaṇḍalam of one *achchu* gold for two lamps in the temple of Karu-māṇikka-Āḻvār referred to in the inscription as *Tirumēr-kōyil* (the western temple).

From the Epigraphical report it is learnt that the temple was also known as Chittiramēḻi-viṇṇagar. There are 5 inscriptions of Jaṭāvarman Sundara Pāṇḍyadēva in this temple (No. 548 to 551 and 553 of 1905) registering gift of lamps. But it is not possible to identify this inscription with anyone of the above, for want of further details.

[ஸ்வஸ்தி ஸ்ரீ*] திரிவிக்கிறம சக்கரவர்தி சுந்திறப்படை தேவர்க்கு [1]......ஆவது குருப்ப நாட்டில் விசய மங்கலத்து திரு மெர்க்கு கொயில்[2]......[3]நாயநார் க்குமாணிக்க மூவர்க்கு[4] பாண்டி மண்டலத்து தறனூயறுக்கு அரையான் திரை தெவரை குவல யத்தாரைபவைத்தா யிந்த கொயிர்க் காணி உடய புவன காசம் கொத்தரது அளசி மணவாள மாளை கைகொள்ள அச்சு ஓண் ணும் கொண்டென்ன விளக்கு ரெண்டு கொவில்ப் பூராவும் ஆசா றம் செலுத்துவதாக. ஸ்ரீ வெஷ்ணவாளை ரெக்ஷிக்க[5] [||*]

---

1. 'திரிபுவன சக்கரவர்த்தி சுந்தரபாண்டிய தேவர்க்கு' என்று வாசிக்க.

2. 'திருமெற்கொயில்' என வாசிக்க.

3. 'சித்திரமெழி விண்ணகர்' என்று பூர்த்தி செய்க.

4. 'கருமாணிக்க ஆழ்வார்க்கு' என வாசிக்க.

5. 'ஸ்ரீ வைஷ்ணவ ரக்ஷை' என்று இருத்தல் வேண்டும். சாசனம் மிகவும் பிழைபடப் பிரதி செய்யப்பெற்றுள்ளது. திருத்தமான பாடம் கொடுப்பது கஷ்டமாக இருக்கிறது. எனினும் சித்திரமேழி விண்ணகர் நாயனார் கருமாணிக்க ஆழ்வார் கோவிலில் விளக்கு எரிக்கப் பாண்டி மண்டலத்தைச் சேர்ந்த ஒருவன் ஓர் அச்சுப் பொன் கொடுத்த செய்தியைக் கூறுகிறதென்பது தெரியவரும்.

**கொடுவாய்** **Koḍuvāy**

*இவ்வூர் கோயம்புத்தூர் ஜில்லா தாராபுரம் தாலூகாவில் இருக்கிறது. இங்கே கிடைத்த சாசனம் ஒன்று முதல் பாகத்தில் 303-ெ ஆக வெளியாகியுள்ளது.*

Koḍuvāy is now a village in the Dhārāpuram taluk of the Coimbatore district.

சாசனம் — **1095]** [D. *2804-ச*

*விண்ணிறைந்த பெருமாள் என்று வழங்கப்பெறும் பெரிய பெருமாள் கோவில் தென்புறத்துச் சாசனம்.*

(No. 108 of 1920). On the base of the south wall of the central shrine in the Viṇṇiṟainda-perumāḷ temple. Record dated in Śaka 1411, Sādhāraṇa, Kārttikai 12, in the reign of the Ummattūr chief Mahāmaṇḍalēśvara **Vira Nanja-raja-Udaiyar** stating that the inhabitants of the Poṅgalūrkka-nāḍu repaired the temple of Viṇṇiṟainda-perumāḷ of the village which had been ruined in the troublous time (*vāṇam*), re-installed the image of Perumāḷ from Maṇaṟpaḍaivīdu and re-engraved on its walls the old defaced inscriptions of the Chōḷa and the Chēra kings recording the gift of two villages Ichchikkaraṇi and Valippūr for daily worship, offerings and repairs in the temple. Mentions also Valippukka-nāḍu.

It is seen from the Epigraphical report that this record is written on the north and west walls of the central shrine in the temple.

ஸ்வஸ்தி [॥*] ஸ்ரீமன் மகா மண்டலீசுவறன் வீறனந்து ருயரு [டை]டயார்[1] பிருதிவி ருச்சியம் பண்ணி அருளா நினற காலததில் (கலி) சகாப்தம ௲௪௱௰௧-ஈு மெல் செல்லா நின்ற சாத[ா*]றண ஞூ கா[ர்*]த்திகை மீ ௰௨ உ பொங்கலூர்கரை நாட்(டு)[ட]வ மரும். கொடுவாயில் மாடம் நிரைந்த மணி மண்டபத்து நிறை வற நிரைந்து குறைவர கூடி வாட்டம் இன்றி கூட்டம் பெருகி ஒருமித்து யிருந்து யெங்கள் நாட்டில் கொடுவாயில் பெருமாள் விண்ணிரைந்த பெரிய பெருமாள் கொவில் வாணத்திலெ (யி) [லி]ளுந்து சீறணமாயி அனேதத[ா*]ண்டுங்க பாழாயிக் கிடக்கயில் இப்பொளுது உபான முதல் பஞ்சாங்கம் முதலாக சரிந்து சிதரிக் கிடந்த கல்லும் எடுதது கட்டி வைத்து கொவிலும் கட்டி வைத்து முகப்பில் வைத்து பூர்வம் பெருமாள் மணைப்படை

---

1. 'வீர நஞ்சயராய உடையார்' என்று வாசிக்க.

வீட்டில் யெழுங்கருளி யிருந்த பெருமாளையும் யெழுந்தருளி வித்து சம்புரொாக்ஷணையும் பண்ணிவித்து செரன் சொழன் காலத் திலெ விட்ட திருவிடைஆட்டம் யிச்சிக்காணி வலிப்பூர் கல் வெட்டு சிறணத்[தை*]தயும் உ[த்*]தாறணம் பண்ணி வழ மான வலிப்பூர் கரை நாட்டு இச்சிக்காறணியும் வலிப்பூரும் இவ்விறண்டூருக்கும் உண்டான நஞ்சை புஞ்சை நார்ப்பாங்கு யெல்லைக்குள்ள மெல் நொக்கிய மறமும் கீழ் நொக்கிய கிணரும் ஆமையொடு நண்டுப் பாளி உள்ளப்பட்ட நிலமும் இந்த வூருக்கு வூருகளுக்கு வருங் கந்தாயம் காணிக்கை பிறவ(ர)வரி நாட்டுவினி யொகம் அதிகாற வர்த்தனை மற்றும் யெப்பெர்ப்பட்ட சருவ சுவாமி பங்குகளும் பெரிய பெருமாளுக்கு திருவாருதனை திருப் பணி திருனந்தா தீபம் வச்சத்துக்கும் இந்த ரெண்டு வூரும் திரு விடையாட்டமாக சந்திருதித்தியர் வரைக்கும் நடப்பதாக சிற்ண மாயிருந்த கல்வெட்டு உத்தாறணம் பண்ணிக் கொடுத்தொம் பொங்கலூர் கரை நாட்டு நாட்டவரும். இந்த தர்ம்மம் காத் தான் அடி யெங்கள் தலை மெலெ. யி(ரு)ந்த தர்ம்மம் இறக்குவான் யெழச்சம் அருவான்[1] இந்த தன்மம் ஸ்ரீ ஹரிவிஷ்ணுவும் பலமாஞ யவளரும் இரெக்ஷிகலு[2]........................இப்படிக்கு கொடு வாயில் பூவுலவன் காகுத்தன் எளுத்து......இப்படிக்கு தாபும் பிறவிப்பான் யெழுத்து. யிப்படிக்கி பால்வெளாழன் பையதலை யிருன் எழுத்து. இப்படி தென்பள்ளி உடையான் எழுத்து. இப்படிக்கி குடைத்து சுவாமி பெருமாள் எழுத்து. இப்படிக்கி குரையூர் பூமியான் எழுத்து. இப்படிக்கி அலகைத் தொளுச் சனம் பெருமான் எழுத்து. இப்படிக்கி புத்தூர் வாழாழ வழி யெழுத்து. யிப்படிக்கி பல்லக் கொலை பிறமாண்டன் யெழுத்து. இப்படிக்கி உபாயனூரு நல்லப் பெருமான் எழுத்து. யிப்படிக்கி பெருந் தொளுவு தாயாண்டான் யெழுத்து. இப்படிக்கி நக்கம் பாடி கொம்மயான் எழுத்து. இப்படிக்கி புத்தரைச்சலு[டை*]ட யான் யெழுத்து. யிப்படிக்கி இச் செம்பு தொழல்லணன் யெழுத்து [॥*][3]

---

1. 'வழி எச்சம் அறுவான்' என வாசிக்க.

2. 'இத் தன்மம் ஸ்ரீ வைஷ்ணவ ரக்ஷை' என்பது போன்ற ஒரு வாசகமாக இருத்தல் வேண்டும்.

3. சாசன இலாகாவின் அறிக்கையிலிருந்து இந்தச் சாசனம் கர்ப்ப கிரகத்தின் வடபுறத்திலும் மேற்குப்புறத்திலும் பொறிக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது

சாசனம் —1096] [D. 2804-ந.

அதே கோவிலில் மகா மண்டபத்தின் தென்புறம் உள்ள சாசனம்.

(No. 109 of 1920). [On the base of the south wall of the central shrine in the Viṇṇirainda-perumaḷ temple]. Record dated in S'aka 1411, Sādhāraṇa, Karttikai 12, in the reign of the Ummattūr chief **Vira Nanja-raja-udaiyar** stating that the residents of Koḍuvāy gave some land in Vēlampūṇḍi to the priest of the Perumāḷ temple to provide (*kambu*) food for Brāhmaṇa travellers.

ஸ்வஸ்தி [॥*] ஸ்ரீமன் மகா மண்டலீசுவறன் ஸ்ரீ ஸ்ரீ வீறநந்த ராயரு உ[டை*]டயா[ர்*][1] பிரிதிவி ருச்சியம் பண்ணி அருளா நின்ற காலத்தில் (கலி) சகாப்தம் ௲ ௪௱௰௧-ு மெல் செல்லா நின்ற சாதாறண வருஷம் கார்த்திகை மீ ௰௨ வ பொங்கலூர் கரை நாட்டுக் கொடுவாயில் ஊரும் ஊ[ர*]வற்றெரும்: யெங்கள் தன்ம [ெ*]தசாந்திறப் பிறுமணருக்கு உ பசிச்சு பொக[ர*]தபடி கம்பு அசனம் கற்பித்து யெங்களூரான வெலம்பூண்டியில் மல்லீசு வறன் கிணத்திர்க்கும் அடுத்த நீளஅடி பள்ளத்துக்கும் மெர்க்கு தளிகை யெல்லைக்கும் கிழக்கு அல்லாள புறத்து எல்லைக்கு தெர்க்கு இந்த நார்ப்பாங் கெல்லையும் சுரபியில் உண்டான செவு ளதும் சதுரத்து எருக்கு உளத் தக்கதாக கட்டளை பண்ணிக் குடுத்து பெருமாள் கொவில் ஸ்தானீகரையும் கர்ப்பித்தொம் ............கொடுவாயில் இவ்வூருண்டு வருகுவெரும். இது கா[த்*] தாற் அடி தலை மெலெ. இது இரைக்கு(ந)[வ]ான்[2] குடி எச்சம் அற................[3]

சாசனம்—1097] [D. 2803

கொடுவாயில் ஈசுவரன் கோவிலில் உள்ள சிலாசாசனம்.

In the Īśvara temple at Koḍuvāy. The exact place in the temple where this is found engraved is not stated. Highly damaged record dated in the 4th year in the reign of king **Vira Pandyadeva**. It is not known whether this Vīra Paṇḍya belonged to the Koṅgu line of kings or to the Pāṇḍya family of Madurai. Valippurakkā

---

1. 'வீர நஞ்சய ராய உடையார்' என்று வாசிக்க.
2. 'இறக்குவான்' என்று வாசிக்க.
3. முடிவில் சில எழுத்துக்களே விட்டுப்போயுள்ளன.

nāḍu is found mentioned in the record. It seems to register some gift to the temple of Tirunāgīśvaram-uḍaiyār at Koḍuvāy placed in the hands of the S'ivabrāhmaṇas of the temple.

ஸ்வஸ்தி ஸ்ரீ [॥*] (மன்) வீற பாண்டிய தேவர் ஆண்டு நாலாவது பொங்கலூர் கரை நாட்டு கொடுவாயில் உபிழாமன யெழனெலி காலம் குசளான காளியனகறம ஞான சம்பந்த நெத்தி திருநாகெசுவற முடயார்க்கு நான சன்னதியாக பெடிவான கொன்றுக்க வலிபுரகா நாட்டில் கொடுவாயில் நாகீசுவற முடய சிவப் பிரும் மணாள் கொசிக கொத்திறத்தில் ஆவுடையார் ஆண்டவனும் திருத்தளி ஒரு வகயும் நாங்கள் கனகயாகிப்ப வீறகான்பெரு மடுலெவொமாகுழ மதடனகொடுகுசதி கெயிலா..............[1]

## பண்புளி Paṇpuḷi

*திருநெல்வேலி ஜில்லா, தென்காசி தாலூகா, பண்புளி கிராமத்தில் திருமலை ராமஸ்வாமி தேவஸ்தானத்திலே உள்ள மூன்று செப்பேட்டுச் சாசனங்களிலே இரண்டுக்கு இவ்விடம் பிரதிகள் காணப்படுகின்றன. மூன்றாவது சாசனம் பிரதி செய்யப்பெறவில்லை. எனினும் இவ்விரண்டும் மக்கென்ஸியின் காலத்தில் பிரதி செய்யப்பட்டன வல்ல என்றே தெரிகிறது.*

The following two records are copies of the copper-plate grants preserved in the Tirumalai-Rāmasvāmi Dēvasthānam at Paṇpuḷi in the Tenkāśi taluk, Tirunelvēli district. It appears that the dēvasthānam has got three such grants and that the third has not been copied. These two do not appear to belong to the Mackenzie collection.

### சாசனம் — 1098] [R. 5378-1

*முதல் செப்பேட்டின் பிரதி.*

Copper-plate grant dated in Śaka 1675 (wrong for 1676), Kollam 930, Bhava, Kārttikai 26, Sunday, Uttiram, navamī, corresponding to A. D. 1754, December 8, in the 8th year of the reign of the Later Pāṇḍya king Jaṭilavarman *alias* Tribhuvanachakravartin Kōnērinmai koṇḍān Śrī Perumāḷ Aḷagam Perumāḷ 'who revived the past,'

---

1. *சாசனம் பூர்த்தியாகவும் இல்லை; மிகவும் பிழைபடப் பிரதி செய்யப் பட்டிருக்கிறது; திருத்தமான பாடம் கொடுக்க இயலவில்லை.*

**S'ivala Varaguṇa Rāma Pāṇḍya Kulasekharadeva Dikshitar registering the provision made by the Piḷḷaimār of the Gaṅgākula and the Kārāḷa family for the services during worship in the evening in the temple of Kuṟṟālanathasvāmin.**

A similar record (C. P. No.44 of 1945-46) is found in the temple of Tirukkuṟṟālanāthasvāmin at Kuṟṟālam. Two similar grants, one by the same donors and the other 'by the two armies, the one of the Karṇāṭaka king and those of the others,' are published in the **Travancore Archaeological Series**, Vol. I, pp. 149-152. In the present record from Paṇpuḷi, though the donors are mentioned as the *piḷḷaimār*, the grant portion is found to be that of the other grant by the (*ubhaya-rāṇuvam*) two armies.

சாலிவாகன சகாப்த்தம் ௲௯௱எ௰௫-ன் மெல் செல்லா நின்ற கொல்லம் சுகத்திரி பவனெகவீர சந்திர குலப் பிறதீப மதுரா மகேந்திர செந்த மங்கலப் பராவராதீசுர சயமாசூர நாரசிங்க னகரள கமொதிவாகர சௌசிந்து வடவாநல சங்கீத சாயத்திய சார்வடிவ[1] தெய்வப் பிராமண தாபனசாரிய கொ சடிலவன்மரான திரிபுவன சக்கரவர்த்தி தொனெர்மை கொண்டான்[2] ஸ்ரீ பெருமாள் அளகம் பெருமாள் யிரந்த கால மெடுத்த சீவரு[3] வரகுண ராம பாண்டிய குலசெகர தேவ தீட்சதருக்கு ஆண்டு அ-[4]வது கொல்லம் ௯௱௨௰௯-ஆம் பவ வருஷம் கார்த்தி[கை*] மாசம் உ௰௬ உ ஆதித்த வாரமும் உத்திர நெக்ஷத்திரமும் நவமியும் ஆயுட்க் கிரண நாம யொகமும் கெசகரணமும் சுப யொக சுப கரணமும் பெர்ர[5] புண்ணிய தினத்தில் சுவாமி குத்தாலநாத சுவாமி கொவில் சாயலட்டைக் கட்டளைக்குக் காராள திலகுலகமானக்[6] கங்கா குலத்தரசான பிள்ளைமார் கட்டளையாக வைச்சு குடுத்தது. பல்லாக்குக் காரருக்

---

1. 'ஸ்வஸ்தி ஸ்ரீ புவநேக வீர, சந்திரகுலப்ரதீப, மதுரா மாகேந்திர, சயந்தமங்கல புரவராதீசுர, க்ஷேமாசுர நாரசிங்க, கேரளதமோதிவாகர, சோளசிந்துவடவாநல, சங்கீத சாஹித்ய சார்வபௌம' எனத் திருத்தி வாசிக்க.

2. 'கொநெரின்மை கொண்டான்' என்று வாசிக்க.

3. 'சீவல மாறன்' என்பதே இவ்விதம் எழுதப்பட்டிருக்கிறது போலும்.

4. இது மூலத்திலே 'ஆவது' என்று குறியிட்டால் எழுதப்பட்டுக் காணப்படுகிறது.

5. 'பெற்ற' என்று வாசிக்க.

6. 'காராள குலதிலகமானக்' எனத் திருத்தி வாசிக்க.

குப் பத்துப் பணமும் குதிரைச் சுமட்டிக்காரருக்கு[1] மூன்று பண
மும் ராணுவத்துக்கு ஒரு பணமும் மத்தப்படைக்கு ஒரு பணம்
வீதம் இந்தப்படிக்கு குடுத்து நடத்தி வருவொமாகவும். இப்ப
டிக்கு உபய ராணுவத்தார்த் தர்மத்தைப் பண்ணின பேர் தெய்
வப் பிரதிஷ்டை பண்ணின புண்ணியத்தை யடைவார்களாக
வும். இதர்க்கு அகிதம் பண்ணின பேர் மாதா பிதாவுக்குங் குரு
வுக்கும் அகிதம் பண்ணின தோஷத்திலேயும் கெங்கை கரை
யிலே கோகத்தி பிரமத்தி ஸிரிகத்தி[2] பண்ணின தோஷத்திலெயும்
போவாராகவும். இப்படிக்கு தான சாசன[ம்*]குத்தாலநாத சுவாமி
சாயலக்ஷை கட்டளைக்கு உபய ராணுவத்தார் பட்டயம் எழுதிக்
கொடுத்தொம். இந்த தர்மத்துக் காரியம் திருவாவடுதுரை மடத்
துப் பாரிசஞ் செய்திருப்பதால்த் தர்ம்ம பரியாணமாக நட......
விச்சுக்[3] கொள்வாராகவும் குத்தால......வாமி துணை[4] [॥*]

சாசனம் — **1099**] [R. 5371-2

இரண்டாம் பட்டைய நகல்

Copper-plate grant dated in Śaka 1717 (mistake for 1710), Kollam 964, Kīlaka, Kārttikai 25,corresponding to Saturday, the 6th December, A. D. 1788, registering the grant of a *paṭṭaiyam* by Ismail Ravuttar, the *maṇiyam* (headman) of Ahmedpēṭṭai under Hazarat Vālā[ja*] Sāhēbu, and others to the temple of god Kuttālanāthasvāmin at Kuttālam, assigning a small *makamai* cess on all the merchandise imported and exported at the markets of Tenkāśi-Ahmedpēṭṭai. Śeṅkōṭṭai, Kaḍaiyanallūr, Sītārāmapēṭṭai, Puḷiyarai, S'uraṇḍai, etc. villages for conducting the early morning service and worship on festival days in the shrine of the goddess Kantimati-Amman at Tirunelvēli.

This is the second of the three copper-plates deposited in the *dēvasthānam* of Tirumalai Rāmasvāmin at Paṇpuḷi in the Tirunelvēli district. A similar record (C.P. No. 43 of 1945-46) is found in the temple of Tirukkuṟṟālanāthasvāmin at Kuttālam.

---

1. 'சுறுட்டிக்காரருக்கு' என வாசிக்க.
2. 'கோஹத்தி, பிரம்மஹத்தி, ஸ்திரீஹத்தி' என்று வாசிக்க.
3. 'நடத்துவிச்சுக்' என்று பூர்த்திசெய்து வாசிக்க.
4. 'குத்தாலநாத சுவாமி துணை' எனப் பூர்த்திசெய்க.

சாலிவாகன ச[க*]ார்த்தம் ௲௬௱௭௰(ஏ) வருஷம் செல்ல[ா*] நின்ற கொல்லம் ௲௱௯௰௬-ஆம் கீலக வருஷம் கார்த்திகை மீ ௨௰௫-தி சுவாமி குத்தாலநாத சுவாமி கட்டளைக்கு அசரது வாலா [சா*]சாயபு அபதுபேட்டை மீயம்[1] இசுமாலி இடு[2] முதலான பலரும் பட்டையம் எழுதிக்கொடுத்தபடி பட்டைய[ம*]ாவிது: சுவாமிக்கி நித்தியல் விளா பூசையில் கட்டளைவைத்து நடத்திவரும்படி படித்தரப்படிக்கு நடத்தி வரும் வகைக்கு நாங்களெல்லாரும் வகை வைத்துக் கொடுத்து யெ(வ)[று]சாற்று யிறங்கு சாற்வாகச்சை ஒன்றுக்கு கால் மாகாணி வீதமும் நடை க-க்கு மருவுறுட் சட்டை மொண்றுக்கு மாகாணிப் பண வீதமும் இன்னொன்றுக்கு அரை மாகாணி வீதமும் இந்தப்படிக்கு திருநெல்வெலி காந்திமதி யம்மன் சிறு கால சந்தி மகிமை படிக்கு தென்காசி ஆமது பேட்டையிலுள்ள வணித சேகர செங்கோட்டை, புளியரை, பண்புளி, கடையநல்லூர், சிவுருமபெட்டை, சுரண்டை சந்தை முதலான துறையிலும் மகமை வைத்து கொடுத்தபடியினாலே மாசம் மாசம் உள்ள பணந்துறை வளியம் கணகுப் பார்த்து வாங்கிக்கொண்டு சுவாமிக்கு கட்டளை யென்றென்றைக்கும் நடத்தி வருவொமாகவும். இப்படி நடத்தி வருகிற கட்டளை தர்மத்துக்கு யாதொரு விக்கினஞ் செய்தால் பழமையாயுள்ள பட்டையப்படிக்கு பஞ்சாட்சரத்துக்குள்பட்டவன் கெங்கைக் கரையில் காராம் பசுவைக் கொன்ற தோஷத்திலும், யிசிலாமான மொமாகத்திலும்[3] தாய்க்கு விக்கினஞ் செய்த தோஷத்திலும் போவாராகவும். இந்தப்படி சம்மதித்து விளா பூசை கட்டளைக்கு பட்டையம் எழுதிக்கொடுத்தோம் பேட்டை மீயூ இசுமாலி இடுர்[4] முதலான பலரும். இந்தப் பட்டயம் எழுதினன் மாடன் செட்டியார் தாணுதிபதி அம்மை நாதன் எழுத்து. இந்தப் படிக்கு இசுமாலி இடுர்.[5] பலர் கா[றுபாறு] கோவி[ல்*] சந்திர குமாருப் பிள்ளை. இந்த செப்புப் பட்டயம் செய்து எழுதி வைத்தது எ௰௩ நி. தென்காசி சேகர மயலும் சுடலை முத்துப் பிள்ளை. திருகூடாசலபதி சகாயம்[5] [||*]

---

1. 'அஹமது பேட்டை மணியம்' என்று வாசிக்க. இந்தச் சாசனத்திலே அதிகமாகக் குறியீடுகளை உபயோகித்து எழுதியிருக்கிறார்கள்.

2. 'இசுமாயில் இராவுத்தர்' என்று வாசிக்க.

3. 'இஸ்லாமான முகம்மதிய மதத்தில்' உள்ளவன் எனக் கொள்க.

4. 'பேட்டை மணியம் இஸ்மாயில் இராவுத்தர்' என்று வாசிக்க.

5. இந்தச் சாசனத்தை எழுதுவதில் குறியீடுகளை அதிகமாக உபயோகித்திருக்கிறார்கள். அதனால் சில இடங்கள் சரியாக விளங்கவில்லை.

## திருவண்ணுமலை Tiruvaṇṇāmalai

*வட ஆர்க்காடு ஜில்லாவில் திருவண்ணுமலை தாலூகாவில் உள்ளது. இவ்வூரிலிருந்து கிடைத்த சாசனங்கள் (செ. **105-114**) இந்தத் தொகுதியின் முதல் பாகத்தில் வெளியிடப்பட்டுள்ளன.*

**This is the head-quarter station of the Tiruvaṇṇāmalai taluk in the North Arcot district. Inscriptions, Nos. 105 to 114, copied from this place are published in Vol. I of this book.**

### சாசனம் — 1100] [No. 2 on p. *128*

*அருணுசலேசுவரர் கோவிலில் வல்லாளராய கோபுரத்தின் வடபுறம் ஒரு கல்லில் எழுதியிருப்பது.*

(No. 565 of 1902). **On a stone on the north side of of the Vallāḷarāya-gōpura in the Aruṇāchalēśvara temple at the place. Record dated in S'aka 1312 (mistake for 1310), Vibhava, in the reign of the Vijayanagara king [S'rī Vīra] Viruppanna Uḍaiyar, [son of Ariyappa Uḍaiyār] registering the grant made by the king to the god and the sthānattār fixing the quantity of oil, ghee, ginger, nuts, pot, etc. from the bazar to the god.**

**The text of the record is not available; but this has been published as No.156 in the South Indian Inscriptions (Texts), vol.VIII, where additional particulars of the date, Mithuna, ba. dvitīyā, Monday and S'ravaṇa are also given. Further the record registers certain remissions and exemptions to the temple from the purchases and demands, customarily made by the king's *pradhānis*.**

விஜயநகர அரசனுன விருப்பண்ண உடையார் (அரியப்ப உடையார் குமாரன்) ஆட்சிக் காலத்தில் சக வருஷம் *1312*, விபவ ஆண்டு கொண்ட கல்வெட்டு. கடைத்தெருவிலிருந்து எண்ணெய், நெய், சுக்கு, பாக்கு, குடம் முதலியவை உடையார் திருக்கோவிலுக்கு எவ்வளவு கொடுக்கப்படவேண்டுமென்பதை நிர்ணயித்துக் கூறுவது.

*இந்தச் சாசனத்தின் பிரதி கிடைக்கவில்லை. ஆயினும் இது தென்னிந்திய சாசனங்கள், VIII. வால்யூம், 156 செ. ஆக வெளியாகியுள்ளது. அதிலிருந்து சக வருஷம் 1310 என்று தெரிகிறது. தவிர, மிதுந மாதம் அபரபக்ஷத்துத் துவிதியை, திங்கள் கிழமை பெற்ற திருவோணத்து நாள் கொண்ட அக் கல்வெட்டு, கோவிலுக்கும் தேவமண்டலத்துக்கும் அரசனுடைய பிரதானிகள் கைவிலையாகப் பணம் பொகட்டுக் கொள்ளும் பொருள் முதல், ஊழியம், உலுப்பை முதலியன இல்லாதபடி கழித்து ஸர்வ மான்ய இறையிலியாக அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது.*

சாசனம்—1101] [R. 336

வட ஆர்க்காடு ஜில்லா திருவண்ணமலை தாலூகாவின் பிரதான நகரமான திருவண்ணமலையில் உள்ள பெரிய நாட்டு மடத்திலிருந்து கிடைத்த செப்பேட்டுச் சாசனம்.

Copper-plate grant in the possession of the Periya-nāṭṭu-Maṭha at Tiruvaṇṇāmalai.

Record dated in Śaka 1435, Āṅgīrasa, Makara, śu. pañchamī, Uttarāshāḍa, Thursday, in the reign of the Vijayanagara king Vīra-pratāpa **Krishnadevaraya Maharaya** stating the circumstances under which the *maṭha* came into existence and the privileges granted to the same.

King Krishṇarāya and Śāḷuva Nāyaka requested the permission of Aḷiyā-viradam-koṇḍa Tambirān of the Periya-nāṭṭu-maṭha, which had been in existence from the days of king Karikāla Chōḷa, for the construction of a thousand-pillared maṇḍapa [to the temple of Aruṇāchalēśvara] at Aruṇāchalam, i.e., Tiruvaṇṇāmalai. The Tambirān himself could not agree to it; so he sent communications to the members of the 24 *kōṭṭams* and 79 *vaḷanāḍus* [into which Toṇḍai-maṇḍalam was divided] and also to Ampi Aṟam-vaḷartta Mudaliyār, i.e., the head of the religious and charitable institutions at Hampi, on receipt of which all of them assembled at Aruṇāchalam. Again Krishṇarāya and S'āḷuva Nāyaka approached them with the same request, the construction of a similar thousand-pillared maṇḍapa at Kāñchi having been completed just then. On this, the Tambirān and the Mudaliyār sold a piece of land measuring 275 feet, east to west and 265 feet, north to south, and belonging to the maṭha for 500 *pon* which amount was utilised for gilding the *vimāna* of the goddess Uṇṇāmulai Amman in the temple. A new building for the Periya-nāṭṭu-maṭha also was constructed to the south-east of the big gōpura of the Aruṇāchalēśvara temple, installing therein Aḷiyā-viradam koṇḍa-Vināyakar and Appā-tambirān (i.e., Gaṇēsa and Śiva). Provision was also made for the worship of these images and conducting the daily service called Aḷiyā-viradam-koṇḍa-*sandi* to god Aruṇāchalēśvara and goddess Uṇṇāmulai Amman, by the tax-free (*sarvamānya*) gift of the village Mēlappālaiyūr fixing its revenue at 400 *pon* per year. In course of time Aḷiyā-viradam-koṇḍa Tambirān appointed his clerk (*kumasta*) Niṉaikka-mukti-Ōduvār, a *māhēśvara*, as his agent (*garttā*) and also as his successor, to manage the affairs of the maṭha including all the privileges like

the *mādāpatyam*, *mudrā* (seal), benediction (*anugriha*) and the right to receive the first *prasāda*, etc. in the temple, in the presence of all the persons mentioned above, in consonance with the practice in vogue from the days of Karikāla Chōḷa, of having only a Veḷḷāḷa of the fourth caste for the office. The members of the Periya-nāḍu also agreed to contribute to the maṭha every year 7 *paṇam* per head and in a marriage 3 *paṇam* by the bridegroom's party and 3 *paṇam* by the bride's party along with other present.

The term 'Periya-nāḍu' with which the maṭha is associated is also referred to as *Śittiramēḻi-p-periya-nāḍu* and found mentioned in several inscriptions. Its members are known as *Bhūmiputtirar*. It was once a powerful and influential organisation, composed mainly of agriculturists, and spread throughout South India. One form of their Tamil *prasasti* has been given on pp. 75-76 above (Vol. I). Karikāla Chōḷa, referred to in the copper-plate grant, is evidently Kulōttuṅga III who is known to have had this surname and in whose time this organisation seems to have come into existence and spread in the country.

The date is irregular as the *tithi* Śu. pañchamī will not combine with the *nakshatra* Uttarāshāḍa in the month of Makara or Tai. It is possible that Uttarāshaḍa is a mistake for Uttaraṭ ādi. The Śaka and the cyclic year would correspond to A. D. 1513-14.

It is known that Toṇḍaimaṇḍalam was divided into 24 *kōṭṭams* and 79 *nāḍus*. The record mentions these divisions in detail. They are as follows:—

| *Kōṭṭam* | *Nāḍu* |
|---|---|
| 1. Puḻal-kōṭṭam | 1. Nāyaṟu-nāḍu |
| | 2. Ambattūr-nāḍu |
| | 3. Āguḍi-nāḍu |
| | 4. Āttūr-naḍu |
| | 5. Kaṇṇiya-nāḍu |
| | 6. Eḻumūr-nāḍu |
| 2. Puliyūr-kōṭṭam | 7. Kuṉṟattūr-naḍu |
| | 8. Pōrūr-nāḍu |
| | 9. Māṅgaḍu-naḍu. |
| | 10. Amarūr-naḍu |
| | 11. Kōṭṭūr-nāḍu |

| Kōṭṭam | Nāḍu |
|---|---|
| 3. Ïkkāḍu-kōṭṭam | 12. Kākkaḷūr-nāḍu |
| | 13. Kachchi-nāḍu |
| 4. Maṇavūr-kōṭṭam | 14. Pāśāli-nāḍu |
| | 15. Ilattūr-nāḍu |
| | 16. Koṇṇūr-nāḍu |
| | 17. Puriśai-nāḍu |
| | 18. Perumūr-nāḍu. |
| 5. S'eṅgāḍu-kōṭṭam | 19. Pennalūr-nāḍu |
| | 20. Adikattūr-nāḍu |
| 6. Paiyūr-kōṭṭam | 21. Vīrabhadra-nāḍu |
| | 22. S'eṇṇūr-nāḍu |
| | 23. Vaṇkali-nāḍu |
| | 24. Taṇṇūr-nāḍu |
| 7. Eyil-kōṭṭam | 25. Daṇḍaka-nāḍu |
| | 26. Māgaṟal-nāḍu |
| | 27. Kōnēri-nāḍu |
| 8. Dāmal-kōṭṭam | 28. Karivīḍu-nāḍu |
| | 29. Vaḍakarai Valla-nāḍu |
| 9. Uṟṟukkāḍu-kōṭṭam | 30. Palaiyūr-nāḍu |
| | 31. Dāmanūr-nāḍu |
| | 32. Kuṇṇa-nāḍu |
| | 33. Tiḍuvanār [Nīrvēḷūr?]nāḍu |
| 10. Kaḷattūr-kōṭṭam | 34. Kurumara-nāḍu |
| | 35. Valliyūr-nāḍu |
| | 36. Pādūr-nāḍu |
| | 37. Naḍu-nāḍu |
| 11. Śēmbūr-kōṭṭam | 38. Piṟaiyūr-nāḍu |
| | 39. Paṭṭaṇa-nāḍu |
| | 40. Mukundūr-nāḍu |
| 12. Āmūr-kōṭṭam | 41. Mīkumili-nāḍu |
| | 42. Paluvūr-nāḍu |
| 13. Ittūr-kōṭṭam | 43. Aramaraṅga-nāḍu |
| 14. Veṇkuṉṟa-kōṭṭam | 44. Perutagara-nāḍu |
| | 45. Araśūr-nāḍu |
| | 46. Marudāḍu-nāḍu |
| | 47. Nallūr-nāḍu |
| | 48. Teḷḷaru-nāḍu |

| | |
|---|---|
| 15. Palkunra-kōṭṭam | 49. Parāñjira-nāḍu |
| | 50. Tachchūr-nāḍu |
| | 51. Meyyūr-nāḍu |
| | 52. S'iṅgamporuda-vaḷanāḍu |
| | 53. Perun-Timiri-nāḍu |
| 16. Iḷaṅkāḍu-kōṭṭam | 54. Ponnūr-nāḍu |
| | 55. Tennāttūr-nāḍu |
| | 56. Mākunna-nāḍu |
| 17. Kāliyūr-kōṭṭam | 57. Kaḷiyūr-nāḍu |
| | 58. Tiruppūvai-nāḍu |
| | 59. Viṟpēḍu-nāḍu |
| | 60. Erikil-nāḍu |
| | 61. Pavūr-nāḍu |
| 18. S'iṟukārai- kōṭṭam | 62. Āynda-nāḍu |
| 19. Paḍuvūr-kōṭṭam | 63. Perumaruda-nāḍu |
| | 64. Ārkkāḍu-nāḍu |
| | 65. S'eṅkunṟa-nāḍu |
| 20. Kaḍigai-kōṭṭam | 66. Peruṅ-Kañchi-nāḍu |
| | 67. Mēl-Kaḷattūr-nāḍu |
| | 68. Pārāñji-nāḍu |
| 21. Śendirikai-kōṭṭam | 69. Pēraiyūr-nāḍu |
| | 70. Vaṟkuḷa-nāḍu |
| | 71. Ālattūr-nāḍu |
| | 72. Aruṅguḷa-nāḍu |
| 22. Kunṟa-pattiri-kōṭṭam | 73. Māṅgaḷa-nāḍu |
| | 74. Ninnai(or Kinnai)-nāḍu |
| | 75. Veṅgaḷūr-nāḍu |
| 23. Vēṅkaṭa-kōṭṭam | 76. Kuḍa-karai-nāḍu |
| | 77. Toṇḍaimā-nāḍu |
| | 78. Pottappi-nāḍu |
| 24. Vēlūr-kōṭṭam | 79. Oḷukarai-nāḍu |
| | 80. Vānūr-nāḍu |
| | 81. S'ōḷavalli-nāḍu |
| | 82. Viḷāḍapura-nāḍu |
| | 83. S'empuri-nāḍu |
| | 84. Nenmali-nāḍu |
| | 85. Māṭṭūr-nāḍu |

It will be seen from the above that the grant mentions the names of 85 *nāḍus*, even though the total is given as 79. V. Kanakasabhai Pillai in his *The Tamils* 1800 *years ago* (pp. 28-29), though mentioning the total as 79, gives the names of 77 nāḍus only. Again some of these names are found differently in inscriptions.

In addition Toṇḍaimaṇḍalam is also said to have contained 1900 *nattam* or village habitations.

*அருணசல ஸ்த்தளம் பெரிய நாட்டு அவர்கள் உண்டா[க்*] கிய தாம்பிர சாசன பட்டயம்.*

*பெரிய நாட்டுக்கு விநயகர் அழியா விறுதம் கொண்ட விந யகர், அப்ப[ா*] தம்பிரான், அழியா விறுதம் கொண்ட தம்பி ரான் இவர் மூனு பேர்களுடைய திருவிளம் உண்டா(க)[வ] தாகவும்.*

*சொஸ்த்த ஸ்ரீ*[1] *[॥*] [ஸ்ரீ](ரி)மன் பிறிதிவி ராச்சியம் கலியுகம் ஆதி பிறவெசெ ரரம்பிர சாதனம்.*

*சங்கீதம் மனு விக்கியான சமான சமறுவிதம்*[2] *[ஆசந்தி ரார்க்க மகொரவாக்யம்] பஞ்ச சதுர் விஞ்சதி கொட்டம் யெவம் அறுணசல ஸ்த்தளம் ஆரம்பெ சாம்பிராச்சியம் ஆதி சம்பவம்.*[3]

*சொஸ்த்த ஸ்ரீ [॥*] [ஸ்ரீ](ரி)மன் மகா மண்டலெசுவரன் மெதினி ஈசரன்*[4] *அரியராய விபாடன் பாஷைக்குத் தப்புவராய கண்டன் மூவராய கண்டன் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு குடாதான் துலுக்க தள விபாடன் துலுக்க மொகர்ரம் தவி[ர்*]த்தொன் (யி)[எ]ம்மண்டலமும் கொண்டு யிழ(மு)ந் திறை கொண்ட ராசாதி ராசன் ராச பரமெஸ்வரன் துரங்காதி பதி கெ(ா)டி மன்னிய சுறுத்த்[ர*]ான நாவலன் பெருந்தீவு*[5] *நவமணி வெந்தன் நவகொடி நாராயணன் பூலொக புயங்கரன் எம்மந்திரை கொண்ட விருது நாராயணன் சது சமுத்திராதிபதி*

---

1. 'ஸ்வஸ்தி ஸ்ரீ' என்று வாசிக்க.

2. 'சமர்ப்பிதம்' என இருக்கலாம்.

3. இது ஒரு சுலோகம் போலவே தோன்றுகிறது. ஆயினும் பொருள் சரியாக விளங்கவில்லை. தொண்டை மண்டலத்தின் இருபத்து நான்கு கோட்டங்களையும் அவற்றைச் சேர்ந்தவர்கள் ஏதோ அளித்ததையும் குறிப்பதாகத் தெரிகிறது.

4. 'மெதினீமீசுர கண்டன்' என்று வாசிக்க.

5. 'நாவலம் பெருந்தீவு' என வாசிக்க.

பூறுவ தெஷ்ஷண......ச்சிம உத்திர[1] கெசவெட்டை கண்டரு ளிய ஸ்ரீ(ரி)வீரப் பிறதாப கி[ரு*]ஷ்ணதேவ மகாராயர் பிறிதிவி ராச்சியம் பண்ணி அருளா நின்ற சாலிவாகன சகாப்த்தம் அசாங்டுடு-க்கு மெல் செல்லா நின்ற ஆங்கிரச சம்மச்[ச*]ரத்தில் மகர குருவாரத்தில் பூறுவ பஷ்ஷத்து[2] பஞ்சமியும் சுபனுமெ யொக மும் பாலவாகரணமும் உத்திராட ந(ஷ்ஷ)[க்ஷ]த்திரமும் பெத்த யி[ற்*]றை னுள் (1) புழர்[க்*]கொட்டம்[3]: னுயறு நாடு, அம் பத்து[ரர்*] னுடு,[4] ஆகுடி னுடு, ஆத்தூர் னுடு, கண்ணிய னுடு,[4] எழுமூர் னுடு, (2)புலியூர் கொட்டம்: குண்ணத்தூர் னுடு[5], பெரூர் னுடு[6], மாங்காடு னுடு, அமறூர் னுடு, கொட்டூர் னுடு, (3) யிக் காட்டு கொட்டம்: காக்க(னூ)[ளூ]ர்னுடு, கச்சினுடு, (4) மணவூர் கொட்டம்:[7] பாசாலி னுடு,, யில்லத்தூர் னுடு, கண்ணூர் னுடு,[8]

---

1. 'பூர்வ தக்ஷிண பச்சிம உத்தர சதுஸ் ஸமுத்ராதிபதி' என்று இருத்தல் வேண்டும்; தவறி முன் பின்னுக மாற்றி எழுதப்பட்டிருக்கிறது.

2. 'பக்ஷத்து' என்று வாசிக்க. 'க்ஷ' என்னும் எழுத்து 'ஷ்ஷ' என்று எழுதப்பட்டிருக்கிறது. பின்னுல் நக்ஷத்திரம் என்பதும் இதேபோல 'நஷ்ஷத்திரம்' என்று காணப்படுகிறது.

3. தொண்டை மண்டலம் இருபத்து நான்கு கோட்டங்களாகவும் எழுபத்தொன்பது நாடுகளாகவும் பிரிக்கப்பட்டிருந்ததென்பது பிரசித்தம். ஆயினும் அந்த நாடுகள் எவை எவை என்பதை நிர்ணயமாகக் கூற முடிய வில்லை. கால வேறுபாட்டினுல் நாடுகளின் பெயரும் தொகையும் மாறுபட்டுக் காண்பது இயற்கையே. மொத்தம் எழுபத்தொன்பது நாடுகளேயாயினும் இந்தப் பட்டையத்திலே எண்பத்தைந்து நாடுகளின் பெயர்கள் காணப்படுகின் றன. காலம் சென்ற வி. கனகசபைப் பிள்ளையவர்கள் தம்முடைய **ஆயிரத் தெண்ணூறு ஆண்டுகட்கு முந்திய தமிழர்** என்னும் நூலில் 28-29-ஆம் பக்கங்களில் தொண்டைமண்டலத்தின் பிரிவுகளைப்பற்றிக் கூறும்போது இரு பத்து நான்கு கோட்டங்களையும் எழுபத்தேழு நாடுகளையும் பெயர் குறிப்பிடு கிறார். தொண்டை மண்டலப்பட்டையம் என்பதிலிருந்து அந்தப் பெயர்களை எடுத்துக் கொடுத்ததாகவும் குறிப்பிட்டிருக்கிறார். ஆயினும் அந்தப் பட்டையம் எது என்பது தெரியவில்லை.

4. கனகசபைப் பிள்ளையவர்களின் பட்டியலில் இந்தப் பெயர் காணப் பெறவில்லை.

5. 'குன்றத்தூர் நாடு' என்று வாசிக்க.

6. 'போரூர் நாடு' என்றும் வாசிக்க முடியும். அதுவே சரியான பாட மாக இருத்தல் வேண்டும்.

7. கல்வெட்டுக்களில் இது 'மணவிற் கோட்டம்' என்று வழங்கப் பெறும்.

8. 'கான்றூர் நாடு' எனக் கல்வெட்டில் காணப்படுகிறது.

புரிசை னாடு, பெருமூர் னாடு, (5)செங்காட்டு கொட்டம்[1]: பென்னலூர் னாடு, அதிகத்தூர் னாடு, (6) பைய்யூர் கொட்டம் : வீரபத்திர னாடு, செண்ணூர் னாடு[2], வண்கலி னாடு[3], தண்ணூர் னாடு, (7) எய்யிர் கொட்டம் : தண்டகனாடு, மாகரல் னாடு[4], கொநெரினாடு, (8)தாமல் கொட்டம்: கரிவீடுனாடு[5], வடகரை வல்லனாடு[6], (9)ஊத்துக்காட்டு கொட்டம்: பாலையூர்னாடு, தாமனூர்னாடு, குண்ணனாடு[7]: திடுவனூர்னாடு[8], (10) களத்தூர் கொட்டம்:குருமரனாடு, வல்லியூர் னாடு, பாதூர் னாடு, நடுனாடு, (11) செம்பூர் கொட்டம் : பிறையூர் னாடு, பட்டணனாடு, முகுந்தூர்னாடு, (12) ஆமூர் கொட்டம்: மமீகுமிழினாடு[9], பவ்வூர்னாடு[10], (13)யீத்தூர் கொட்டம்: அர்மரங்கனாடு, (14) வெண்குண்ண கொட்டம்[11]: பெருநகரனாடு,[12] அரசூர்னாடு, மருதாடுனாடு, நல்லூர்னாடு, தெள்ளாறுனாடு, (15)பல்குண்ண கொட்டம்[13]: பாராஞ்சிரனாடு[14], தச்சூர்னாடு, மெ[ய்*]யூர்னாடு, சிங்கம்

---

1. ‘இரண்டாயிர வேலிப் பற்று’ என்றும் பெயர் பெறும்.

2. கனகசபைப் பிள்ளையவர்களின் பட்டியலில் இது ‘சேலூர் நாடு’ என்று குறிக்கப்பெற்றுள்ளது.

3. ‘வெங்கல் நாடு’ எனக் குறிக்கப் பெறும்.

4. இது ஒரு காலத்தில் காலியூர்க் கோட்டத்தில் சேர்ந்திருந்ததெனக் கல் வெட்டுக்களிலிருந்து தெரிகிறது.

5. ‘கரிவேடு நாடு’ எனவும் வழங்கப் பெறும். தாமல் நாடு என்று கல்வெட்டுக்களில் காணப்படுவதும் இதுவே.

6. ‘வடகரை’ என்ற அடை இல்லாமல் வல்ல நாடு என்றே வழங்கப் பட்டது.

7. ‘குன்ற நாடு’ என்பது இதுவே.

8. கனகசபைப் பிள்ளையவர்களின் பட்டியலில் இது ‘நீர்வேளூர் நாடு’ என்று காணப்படுகிறது.

9. ‘மீகுமிழி நாடு’ என்று வாசிக்க. ‘மீகுமிழி நாடு’ என்பது மேல் குமிழி நாடு என்றும் பொருள் படும். அவ்விதமாயின் கீழ்க்குமிழி என ஒன்றும் இருத்தல் வேண்டும். கல்வெட்டுக்களில் ‘குமிழிநாடு’ என்றே குறிக்கப் பெறும்.

10. ‘பழுவூர் நாடு’ என்று வேறு பாடம்.

11. ‘வெண்குன்றக் கோட்டம்’ என்று வாசிக்க.

12. கனகசபைப் பிள்ளையவர்களின் பட்டியலில் இது ‘பெருநகர் நாடு’ என்று குறிக்கப்பட்டுள்ளது.

13. ‘பல்குன்றக் கோட்டம்’ என்று வாசிக்க.

14. ‘பாஞ்சூர் நாடு’ என்று கல்வெட்டுக்களில் குறிக்கப்படுகிறது.

பொருந்தவளநாடு[1], பெருந்திமிரி நாடு[2], (16) யிளங்காட்டு கொட்டம் : பொன்னூர்நாடு, தென்னாதூர் நாடு, மாகுண்ண நாடு, (17) காலியூர் கொட்டம்: காழியூர்நாடு[3], திருப்புவை நாடு[4], விற்பெடு நாடு, எரிகிழ்நாடு[5], பாலூர்நாடு, (18) சிறுகாரை கொட்டம்: [ஆய்ந்த நாடு,[6] (19) படுவூர்[க்*]கொட்டம்] : பெருமருதநாடு[7], ஆர்க்காடு நாடு, செங்குண்ணநாடு,[8] (20) கடிகை கொட்டம்: பெருங்காஞ்சி நாடு, மொர்களத்தூர்நாடு, பாராஞ்சிநாடு, (21) செந்திரிகை கொட்டம்: பெரயூர்நாடு[9], வளகுவுநாடு,[10] ஆலத்தூர்நாடு, அருங்குளநாடு (22) குன்றபத்தி(ர)[ரி] கொட்டம்: மாங்களநாடு, ஙிண்ணைநாடு,[11] வெங்களூர் நாடு, (23) வெங்கிட கொட்டம் : குட கரை நாடு, தொண்டயாநாடு, பொ[த்*]தப்பிநாடு, (24) வேலூர் கொட்டம்: ஒழுகரைநாடு[7], வானூர்நாடு[7], சொழவில்லிநாடு[7], விலாடபுரம் நாடு[7], செம்புரிநாடு[7], கென்மலிநாடு[7], மாத்தூர்நாடு, ஆககொட்டம் உ௰௪ நாடு எ௰௯ நத்தம் ௲௯௱ யிந்த யிருவத்துநாலு கொட்டத்தாரும் எழுபத்தொன்பது வளநாட்டு அவர்களும் அருணாசலத்தில் அனவரும் யின சம்மதியாக[12] கூடியிருந்து யிந்த பெரியநாட்டு மடத்தில் எழுந்தருளி யிருக்கப்பட்ட அழியா விறுதம் கொண்ட தம்பிரான் அவர்களும் நாங்கள் பெரிய நாட்டவர்கள் தாம்பர சாசன பட்டையம் குடுத்தபடி : இந்த பெரிய நாட்டு மடம்

---

1. கல்வெட்டுக்களிலே இது சிங்கபுர நாடு என்றும் காணப்பெறும்.

2. இது 'பழுவூர்க் கோட்ட'த்தில் சேர்ந்திருந்ததாகக் கல்வெட்டுக்களில் காணப்படுகிறது.

3. காலியூர் நாடே ஆகும். கழுமல நாடு என்ற பாடமும் உண்டு.

4. கனகசபைப் பிள்ளையவர்களின் பட்டியலில் இது 'திருப்பூழிவனம் நாடு' என்று கொடுக்கப்பட்டுள்ளது.

5. 'எரிகில் நாடு' அல்லது 'எரிகல் நாடு' எனவும் ஆகும்.

6. 'கரைவழி ஆய்ந்த நாடு' என்றும் குறிக்கப் பெறும்.

7. இது கனகசபைப் பிள்ளையவர்கள் கொடுதுத்ள்ள பட்டியலில் காணப் பெறவில்லை.

8. 'செங்குன்ற நாடு' என்று வாசிக்க.

9 'பொலையூர் நாடு' என்கிறார் பிள்ளையவர்கள்.

10. 'வற்குள நாடு' என்பதே இவ்விதம் எழுதப்பட்டிருக்கிறது போலும்.

11. 'இண்ணை நாடு' என்றும் குறிக்கப்பட்டுள்ளது.

12. 'இன சம்மதியாக' என வாசிக்க. 'பெரிய நாட்டவர்கள்' என்பார் வேளாண் மக்களாலாகிய ஒரு சமூகக் கூட்டம் என்பது இதிலிருந்து தெரிய வரும். பூமி புத்திரர் என்று அவர்கள் குறிக்கப் பெறுவதும் இதனையே விளக்கும்.

கரிகால சொழ ராசா நாள் முதல் (யித்தை) [இற்றை] வரைக்கும் நடந்து வருகையில் அப்பொ[து*] கி[ரு*]ஷ்ணராயரும் சாளுவ ஞயக்கரும் அருணசலத்திலெ ஆயிரக்கால் மண்டபம் முதல் பிரகாரத்திலெ கட்டவெணுமென்று அழியா விரதம் கொண்ட தம்பிரான் அவர்களை [க்*] கெட்டுக்கொண்டார்கள். கெழ்க்கு மிடத்தில்: 'அடியெனுலெ உத்தரவு பண்ணக் கூடாது. முன் கரிகால சொழ ராசா நாள் முதல் யித்தைவரைக்கும் நடந்து வருகுற தர்ம்ம'மென்று யிந்த வர்த்தமானம் எல்லாம் யிருபத்து ஞலு கொட்டத்துக்கும் எழுபத்தொன்பது வளநாட்டவர்களுக்கும் விசைய நகரத்திலெ அம்பி அறம் [வ*](ன)[ள]ர்த்த முதலியார் அவர்களுக்கும் திருமுகம் எழுதி அனுப்பி வைச்சது: அந்த திருமுகம் பா[ர்*]த்துக் கொண்டு இருபத்து ஞலு கொட்டத்தாரும் எழுபத்தொன்பது வளநாட்டவர்களும் அம்பி அறம் [வ*]ள[ர்*]த்தா முதிலியார் அவர்களும் அருணசலத்திலெ வந்து செ[ர்*]ந்து இவ்விடத்திலெ நடந்த வர்த்தமானம் எல்லாம் கெட்டு உளப்பட்டுக்கொண்டு இருந்தார்கள். கி[ரு*]ஷ்ண ராயரும் சாளுவ நாயக்கரும், 'காஞ்சி தலத்திலெ ஆயிரக்கால் மண்டபம் தங்களுடைய புண்ணியவசமாக கட்டி முடியுதெ; அப்படியெ அருணசலத்திலெயும் ஆயிரக்கால் மண்டபம் கட்டவெணு'மென்று கெட்டார்கள். நல்லது கரிகாலசொழராசா நாள் முதல் யித்தைவரைக்கும் நடந்து வருகுற தற்ம்மமென்று சொன்னர்கள். நல்லது என்று உளப்பட்டுக் கொண்டு அந்த மடம் கிழக்கு மெற்க்கு அடி உாஎம்ரு, தெற்கு வடக்கு அடி உாகூம்ரு, இதுக்கு கிரையம் பொன் ரு, இந்த பொன் ஐன்னூறும் வாங்கி அழியா விருதங்கொண்ட தம்பிரான் அவர்களும் அம்பி அரம் வளர்த்த முதலியார் அவர்கள் இந்த ஐன்னூறு பொன்னும் உண்ணமுலெ அம்மன் திருக் கொவிலுக்கு[ப்*] பொன் தகடு விமானத்துக்கு பொட்டு வச்சார்கள். அருணசல யீஸ்வரன் சன்னதி பெரிய கொபுரத்துக்கு தென் கிழக்கு ஆக பெரிய ஞட்டு மடத்துக்கு விஞயக பூசை பண்ணுகையில் கி[ரு*]ஷ்ணராயரும் சாளுவ ஞயக்கரும் அழியா விரதங் கொண்ட தம்பிரான் அவர்களும் அம்பி அறம் வள[ர்*]த்தா முதலியார் அவர்களும் இருபத்து நாலு கொட்டத்தாரும் எழுபத்தொன்பது வளஞட்டவர்களும் என சம்மதியாக[1] யிருந்து மடம் கட்டி வைச்சு இந்த மடத்திலெ

---

1. 'இன சம்மதியாக' என்று வாசிக்க.

அழியா விருதங் கொண்ட விநாயகரையும் அப்பா தம்பிரானாரை யும்[1] இரண்டு பெரையும் எழுந்தருள பண்ணிவச்சு அவர்களுக்கும் திருமஞ்சனம் திருமாலை திருமெற்பூச்சு திருபரிபட்டம் திரு விளக்கு நிவெத்தியம் இது முதலான அருணாசல யீஸ்வரன் உண்ணாமுலை அம்மன் இவர்களுக்கு ஒரு காலம் அழியா விருதங் கொண்ட சந்திக்கு அபிஷெக நிவெத்தியம் தீபாராதனைக்கி மெலப்பாலையூர் கிராமம் சறுவ மானியமாக விட்டது பொன் சா. இந்த பொன் நானூரும் வாங்கி கட்டளை நடப்பிச்சுக் கொண்டு வருகையில் அழியா விருதங் கொண்ட தம்பிரான் அவர்கள் நம் முட குமுஸ்த்தா மயெசுர[ர்*] நினைக்குமுத்தி ஓதுவாரை[2] நம் முட பெரிய நாட்டு மடத்துக்கு நிருவாகம் உஸ[யம்] சுவாமி சன்னதியிலெ நாலாஞ் சாதி வெள்ளாமூருக்கு[3] கரிகால சொழ ராசா நாள் முதல் இத்தை வரைக்கும் நடந்து வருகுறது மடாதிபத்தியம் அனுக்கிரகம் ஸ்ரீமுத்திரை மோதிரமும் சுவாமி சன்னதியிலே நடந்து வருகிற மரியாதியும் முந்தின விபூதி முந் தின சந்தனம் முந்தின பிரசாதம் முந்தின வெகுமானம் முந்தின தாம்பூலம் அழியா விரதம் கொண்ட தம்பிரான் அவர்களும் அம்பி அரம் வள[ர்*]த்தார் முதலியார் அவர்களும் இருபத்து நாலு கொஷ்ட்டத்தாரும் எழுபத்தொன்பது வளநாட்டவர் ஆயிரத்து தொளாயிரம் நத்தத்தாரும் என சம்மதியாக[4] கூடி கி[ரு*]ஷ்ணராயர் சமுகத்திலெ தாம்பிர சாதன[ப்]பட்டையம் எழுதிக் கொடுத்து கர்த்தனான நினைக்க முத்தி(ஞ)[ஓ]துவா ருக்கு அம்பி அரம் வள[ர்*]த்தா முதலியார் அவர்களும் திட்டம் பண்ணினது காஞ்சி [புர தலத்திலே திட்டம் பண்ணின படிக்கு அருணாசல] ஸ்தலத்திலெ மயெசுவர[ர்*] நினைக்க முத்தி(ஞ) [ஓ]துவார் அவருக்கு நாங்கள் பெரிய நாட்டு அவர்கள் அனைவர்களும் என சம்மதியாக[4] நாங்கள் கட்டளையிட்டது: தலைகட்டுக்கு எழு பணம் கல்லியாணத்துக்கு மாப்பி[ள்*]ளை வீட்டுக்கு மூணு பணம் பெண் வீட்டுக்கு மூணு பணம் அமுதுபடி கரிகாயி முதலானது சந்தனம் தாம்பூலம் வஸ்த்திரம் இது முதலானது எல்லாம் நாங்கள் ரெட்டைப்படி யாக தாம் வருஷா வருஷம் தொரும் அனுப்புவித்துக் கொள்ள

1. 'விநாயகரையும் சிவபெருமானையும்' எனக் கொள்ள வேண்டும்.
2. 'நினைக்க முத்தி ஓதுவார்' என்று வாசிக்க.
3. 'வேளாளருக்கு' என வாசிக்க.
4. 'இன சம்மதியாக' என்று வாசிக்க.

கடவீர்கள். இந்த பெரிய ஞட்டு மடத்திலெ தர்ம பிச்சை மூஷ்ட்டி யிட்டுக்கொண்டு வந்த பரதெசிகளுக்கு அன்னம் கொடுத்துக் கொண்டு இந்தபடிக்கி தாம் நடப்பிவித்துக்கொள்ள கடவீராகவும். பெரிய நாட்டு மடத்துக்கு தர்மத்துக்கு நாங்கள் பெரிய ஞட்டு அவர்கள் கொடுத்த தாம்(ம்ம்)பிற சாத(ள)[ன]ம்: தமக்கு பாற[ம்*]பரியம் சந்தான பாறம்பரியம். சந்திறாதித்த வரையும் இந்தபடிக்கி நாங்கள் பெரிய ஞட்டு அவர்கள் நடக்க கடவெளுகவும். இந்த பெரிய ஞட்டு மடத்து தர்மத்துக்கும் தாம்பர சாதனத்துக்கும் யாதாமொருவர் அகிதம் பண்ணிஞர் களொ அவர்கள் காசி காஞ்சி ராமெஸ்வரம் பிறயாகை குருஷ் ஷெத்திரம் கெதாரம் நீலகண்டம் இந்த ஏழு ஸ்தலத்திலெயும் கொகத்தி பிரம்மத்தி சிசுவத்தி குருவத்தி[1] மாதுர் வர்க்கம் பிதுர் வர்க்கம் சி[சு](து)வர்க்கம் இவர்களெ கொன்ன தொஷத்திலெ பொகக் கடவீராகவும். நாங்கள் பெரிய ஞட்டு அவர்கள் உண் டாக்கின பெரிய ஞட்டு மடம் தர்மத்துக்கும் தாம்பர சாதனத் துக்கும் யாதாமொருவர் வாக்கு சகாயம் சரி[ர](கல) சகாயம் பண்ணின பெர்களுக்கு காசி காஞ்சி ராமெஸ்வரம் பிரயாகை குருஷ்ஷெத்திரம் கெதாரம் நீலகண்டம் இந்த ஏழு ஸ்தலத்திலெ யும் சூரிய கிரணம் சந்தி(ருய)[கிரக]ணம் புண்ணிய காலத்திலெ யும் பூதானம் கொதானம் கன்னிகா தானம் அன்னதானம் சொர்ண தானம் வஸ்த்திர தானம் கிரக தானம் அசுவ தானம் யிந்த னவ தானமும்[2] அநெக துலாபுருஷ(சா)தானமும்பண்ணின பலனும் உண்டா(க)[வ]தாக கடவஞகவும். இந்தப்படி சம்ம திச்சு நாங்கள் பெரிய ஞட்டு அவர்கள் அனைவர்களும் பெரிய ஞட்டு மடத்து தர்மத்துக்கு தாம்பர சாதன பட்டையம் கொடுத்தொம் திருவ[ண்*]ணுமலை பெரிய ஞட்டு மடத்துக்கு கர்த்தரான நினைக்க முத்தி(ஞ) [ஒ]துவாருக்கு இருபத்து நாலு கொஷ்டத்தாரும் எழுபத் தொன்பது வளஞட்டு அவர்கள் கூகா-ம் நத்தத்தாரும் நாம் இனி இருபத்து ஞலு கொஷ்ட்டத் தார் எழுபத் தொன்பது வள(ர)ஞட்டார் கூகா (வதாரம) [நத் தத்தாரோம்] யிவர்கள் கை எழுத்து[॥*]

---

1. 'கோஹத்தி, பிரம்மஹத்தி, சிசுஹத்தி, குருஹத்தி' என்று வாசிக்க.

2. 'நவதானம்' என்று குறிக்கப்பட்டாலும், எட்டுத் தானங்களின் பெயர்களே கொடுக்கப்பட்டுள்ளன. ஒன்பதாவது தானம் எது என்பது குறிக் கப்பெறவில்லை.

## திருப்பராய்த்துறை — Tirupparāyttura.

திருச்சிராப்பள்ளி ஜில்லா, திருச்சிராப்பள்ளி தாலூகாவில் காவிரிக்குத் தென் கரையில் உள்ள ஒரு சிவஸ்தலம்; அப்பர், சம்பந்தர், மாணிக்கவாசகர் ஆகிய மூவரும் பாடிய பெருமை வாய்ந்தது. திருப்பராய்த் துறை உடைய நாயனார் என்று கல்வெட்டுக்களிலும், தாருகாவனேச்வரர் என்று இப்போதும் வழங்கப் பெறும் சிவன் கோவிலிலிருந்து கிடைத்தவை பின் வரும் மூன்று சாசனங்களும். சாசனப் பட்டியலில் அவை காணப்படுகின்றனவே யல்லாமல் அவை எழுதப்பட்டிருக்கும் ஏடு கிடைக்கவில்லை.

**Tirupparāytturai** is a village to the south of the **Kāvēri** in the Tiruchirāppaḷḷi taluk of the district bearing the same name. The following three records secured from the temple of S'iva known at present as Dārukāvanēśvara and referred to as Tirupparāytturai-uḍaiya-Nayanār in the inscriptions are mentioned in the *List*; but the texts are not available.

சாசனம்—1102] [No. *1* on p. *60*

'கோனாடு ஜில்லாவில்' திருப்பராய்த் துறையிலே ஈசுவரன் கோவிலில் உள்ள பிள்ளையார் ஆலயத்தின் வடபுறச் சுவரில் எழுதியிருப்பது.

On the north wall of the Piḷḷaiyar shrine in the temple of Īśvara at Tirupparāytturai [village in the district of Kō-nāḍu.]

Record dated in S'aka 1296, Ānanda, in the reign of the Vijayanagara king **Vira Kampana Udaiyar** registering the grant of land in the village of Tirupparāytturai by Tiruvakkiśurattu uḍaiyān and another to the (god) Piḷḷaiyar Chokka Nayanar.

This record has been published as No. 590 in the **South Indian Inscriptions** (Texts), Vol. VIII. Therein it is stated that the record is engraved on the north, west and south walls of the Gaṇēśa shrine in the temple. From the published text, it is seen that the record, dated in S'aka 1296. Ananda, Mīna, S'u. pañchamī Sunday and Rōhiṇī registers the gift by a certain Tiruvakkiśuram-uḍaiyān Maḷavadaraiyan of Kaḷattūr residing at Periya Veṇmaṇi in S'ūralūr-kūṟṟam, a sub-division of Tenkarai Rājagambhīra-vaḷanāḍu of some lands, house-sites, household-servants and slaves as free-gift out of affection (*prīti-dāna*) to Piṟaiyar, daughter of Mādēvar-Nāchchiyār who was the daughter of Aṇṇāvuḍaiya Vaḍuga-p-piḷḷaiyar, one of the *Malaiyāḷar* of Vaḍakarai Manṟachcha,

nallār, and one of the *paradēśi* living in the same village Periya Veṇmaṇi, and to her son Chokka-nāyaṉār. It appears from the record that the donee Piṟaiyār was living with the donor Maḻavadaraiyan for some time and that Chokka-nāyaṉār was born to them then.

விஜயநகர மன்னனுன வீர கம்பண உடையார் ஆட்சிக் காலத்தில் சக வருஷம் 1296, ஆனந்த ஆண்டில் பிள்ளையார் சொக்க நாயனுருக்குத் திருவக்கீசுர உடையார் நிலம் அளித்த செய்தியைக் கூறுவதாக உள்ளது.[1]

சாசனம்—1103] [No. 2 on p. 60

அதே கோவிலில் பிள்ளையார் கோவிலின் வடபுறம் உள்ளது.

On the northern side of the Piḷḷaiyār shrine in the same temple. Record dated in the 9th year of the reign of the Pāṇḍya king **Sundara Pandyadeva**. The other particulars of the record are not available. It is stated that the grant is damaged on the stone.

This is probably the same as the inscription found engraved on the south wall of the Subrahmaṇya shrine in the same temple and published as No. 591 in the **South Indian Inscriptions** (Texts), Vol. VIII. Dated in the 9th year, Mēsha, S'u. tritīyā, Friday, Kārttikai in the reign of the Pāṇḍyan king Jaṭāvarman *alias* Tribhuvana-chakravartin **Sundara Pandyadeva** it registers the sale to the authorities of the temple of god Tirupparāyttuṟai-uḍaiyār by the

---

1. இது தென்னிந்திய சாசனங்கள், VIII வால்யூம், 590 நெ. ஆக வெளியாகியுள்ளது. அதிலிருந்து இச் சாசனம் அதே கோவிலில் உள்ள கணேசர் ஆலயத்தின் வடக்கு, மேற்கு, தெற்கு ஆகிய மூன்று புறங்களின் சுவரிலும் பொறிக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. சக 1296, ஆனந்த வருஷம், மீந ஞாயிறு, பூர்வ பக்ஷத்துப் பஞ்சமியும் ஞாயிற்றுக் கிழமையும் பெற்ற ரோகிணி நாளில் பொறிக்கப்பட்டிருப்பதாகக் காண்கிறது. தென் கரை ராஜ கம்பீர வளநாட்டுச் சூரலூர்க் கூற்றத்துப் பெரிய வெண்மணியிலிருந்த களத்தூருடைய திருவக்கீசுர முடையான் மழவதரையன் அதே ஊரில் இருந்த பரதேசிகளில் வடகரை மன்றச்சநல்லூரில் மலையாளரில் அண்ணுவுடையார் வடுகப் பிள்ளையார் மகள் மாதேவர்நாச்சியார் மகளான பிறையாருக்கும் அவள் மகன் சொக்க நாயனுருக்கும் பிரீதியினுல் நிலமும் மனையும் வெள்ளாட்டிகளும் அடிமைகளும் பிரீதிதானம் பண்ணிக் கொடுத்த விவரத்தைத் தெரிவிக்கிறதென்பது விளங்குகின்றது.

assembly consisting of the *nāḍu* and the *agara-brahmadēyas* of Rāja-gambhīra-vaḷanāḍu of the lands and other properties belonging to a certain Araiyan Āḷiyār *alias* Kēraḷāntaka-Viḻupparaiyar, of the village Karuppūr (Karuppūr-uḍaiyān) in Uṟaiyūr-kūṟṟam, a sub-division of Rājagambhīra-vaḷanāḍu. It is stated that the lands were confiscated as a punishment for the several charges brought against him and proved.

பாண்டிய மன்னனுன சுந்தர பாண்டிய தேவனுடைய ஒன்பதாம் ஆண்டுச் சாசனம். மற்ற விவரங்கள் கிடைக்கவில்லை. சிதிலமடைந்திருப்பதாகக் குறிக்கப்பட்டுள்ளது.[1]

சாசனம் —1104] [No. 3 on p. 61

*அதே பிள்ளையார் ஆலயத்தின் கிழக்குப் புறம் இருப்பது.*

On the east side of the Piḷḷaiyār shrine in the same temple. Record dated in the reign of **Konerinmaikondan** registering the grant by the king of a portion of land to god Tirupparaytturai-uḍaiyar.

This is probably the same inscription written on the north wall of the Subrahmaṇya shrine in the same temple and published as No. 592 in the **South Indian Inscriptions** (Texts), Vol. VIII. Dated in the 35th year, 266th day in the reign of king Tribhuvana chakravartin Kōnērinmaikoṇḍan it registers the grant by the king

---

1. *அதே கோவிலில் சுப்பிரமணியசுவாமி ஆலயத்தின் தென்புறச் சுவரில் பொறிக்கப்பட்டுள்ள சாசனமே போலும். கோச் சடையபன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ* சுந்தரபாண்டிய தேவனுடைய *ஒன்பதாம் ஆண்டு மேஷ மாசம், பூர்வபக்ஷம், திரிதியை, வெள்ளிக் கிழமை, கார்த்திகை நாள் கொண்ட அந்தச் சாசனம்* தென்னிந்திய சாசனங்கள், VIII *வால்யூம்,* 591 *நெ. ஆக வெளியிடப்பட்டுள்ளது. இராஜ கம்பீர வளநாட்டு உறையூர்க் கூற்றத்துக் கருப்பூருடையான் அரையன் ஆளியாரான கேரளாந்தக விழுப்பரையர்மீது சாட்டப் பெற்ற குற்றத்துக்குத் தண்டமாக அவர் காணியான நிலங்களைப் பறிமுதல் செய்து நாட்டவரும் அகர பிரமதேயங்களாரும் திருப்பராய்த்துறை உடையார் கோவில் ஆதி சண்டேசுவர தேவர்கன்மிகளுக்கு விற்றுக் கொடுத்ததற்கு நிலவிலைப் பிரமாண இசைவுத் திட்டு. சாசனம் சிதிலமாகத்தான் உள்ளது.*

of 20 *vēli* of *tirunāmattukkāṇi* land in Nannallūr, hamlet of Naṅgai-brahmadēya *alias* Ariñjigai-chaturvēdimaṅgalam in Rājagambhīra-vaḷanāḍu, tax-free as *dēvadāna iraiyili.*[1]

கோநேரின்மை கொண்டான் சாசனம். திருப்பராய்த்துறை உடையாருக்கு நிலம் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.[2]

சின்ன சீலப்பாடி Chinna-Ṣīlappāḍi

*இவ்வூர் மதுரை ஜில்லா திண்டுக்கல் தாலூகாவில் உள்ளது.*

The village is included in the Dindigal taluk of the Madurai district and is said to have formed part of Bālakrishṇāpuram *miṭṭā* in the days of Col. Mackenzie.

சாசனம்—1105] [D. *2944-26*

*'பாலகிருஷ்ணபும் மிட்டாவில் சின்ன சீலப்பாடிக் கிராமத்தில், ஊருக்குச் சமீபம் வடமேற்கு நிலைப்பாறையில் எழுதியிருக்கிற சிலாசாசனம்' என்று மக்கென்ஸியின் பிரதியில் குறிக்கப்பட்டிருக்கிறது.*

---

1. Another record on the same wall and published as the next item, No. 593, in the same volume, relates to the same transaction, being the order of the king for effecting the entries in the registers. It is possible that the copy of the Mackenzie collection might been of this inscription.

2. *அதே சுப்பிரமணிய சுவாமி ஆலயத்தின் வடக்குச் சுவரில் எழுதியிருப்பதே போலும். இது* தென்னிந்திய சாசனங்கள், VIII *வால்யூம்,* 592 *நெ. ஆக வெளியாகி யுள்ளது.*

*திரிபுவன சக்கரவர்த்தி கோநேரின்மை கொண்டானுடைய முப்பத்தைந்தாம் ஆண்டில்* 266-*ஆம் நாள் திருப்பராய்த் துறை உடையார்க்கு வேண்டும் நிவந்தங்களுக்கு இறுப்பதற்காக இராஜ கம்பீர வளநாட்டு நங்கை பிரமதேயமான அறிஞ்சிகை சருப்பெதி மங்கலத்துப் பிடாகை நன்னல்லூரில் திருநாமத்துக் காணி நிலத்திலே இருபது வேலியைத் தேவதான இறையிலியாக அரசன் அளித்த செய்தியைத் தெரிவிப்பது. அதே சுவரில் உள்ளதும் அடுத்த* 593 *நெ. ஆக வெளியிடப் பெற்றதுமான சாசனமும் இதே விஷயத்தைப் பற்றியது. அதே அரசனல் அதே* 35-*ஆம் ஆண்டில்* 309-*ஆம் நாள் வரிக்கூறு செய்வார்களுக்குக் கணக்கில் இட்டுக் கொள்வதற்காக அளிக்கப் பெற்ற உத்தரவு. அதுவாக இருந்தாலும் இருக்கலாம்.*

On a rock to the north-west of the village. Record dated in the cyclic year Virōdhikrit, Āḍi 11, stating that certain dry lands to the east of the rock were sold, by Śokkaliṅgam-Śaṅkaran, 'the slaughterer of rams' (*kaḍāveṭṭi*) to Rāmaṇa Nāyakar.

In a note appended to it, it is said that Śokkaliṅgam Śaṅkaran, a Vanniya who was attached as the official 'slaughterer of rams' to the Durgā temple in the fort at Tiruśirapuram (Tiruchirāpaḷḷi) in the days of the Nāyaka rulers (*karttā*), got the villages Chinna Śīlappāḍi, Periya Śīlappāḍi and Śellamantaḍi newly created by Chinna Śīlan and Periya Śīlan, as *sarvamānya* (tax-free) and that when the Muḷḷippāḍi *dēvasthānam* was founded by Rāmaṇa Nāyaka of Āraṇi, he the said Ramaṇa Nāyaka purchased this piece from the said *kaḍāveṭṭi* Śaṅkaran on a regular sale and endowed it to the temple as *dēvadānamānya*.

விரோதிகுறு[து*] ஆடி மாசம் ௰௧௨ கெடாவெட்டி சொலங்க ஙககம் செங்கறன்[1] ஆறணி ருமண ஞயக்கறுககு சுத்தக் கிறயமாக குடுத்[த*]து யிந்த பாறைக்கி கீள்புறம் மலையடிப் புஞ்சை விரைப் பறவு க. ா. த. ஹு. ௨. க லி டை சம. ||

[யிந்த சாசனம் யெழுதியிருக்குற பாரைக்கி கீள்புறத்தில் நிலம் குழி ௲௰௬. ஷெ நிலத்துக்கு ஞலு புறமும் ஞலு மூலையிலும் வாமனக் கல்லு யென்குற ஞலு செங்கு செக்கிறம் போட்டிருக்குறக் கல் னட்டு யிருக்கிறது. கற்[த்*]தாக்கள் ஞாளயில் திருசிறபுறம் கொட்டையில் துற்கியமமாளுக்கு கிடா வெட்டுகுற சொக்கலிங்கம் செங்கிறனெங்குற வன்னியறுக்கு சின்ன சிலன் பெறிய சிலன் ஏன்குறவன் உண்டாக்கின சினன சீலப்பாடி பெறிய சிலப்பாடி செல்லமந்தாடி யிந்த கிறுமங்கள் சற்வமானியமாக விட்டு யிருக்[கை*]கயில் முள்ளிப்பாடி தெவஸ்தானம் உண்டுபண்ணின யிந்த ஆறணி ருமண ஞயக்கறவர்கள் ஷெ கிடா வெட்டி செங்கறனிடத்தில் சுத்த கிரையத்துக்கு பூமி வாங்கி தெவஸ்தான மானியம் செயிதுக் குடுத்தாற் என்று ஷெ கிறுமத்து குடிகளும் ஆறணி ருமண ஞயக்கறவற் வமுசத்தாறும் சொல்லுகுற ஆகிகத்து யெழுதப்பட்டுது.]

1. 'சொக்கலிங்கம் சங்கரன்' என்று வாசிக்க.

திருவள்ளூர் Tiruvaḷḷūr

பின் வரும் 23 சாசனங்களும் செங்கற்பட்டு ஜில்லா, திருவள்ளூர் தாலூகா, திருவள்ளூரில் உள்ள வீரராகவப் பெருமாள் கோவில் என்னும் விஷ்ணு ஆலயத்திலிருந்து பிரதி செய்யப்பட்டனவாகக் கொடுக்கப்பட்டுள்ளன. இந்தச் சாசனங்களின் பிரதிகள் கிடைக்கவில்லை. ஆகவே மக்கென்ஸியின் உதவியாளர்கள் இந்தச் சாசனங்களைப்பற்றி எழுதிவைத்துச் சென்றுள்ள விவரங்களையே நாம் ஆதாரமாகக் கொள்ளவேண்டியிருக்கிறது. அந்த விவரங்கள், '**தென் பகுதி ஜில்லாக்களிலிருந்து பிரதி செய்த சாசனங்களின் பட்டியல்**' என்னும் தொகுதியில் 111-முதல் 118-முடிய உள்ள பக்கங்களில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவை சாசன இலாகாவினாலும் பிரதி செய்யப்பட்டனவாகத் தெரியவில்லையென்பது இந்தத் தொகுதியின் இரண்டாம் பாகத்து முன்னுரையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

வைஷ்ணவர்களுக்கு முக்கியமான திவ்விய க்ஷேத்திரங்களுள் ஒன்று இவ்வூர். ஸ்ரீவைஷ்ணவர்களிலே வடகலையினரின் ஒரு பகுதியினருக்கு ஆசாரியரான அஹோபல மடத்து ஜீயர் சுவாமிகள் இவ்வூரையே தம் வாசஸ்தலமாகக் கொண்டிருக்கிறார்கள்.

The following 23 inscriptions are said to have been copied from the temple of Vishṇu known as Vīrarāghava-p-perumaḷ at Tiruvaḷḷūr, the head-quarters of the taluk of the same name in the Chingleput district. The texts of these inscriptions are not available. As such we have to depend mainly on the particulars furnished by the assistants of Col. Mackenzie for these records on pages 111 to 118 of the '*List of Inscriptions from the Southern Districts.*' As already stated in the Introduction to the Second volume of this work, these inscriptions do not appear to have been copied by the Epigraphy Department also.

This place is an important centre for the Vaishṇavas. The Jīyar of the Ahōbala maṭha, the religious head of a section of the *Vaḍagalai Śrī Vaishṇavas* has been living here.

சாசனம் — 1106] [No. *1* on page *111*

வீரராகவப் பெருமாள் கோவில் விமானத்தின் தென்புறம் உள்ள ஒரு கல்லிலே பொறிக்கப்பட்டிருப்பது.

On a stone on the south of the Vimāna of the central shrine in the temple of Vīrarāghava. Record dated in the 5th year of the reign of the Chōḷa king **Kulottunga choladeva** registering the grant by a person whose name might be restored either as Tiruveṇkāḍu-dēvan or as Tiruvēṅkaṭa dēvan, of one thousand *kuḻi* of land in the village of

**Talakararachchēri** (Talakañchēri?) from the income of which was to be celebrated the *Makara saṅkramaṇa* festival for the god Vīra-rāgava-perumaḷ. There are no indications available to identify this king Kulōttuṅgachōḷa.

சோழ மன்னனான குலோத்துங்க சோழனுடைய ஐந்தாம் ஆண்டுக் கல்வெட்டு. வீரராகவப் பெருமாளுக்கு மகர சங்கிர மண தினத்தன்றைக்கு விசேஷ உற்சவம் நடத்துவதற்காகத் தலகாஞ் சேரி என்னும் கிராமத்தில் ஆயிரம் குழி நிலம் அளிக் கப்பட்ட செய்தியைத் தெரிவிக்கிறது. தானம் வழங்கியவன் பெயரைத் திருவேங்கட தேவன் என்றோ திருவெண்காட்டுத் தேவன் என்றோ கொள்ளலாம். சாசன காலத்தில் அரசு செலுத் திய குலோத்துங்க சோழன் அதே பெயர் கொண்ட மூவரில் யார் என்பதை நிச்சயிக்கவும் முடியாது.

சாசனம் — 1107] [No. 2. on p. 111

*அதே கோவிலில் வாகன மண்டபத்தின் கிழக்குச் சுவரின் உட்புறம் எழுதியிருப்பது.*

On a stone in the inner (side of the) eastern wall of the *Vāhana-maṇḍapa* of the same temple. Record dated in S'aka1552, Prajōtpatti, in the reign of the Vijayanagara ruler **Vira-Venkatarayadeva Maharaya** registering the grant by Vīrarāghava S'aṭhakōpa-Jīyar, of 133 *pon* gold from the mortgage interest of which certain festivals were to be celebrated to god Vīra-Rāghavasvāmin and goddess S'ūḍikkoḍutta-Nāchchiyār.

The Jīyar was evidently of the Ahōbala maṭha, the thirteenth member in succession of line, who is said to have occupied the pontifical seat from 1630 to 1675 A.D.[1]

சக வருஷம் 1552, பிரசோத்பத்தி ஆண்டில் விஜயநகர மன் னனான வீர வேங்கடராயதேவ மஹாராயரின் ஆட்சியிலே வீரராகவ சடகோப ஜீயர் 133 பொன் அளித்து அதன் பொலியூட்டிலி ருந்து வீரராகவ ஸ்வாமிக்கும் சூடிக் கொடுத்த நாச்சியாருக்கும் நிவந்தம் நடத்துவதற்குத் திட்டமிட்ட செய்தியைத் தெரிவிப்

1. V. Rangacharya : *A Topographical List of the Inscriptions in the Madras Presidency*, Vol. I, I. pp. 466-7,

பது. அந்தப் பொன்னைக் கொண்டு நில அடைமானம் பெற்றுப் பொலியூட்டு நடந்த விவரமும் குறிக்கப்பட்டிருப்பதாகக் காண்கிறது.

[இந்தப் பொன் அளித்த ஜீயர் சுவாமிகள் அஹோபல மடத்தைச் சேர்ந்தவராகவே இருத்தல் வேண்டும். அவ்விதமாயின் அவர் கி. பி. 1630-முதல் 1675-வரையில் அந்தப் பீடத்தை அலங்கரித்த வீரராகவ சடகோப ஜீயர் சுவாமிகளாகவே இருக்கலாம்.]

சாசனம் — 1108] [No. 3. on p. 112

அதே கோவிலின் வடபுற மதில் சுவரில் பொறிக்கப்பட்டிருப்பது.

On the northern surrounding wall of the same temple. Record dated in Śaka 1543, Durmati, in the reign of the Vijayanagara king **RamadevaMaharayar** registering the grant by Raghunātha Nayaka, evidently the Nāyaka ruler of Tañjāvūr, to god Vīrarāghavasvāmin of some land comprised within the boundaries, north of Tiruvaḷḷūr, east of Talakañchēri, south of Pērambākkam and west of Kallaṇik-kuppam.

[See also No. 1124 below].

சக வருஷம் 1543, துர்மதியில் விஜயநகர மன்னரான ராம தேவ மகாராயரின் ஆட்சிக் காலத்தில் வீரராகவ சுவாமியின் [பூஜை நிவந்தங்களுக்காகத்] திருவள்ளூருக்கு வடக்கு, தலகாவனைக்குக் கிழக்கு, பேரம்பாக்கத்துக்குத் தெற்கு, கல்லணைக் குப்பத்துக்கு மேற்கு என இந் நான் கெல்லைக்குள்பட்ட நிலத்தை ரகுநாத நாயக்கர் தானம் அளித்த செய்தியைக் குறிக்கிறது.

[தானம் அளித்த ரகுநாத நாயக்கர் தஞ்சையிலிருந்து அரசாண்ட நாயக்க மன்னனே போலும்.]

சாசனம் — 1109] [No. 4. on p. 112

அதே கோவிலின் மேற்குப் பக்கத்து மதில் சுவரில் எழுதியிருப்பது.

On the western surrounding wall of the same temple. Record dated in S'aka 1516, Manmatha in the reign of the Vijayanagara king **Na ̣asimhadeva Maharaya** registering the grant by Tuppākki Krishna Nāyaka, evidently the Śeñji chief Tuppākki Krishṇappa Nāyaka, of nine shares of land out of the total of one hundred and six shares in the village of Chinnamambasamudram to god Virarāgava-p-perumāḷ,

விஜயநகர மன்னரான நரசிம்ஹ தேவ மகாராயரின் ஆட்சிக் காலத்தில் சக வருஷம் 1516 மன்மத ஆண்டுக் கல்வெட்டு. சின்னமாம்பா சமுத்திரம் என்னும் கிராமத்தின் நூற்று ஆறு பங்குகளிலே ஒன்பது பங்குகளை வீரராகவப் பெருமாளுடைய [நிவந்தத்துக்காகத்] துப்பாக்கி கிருஷ்ண நாயக்கர் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.

*தானம் அளித்தவர் செஞ்சி அரசனான துப்பாக்கி கிருஷ்ணப்பநாயக்கரே போலும்.*

சாசனம் — 1110] [No. 5 on p. 112

*அதே கோவிலின் வடபுறத்துச் சுவரிலே கருடனுக்குச் சமீபம் பொறிக்கப்பட்டிருப்பது.*

On the north surrounding wall, near the image of Garuḍa in the same temple. Record dated in S'aka 1595, Vijaya, in the reign of **Krishnappa Nayaka**, evidently the Śeñji chief Tuppakki Krishṇappa Nāyaka mentioned above, registering the settlement in the dispute of *Salipavadah* (?). Probably the dispute was of a communal nature between the *Śāliya* and another community.

சக வருஷம் 1595 விஜய ஆண்டில் கிருஷ்ணப்ப நாயக்கர் என்பார் ஏதோ ஒரு தகராறைத் தீர்த்துச் சமரசம் செய்வித்த விவரத்தைக் கூறுகிறது.

இவ்விடம் குறிக்கப்பட்டவர் செஞ்சி அரசரான துப்பாக்கி கிருஷ்ணப்ப நாயக்கரே போலும். விவாதம் சாலிய வகுப்பினருக்கும் வேறொரு வகுப்பினருக்கும் இடையே ஏற்பட்டது போலும்.

சாசனம் — 1111] [No. 6 on p. 113

*அதே கோவிலின் கிழக்குப்புறத்துச் சுவரிலே திருக்கோட்ட நம்பி [விக்கிரகத்துக்குச்] சமீபம் பொறிக்கப்பட்டிருப்பது. திருக்கச்சி நம்பி என்னும் பெயரே இவ்விதம் தவறாகத் திருக்கோட்ட நம்பி என்று பிரதி செய்யப் பட்டது போலும்.*

On the eastern wall, near the shrine of Tirukkōṭṭanambi in the same temple. Record dated in Śaka 1542, Raudri, in the reign of the Vijayanagara king Vīra **Venkatapatirayadeva Maharaya** registering the erection of a maṇḍapa supported with pillars and the

grant of 2800 *kuḷi* of land in the field known as Āvarampaṭṭi and 300 *kuḷi* of land in the field known as Paḷḷa-naḍu, in the village of Kakkaḷūr to god Vīraraghavasvamin by one Aḷagappa S'eṭṭi.

The shrine of Tirukkōṭṭa nambi wherefrom this inscription appears to have been copied is evidently that of Tirukkachchi nambi.

*விஜயநகர் மன்னரான வீர வேங்கடபதிராய தேவ மகாராயர் ஆட்சிக் காலத்தில் சக வருஷம் 1542, ரௌத்ரி ஆண்டு கொண்ட கல்வெட்டு. வீரராகவ சுவாமியின் [நிவந்தத்துக்காக] அழகப்ப செட்டியார் என்பவர் காக்களூர் கிராமத்தில் ஆவாரம்பட்டி என்னும் தனையில் 2800 குழி நிலமும் பள்ள நடு என்னும் தனையில் 300 குழி நிலமும் அளித்த செய்தியையும், தூண்கள் நிறுத்தி ஒரு மண்டபம் நிர்மாணித்த செய்தியையும் தெரிவிக்கிறது.*

[மண்டபம் திருவள்ளூரில் நிறுவப்பட்டது போலும்.]

சாசனம் — 1112] [No. 7 on p. *113*

*அதே கோவிலின் தெற்குப் புறத்துச் சுவரில் கனகவல்லி நாச்சியார் ஆலயத்தின் சமீபம் வெட்டப்பட்டிருப்பது.*

On the southern wall, near the shrine of the goddess Kanakavalli, in the same temple. Record dated in S'aka 1553, Āṅgirasa in the reign of the Vijayanagara king Vira **Venkatarayadeva Maharaya** registering the gift by a certain Raghupati Aiyar, of one share of land in the village of Chikkarāyapuram and a share of Vīraraghavapuram to god Vīrarāghavasvamin.

விஜயநகர மன்னனான வீர வேங்கடராய தேவ மகாராயர் ஆட்சிக் காலத்தில், சக 1553, ஆங்கிரச ஆண்டில் சிக்கமாயபுரம்[1] என்னும் கிராமத்தில் ஒரு பங்கும், வீரராகவ புரம் என்னும் கிராமத்தில் ஒரு பங்கும் ரகுபதி ஐயன் என்பவனால் வீரராகவ சுவாமிக்குத் தானம் அளிக்கப் பெற்ற செய்தியைத் தெரிவிக்கிறது.

சாசனம் — 1113] [No 8. on p. *113*

*அதே கோவிலில் ரங்க மண்டபம் கர்ப்பகிரகத்தின் மேற்குப்புறச் சுவரில் எழுதியிருப்பது.*

---

1. ஊர்ப் பெயர் சிக்கராயபுரம் என்பதாகும்.

On the western wall of the inner shrine, Raṅgamaṇḍapa in the same temple. Record dated in the cyclic year Manmatha registering the gift by a certain Mallayyan, son of Dēvan, of the village Nārāyaṇakāñchipaṭṭi as free-gift to god Vīrarāghava-p-perumāḷ and some Brahmaṇas in equal shares. The gift [probably relating to the temple] was placed in the hands of the *paṇḍārattār* of the temple.

மன்மத வருஷத்தில் தேவன் மகன் மல்லய்யன் என்பான் நாராயண காஞ்சிப் பட்டி என்னும் கிராமத்தைப் பங்குகளாகப் பிரித்து வீரராகவப் பெருமாளுக்கும் சில பிராமணர்களுக்கும் சம பங்குகளாகச் சர்வ மானிய தானம் அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. சுவாமிக்கு அளிக்கப்பட்ட கிராமப் பங்கு கோவிலின் பண்டாரத்தார் வசம் ஒப்புவிக்கப் பட்டதாகவும் கூறுகிறது போலும்.

சாசனம் — 1114] [No. *9* on p. *113*

அதே கோவிலின் தெற்குச் சுவரில் காண்பது.

On the south wall of the same temple. Record dated in Śaka 1580, Viḷambi, in the reign of the Vijayanagara king **Srirangarayadeva Maharaya** registering the grant by a certain Pratipi Rāja of half share in a Brāhmaṇa Agrahāram (probably the village of Agrahāram) situated to the north of Tiruppāśūr and west of Tiruvannūr to god Vīrarāghava-p-perumāḷ.

விஜயநகர மன்னனுன ஸ்ரீ ரங்கராய தேவ மகாராயர் ஆட்சிக் காலத்தில் சக வருஷம் 1580, விளம்பி வருஷத்தில் பொறிக்கப் பட்ட கல்வெட்டு. திருப்பாசூருக்கு வடக்கிலும், திருவன்னூருக்கு மேற்கிலும் உள்ள ஒரு பிராமண அக்கிரகாரத்தின் பாதிப் பங்கை வீரராகவப் பெருமாளுக்குப் பிரதிபி ராஜர் என்பவன் அளித்த செய்தியைக் கூறுகிறது.

சாசனம் — 1115] [No. *10* on p. *114*

அதே கோவிலில் உள்ள ஒரு மண்டபத்தின் மேற்குப் பக்கத்திலும் வடக்குப் பக்கத்திலும் உள்ள சுவர்களின் உட்புறம் எழுதியிருப்பது.

On the northern and western walls of the yagaśāla maṇḍapa in the same temple. Record dated in Śaka 1559, Prabhava registering the gift by Nārāyaṇa Śaṭhakōpa Jīyar, evidently a pontificial head of the Ahōbala maṭha, of the village Veṅgattūr as free-gift (*sarva-*

*mānya*) to god Vīrarāghava-p-perumaḷ. The inscription is probably in the Telugu language and script.

விஜயநகர மன்னனுன வீர வேங்கடபதி ராய தேவ மகாராயர் ஆட்சிக் காலத்தில் சக வருஷம் 1559, ப்ரபவ ஆண்டில் பொறிக் கப்பட்ட கல்வெட்டு. வீரராகவப் பெருமாளின் பூஜை நைவேத் தியத்துக்காக[வும் நித்த நிபந்தத்துக்காகவும்] நாராயண சட கோப ஜீயர் என்பார் வெங்கத்தூர் கிராமத்தைச் சர்வ மானிய மாக அளித்த செய்தியைக் கூறுகிறது.

[இந்தச் சாசனம் தெலுங்கில் பொறிக்கப்பட்டுள்ளதோ என்று சந்தே கிக்க இடம் உள்ளது. தானம் வழங்கிய ஜீயர் அகோபல மடத்தைச் சேர்ந்த வரே போலும்.]

சாசனம்—1116] [No. *11* on p. *114*

அதே கோவிலில் கருட விக்கிரகத்துக்குத் தென்புறம் உள்ள சாசனம்.

On the south of the image of Garuḍa in the same temple. Record dated in Śaka 1481, Siddhārtin, stating that the stones round the temple of Vīrarāghavasvamin were placed, (i.e., that the *prākāras* round the temple were paved with stones) by a certain Anantaḻvar Aiyan.

சக *1481*, சித்தார்த்தி வருஷத்தில் அனந்தாழ்வார் ஐயன் என்பான், வீரராகவ சுவாமி கோவிலைச் சுற்றிலும் கல் அமைத் தான், அதாவது பிராகாரங்களைக் கருங்கல்லால் தளவரிசை செய் தான் என்னும் செய்தியைத் தெரிவிக்கிறது.

சாசனம் — 1117] [No. *12* on p. *111*

அதே கோவிலின் தென்புறத்து மதிற்சுவரில் காண்பது.

On the southern surrounding wall of the same temple. Record dated in Śaka 1487, Krōdhana, in the reign of the Vijayanagara king Sadasivadeva Maharaya. The other particulars of the inscription are not found.

விஜய நகர மன்னனுன சதாசிவ தேவ மகாராயர் ஆட்சிக் காலத்தில் சக வருஷம் *1487*, குரோதன ஆண்டு கொண்ட கல் வெட்டு. மற்ற விவரங்கள் கிடைக்கவில்லை.

சாசனத்தின் ஆண்டு குரோதன ஆனல் சக வருஷம் 1467 என்று இருத் தல் வேண்டும்.

சாசனம் — 1118] [No. *13* on p. *115*

*அதே கோவிலில் கனகவல்லி நாச்சியார் ஆலயத்தின் கர்ப்பகிரகத்தில் உள்ளது.*

On a stone in the inner shrine, i.e., *garbha griha* of the goddess Kanakavalli in the same temple. Record dated in Śaka 1487, Viśvavasu, in the reign of the Vijayanagara king **Sadasivadeva Maharaya** registering the grant by Pāpu Timmayyadēva Mahārāya of the village Puttāharam as free-gift (*sarvamānya*) for the inn (choultry) of Tirunattanam.

*விஜய நகர மன்னனுன சதாசிவ தேவ மகாராயர் ஆட்சிக் காலத்தில் சகவருஷம் 1487, விசுவாவசு ஆண்டில் பப்பு திம் மய்யதேவ மகாராயர் திருநத்தானம் என்னுமிடத்தில் உள்ள சத்திரத்துக்காகப் புத்தகரம் என்னும் கிராமத்தைச் சர்வமானிய மாக அளித்த செய்தியைக் கூறுவது.*

சாசனம் — 1119] [No. *14* on p. *115*

*அதே கோவிலில் கனகவல்லி நாச்சியார் ஆலயத்தின் கர்ப்பகிரகத்துச் சுற்றுச் சுவரில் காண்பது.*

On a stone on the surrounding inner shrine of Kanakavalli Nachchiyār in the same temple. Record dated in S'aka 1471, Saumya in the reign of the Vijayanagara king **Sadasivadeva Maharaya** registering the [tax-]free gift to god Vīrarāghava-p-perumāḷ of the village Rāvuttanallūr by Bala-Magappayadēva Mahārāya.

It is possible to restore the name of the donor as Bala-Nāgap-payyadēva Maharaya.

*விஜய நகர மன்னனுன சதாசிவ தேவ மகாராயர் ஆட்சிக் காலத்தில் சக வருஷம் 1471, ஸௌமிய ஆண்டில் பாலமாகப் பய்ய தேவ மகாராயர் என்பவர் ராவுத்தநல்லூர் என்னும் கிரா மத்தை வீரராகவப் பெருமாளுக்குச் சருவ மானியமாக அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது.*

*தானம் அளித்தவர் பெயர் பாலநாகப்பய்ய தேவ மகாராயர் என்று இருக்கலாம்.*

சாசனம் — 1120] [No. *15* on p. *115*

*அதே கோவிலின் ரங்க மண்டபத்தில் மேலண்டைப் புறம் உள்ள உள் சுவரில் எழுதியிருப்பது.*

On a stone on the western inner wall of *Raṅgamaṇḍapa* in the same temple. Record dated in the cyclic year S'obhakrit registering some transaction, probably a gift, by Rāmachandradēva to god Tiruvaḷḷūr-Appan. It is stated that the inscription is damaged.

*ஸௌமிய வருஷத்தில் திருவள்ளூர் அப்பனுக்கு ராமசந்திர தேவர் என்பவர் ஏதோ அளித்த செய்தியைக் கூறுவது. விவரம் ஏதும் கிடைக்கவில்லை. சாசனம் சிதிலமாக இருப்பதாகக் குறிக்கப்பட்டுள்ளது.*

சாசனம் — 1121] [No. *16* on p. *116*

*அதே கோவிலில் ரங்கமண்டபத்தின் மேலண்டைப் பக்கம் உள்புறச் சுவரில் எழுதியிருக்கும் சாசனம்.*

On a stone on the western inner wall of the *Raṅgamaṇḍapa* in the same temple. Record, the date of which is not found, registering the provision made for the celebration of the Vaikāśi festival and for food offerings to god Vīrarāghava-p-perumāḷ by **Madhurantaka Pottappi-choladeva.**

*திருவள்ளூர் அப்பனுக்கு வைகாசி உற்சவத்துக்கும் நைவேத்தியத்துக்கும் [அதாவது நித்திய நிபந்தங்களுக்கும்] ஆக மதுராந்தகப் போத்தப்பிச் சோழன் ஏற்பாடு செய்ததைக் குறிக்கிறது. அவன் என்ன அளித்தான் என்பதோ அவனுடைய ஆட்சியின் ஆண்டு முதலிய விவரங்களோ விளங்கவில்லை.*

சாசனம் — 1122] [No. *17* on p. *116*

*அதே கோவிலில் வாகன மண்டபத்தின் கிழண்டைப் பக்கம் உள்புறச் சுவரில் உள்ளது.*

On a stone on the eastern inner wall of the *Vāhanamaṇḍapa* in the same temple. Record dated in S'aka 1552, Prajōtpatti. The other particulars of the record are not found.

*சக வருஷம் 1552, பிரஜோத்பத்தி ஆண்டு கொண்ட சாசனம். மற்ற விவரங்கள் தெரியவில்லை.*

சாசனம் — 1123] [No. 18 on p. 116

அதே கோவிலில் சேனை முதலியார் ஆலயத்தின் மேற்குப்புறம் உள்ள சுவரில் காண்பது.

On a stone on the western wall of the shrine of Sēnai Mudaliyār in the same temple. Record dated in Śaka 1552. The other details of the inscription are not available.

சக வருஷம் 1552 கொண்ட சாசனம். மற்ற விவரங்கள் குறிக்கப்பெறவில்லை.

சாசனம் — 1124] [No. 19 on p. 117

அதே கோவிலில் கோபுர வாசலுக்கு வடவண்டைச் சுவரில் எழுதியிருக்கும் சாசனம்.

On a stone on the north side of the spire-gate (*gōpura-vāśal*) of the same temple. Record dated in Ś'aka 1542, Raudri in the reign of the Vijayanagara king Vīra **Ramadeva Maharayulu** registering some transaction, probably a gift by Raghunātha-Nāyakar Vīrarāghava Nāyakar. It is stated that the record is damaged.

It is possible that the correct name of the donor is Raghunātha Nāyaka-Vijayarāghava Nāyakar. Then it would indicate that Vijayarāghava Nāvaka, the son of Raghunātha Nāyaka and the Nāyaka ruler of Tañjāvūr was the intended person. We have inscriptions of Raghunātha Nāyaka as far north as Śeñji (Nos. 30 and 31 in Vol. I) and another record copied from this temple (No. 1108 above) is also attributable to him. A contemporary Telugu source also states that Maṅgammāḷ, the famous queen of Madurai, originally belonged to Tiruvaḷḷūr, being the daughter of Tuppākki Krishṇappa Nāyaka, the Śeñji chief and that there was a proposal of her marriage with Vijayarāghava Nāyaka of Tañjāvūr before she was married to Chōkkanātha Nāyaka of the Madurai Nāyaka line.

விஜய நகர அரசனான வீர ராமதேவ மகாராயலுவின் ஆட்சிக் காலத்தில் சக வருஷம் 1542, ரௌத்திரி ஆண்டில் ரகுநாத நாயக்கர்-வீரராகவ நாய்க்கர் என்பார் அளித்த ஏதோ ஒரு சாசனத்தைத் தெரிவிப்பது. மற்ற விவரங்கள் காணப்படவில்லை.

தானம் அளித்தவர் பெயர் ரகுநாத நாய்க்கர் - விஜயராகவ நாய்க்கர் என்று இருக்கலாம். அவ்விதம் ஆனால் தஞ்சை நாயக்க மன்னனான (ரகுநாத நாயக்கர் மகன்) விஜயராகவ நாயக்கரையே இது குறிக்கும். ரகுநாத

நாயக்கருடைய சாசனங்கள் செஞ்சி வரையில் (மேலே முதல் பாகம் செ. 81சாசனங்கள்) கிடைக்கின்றனவென்பதும் இதே கோவிலில் காணும் சாச ஒன்றும் (1108 செ.) அவனுடையதாக இருக்கவேண்டுமென்பதும் இங் கவனிக்கத் தக்கவை. சமகாலத்ததான தெலுங்கு நூல் ஒன்றில் மது அரசியான ராணி மங்கம்மள் ஆதியில் திருவள்ளுவரைச் சேர்ந்தவள் என் செஞ்சி அரசனான துப்பாக்கி கிருஷ்ணப்ப நாயக்கர் மகள் என்றும், மது நாயக்க வமிசத்துச் சொக்கநாத நாயக்கரை அவள் மணந்து கொள்வத முன்னர், அவளைத் தஞ்சாவூர் விஜயராகவ நாயக்கருக்கு மணமுடிக்க நரம் பேச்சு நடந்தது என்றும் குறிக்கப்பட்டிருக்கிறது.

சாசனம் — 1125] [No. *20* on p. 1

அதே கோவிலின் கோபுர வாசலுக்குத் தென்புறத்தில் பொறிக்கப் டிருப்பது.

On a stone on the south side of the gate of the gōpura in same temple. Record dated in S'aka 1523. The name of a cert Sattiyan is mentioned as the donor. The other particulars are available. The record is said to be damaged.

சக வருஷம் *1523* கொண்டது. சத்தியர் என்பவர் பெ காணப்படுகிறது. வேறு விவரம் தெரியவில்லை. சாசனம் சி மாக இருப்பதாகக் குறிக்கப்பட்டுள்ளது.

சாசனம் — 1126] [No. *21* on p. 1

அதே இடத்தில் உள்ளது.

At the same place. Record dated in the Śaka 1555, Durmu in the reign of the Vijayanagara king **Venkatarayadeva Mahara** registering some gift by the king. The other details are not av able as the record is said to be damaged.

விஜய நகர மன்னனான வீர வேங்கடராய தேவ மகாராயர் சிக் காலத்தில் சக வருஷம் *1555*, துர்முகி ஆண்டு கொண்ட ச னம். அரசன் ஏதோ அளித்ததைக் கூறுகிறது. மற்ற விவ கள் காணவில்லை. சாசனம் சிதிலமாக இருப்பதாகக் குறிக் பட்டுள்ளது.

சாசனம்—1127] [No. 22 on p. 117

*அதே கோவில் கோபுர வாசலுக்கு வடபுறத்தில் எழுதியிருப்பது.*

**On a stone on the north side of the gate in the same temple. Record dated in Śaka 1527, Parābhava, in the reign of the Vijayanagara king Vīra Venkatarayadeva Maharaya registering the grant by a certain Vapparee (*vyāpāri?* merchant) of a portion of land in the village Vīrarāghavapuram to god Vīrarāghava-p-perumal.**

*விஜய நகர மன்னனுன வீர வேங்கடராய தேவ மகாராயர் ஆட்சிக் காலத்தில் சக வருஷம் 1527, பராபவ ஆண்டில் வீரராகவப் பெருமாளுக்கு வியாபாரி ஒருவர் வீரராகவ புரம் என்னும் கிராமத்தின் ஒரு பகுதியை அளித்த செய்தியைத் தெரிவிப்பது.*

சாசனம் —1128] [No. 23 on p. 118

*அதே கோவிலின் இரண்டாம் பிராகாரத்தில் மேலண்டைப்புறத்துச் சுவரில் காண்பது.*

On a stone on the western wall of the second prākāra of the same temple. Record dated in Śaka 1555, Śrīmukha in the reign of the Vijayanagara king Vīra **Vira Venkatapatirayadeva Maharaya** registering some grant by the king. The other particulars are not available.

*விஜய நகர அரசனுன் வீர வீரவேங்கடபதி ராயதேவ மகாராயர் ஆட்சியில் சக 1555, ஸ்ரீமுக ஆண்டு கொண்ட சாசனம். அரசன் ஏதோ அளித்தான் என்று கூறுகிறது. மற்ற விவரங்கள் கிடைக்கவில்லை.*

## திருப்பாசூர் Tiruppāśūr

*செங்கல்பட்டு ஜில்லா திருவள்ளூர் தாலூகாவில் உள்ள இவ்வூர் இப்போது திருப்பாச்சூர் என்றும் வழங்கப் பெறும். இவ்விடம் உள்ள ஈசுவரன் கோவில் மூர்த்தியின் பெயர் வாசீச்வரர் என்பது. இந்தக் கோவிலிலிருந்து 14 சாசனங்கள் பிரதி செய்யப்பட்டனவென மக்கென்ஸியின் உதவியாளர்கள், தென்பகுதி ஜில்லாக்களில் பிரதிசெய்த சாசனங்களின் பட்டியலில் குறித்திருக்கிறார்கள். ஆனல் அவற்றின் பிரதி கிடைக்கவில்லை. பட்டியலில் காணும் அந்தப் பதினுன்கு சாசனங்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன,*

The village also known as Tiruppāchchūr is in the Tiruvaḷḷūr taluk of the Chingleput district. Mackenzie's *List of Inscriptions from the Southern Districts* gives the following 14 inscriptions as having been copied from the Śiva temple, now known as Vāchīśvara temple, at this place. Copies of these texts are not available. But these inscriptions have been copied by the Epigraphy Department in the year 1929-30.

சாசனம் —1129] [No. *24* on p. *118*

*கர்ப்பகிரகத்தின் வடபுறச் சுவரிலே உள்ளது.*

(No. 114 of 1930). On a stone on the north wall of the central shrine in the temple. Record dated in Śaka 1454 (wrong for 1459), Hēviḷambi, in the reign of the Vijayanagara king **Achyutadeva Maharaya** stating that Kāḷahasti Seṭṭiyār, a *vaiśya* (merchant) of Tiruppāśūr erected a maṇḍapa in the temple of Tiruppāsūr-Nāyanār, established the *liṅga* Kāḷahasti Īśvara-svāmin and gave 250 *paṇam* to the *sthānattār* for the (daily) worship and food-offerings to the god thus installed by him.

The Epigraphical Report gives the additional astronomical details, Mithuna, śu. tritīya, Monday, Śravaṇa, which would yield A.D. 1537, June 25, as the equivalent date taking the *paksha* Śu. as a mistake for ba.

விஜய நகர மன்னனுன அச்சுத தேவ மகாராயர் ஆட்சிக் காலத்தில் சக வருஷம் 1454[1] ஹேவிளம்பி ஆண்டில் பொறிக்கப் பட்டது. காளஹஸ்தி செட்டியார் என்னும் வைசியர் திருப் பாசூர் நாயனர் கோவிலில் ஒரு மண்டபம் எடுப்பித்து அதில் காளஹஸ்தி ஈசுவர சுவாமி என்னும் பெயரால் ஒரு லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து அதன் நித்திய பூஜை நைவேத்தியத்துக்காக 250 பணம் பொன் அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது.

சாசனம் —1130] [No. *25* on p. *118*

*அதே கோவிலில் கர்ப்பகிரகத்தின் முன்னுள்ள மண்டபத்தின் வடபுறச் சுவரிலே எழுதியிருப்பது.*

(No. 150 of 1930): On the north wall of the maṇḍapa in front of the central shrine in the same temple. Record dated in the 10th year, [Āni], in the reign of the Chōḷa king **Rajarajadeva** registering

---

1. சக வருஷம் 1459 என்று இருத்தல் வேண்டும்.

the gift by Rajadhiraja Malaiyarayan of 47 *kāśu*, to the Śivabrāhmaṇas (*paṭṭamār*) of the temple for the additional worship of god Tiruppāśūr-uḍaiyār.

From the Epigraphical report, it is seen that the king was Tribhuvana chakravartin **Rajadhirajadeva**, that the donor was Tiruvarangam-uḍaiyān *alias* Rājādhirāja Malaiyarāyan, son of Munaiyadaraiyan of Naḍuvilmalai-Perumūr nāḍu, and that the S'ivabrāhmaṇas agreed to provide for special offerings and worship to the god on Sundays.

*சோழ மன்னனுன ராஜ ராஜ தேவனுடைய ஆட்சிக் காலத்தில் 10-ஆம் ஆண்டுக் கல்வெட்டு. ராஜாதிராஜ மலையராயன் என்பான் திருப்பாசூர் உடையாருக்கு விசேஷ உற்சவம் நடத்துவதற்காக 47 காசு சிவப்பிராமணர்கள் (பட்டமார்) கையில் கொடுத்ததாகக் கூறுகிறது.*[1]

சாசனம் — 1131] [No. *26* on p. *119*

*அதே கோவிலின் மகா மண்டபத்து வடபுறச் சுவரில் காண்பது.*

(No. 144 of 1930). On the north wall of the mahāmaṇḍapa in front of the same shrine. Record dated in the 21st year in the reign of the Chōḷa king **Rajarajadeva** registering the gift by Śeṟṟuppēḍan Rājarājadēvan Vallavan [of Niyamam in Puliyūr-kōṭṭam] of 32 cows for [a perpetual] lamp and one bullock for the drum of the God.

The Epigraphical report gives the surname of Tribhuvana chakravartin to the king and the date as the 29th regnal year, Panguni.

*சோழ மன்னனுன ராஜ ராஜ தேவனுடைய ஆட்சியில் 21-ஆம் ஆண்டுக் கல்வெட்டு. சேற்றுப் பேடன் ராஜ ராஜ தேவன் வல்லவன் என்பான் சுவாமி சந்நிதியில் ஒரு நுந்தா*

---

1. *சாசன இலாகாவின் அறிக்கையிலிருந்து அரசன் பெயர் திரிபுவன சக்கரவர்த்தி ராஜாதிராஜன் எனவும், தானம் அளித்தவன் நடுவில்மலை பெருமூர் நாட்டு முனையதரையன் மகன் திருவரங்கமுடையானுன ராஜாதிராஜ மலையராயன் எனவும், ஞாயிற்றுக் கிழமை விசேஷ பூசையும் நிவேதனமும் நடத்துவதற்காகப் பொருள் இடப் பெற்றதெனவும் தெரிகிறது. அவ்வாண்டு ஆனி மாதமும் குறிக்கப்பட்டுள்ளது.*

விளக்கு எரிக்க 32 பசுவும், கோவில் முரசு அமக்கக் காளை ஒன்றும் அளித்த செய்தியைக் கூறுகிறது.

*சாசன இலாகாவின் அறிக்கையிலிருந்து சாசனம் திரிபுவன சக்கரவர்த்திகள் ராஜ ராஜ தேவனுடைய 29-ஆம் ஆண்டு பங்குனி மாதம் அளிக்கப்பட்டது என்றும், தானம் அளித்தவன் புலியூர்க் கோட்டத்து நியமத்தைச் சேர்ந்தவன் என்றும் தெரிகிறது.*

சாசனம் — 1132] [No. 27 on p. 119

*அதே கோவில் கர்ப்பகிரகத்தின் பின்புறச் சுவரில் எழுதியிருப்பது.*

(No. 124 of 1930). On the back wall of the central shrine in the same temple. Record dated in the 33rd year in the reign of the Chōḷa king **KulottungaCholadeva** registering the gift of 30 *kāśu* by the daughter of a certain Naṟpatteṇṇāyiravan to the *sthānattār* for the provision of an ear-ornament (*tiruttōḍu*) to the goddess Periya-Nāchchiyār and two measures of rice daily [from the interest on the money thus placed].

From the Epigraphical report it is seen that the king was Tribhuvana chakravartin Kulōttuṅga Chōḷadēva, 'who was pleased to take Madurai and the crowned head of the Pāṇḍya,' that the donor was named Kūttāḍum-piḷḷai *alias* Periyanāṭṭu-Naṅgai and that the rice was for the daily feeding of pilgrims.

சோழ மன்னனான குலோத்துங்க சோழ தேவனுடைய 33-ஆம் ஆண்டுக் கல்வெட்டு. அந்தக் கோவில் தேவியாரான பெரிய நாச்சியாருக்குத் திருத் தோடு செய்து சாத்தவும், தினசரி இரண்டு படி அரிசி அளிக்கவும் கோவில் தானத்தாரிடம் நாற்பத் தெண்ணாயிரவன் [நாட்டான்] மகள் 30 காசு பொன் அளித்த செய்தியைக் கூறுகிறது.[1]

---

1. *சாசன இலாகாவின் அறிக்கையிலிருந்து அரசன், 'மதுரையும் பாண்டியன் முடித்தலையும் கொண்டருளிய திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்' என்றும், தானம் அளித்தவள் பெயர் கூத்தாடும் பிள்ளையான பெரியநாட்டு நங்கை என்றும், அரிசி நாள்தோறும் வரும் (தேசாந்திரி) பிரயாணிகளுக்கு உணவு அளிப்பதற்கு என்றும் தெரிகிறது.*

சாசனம் — 1133] [No. 28 on p. 119

*அதே கர்ப்பகிரகத்தின் மேற்குச் சுவர்ப் பக்கத்தில் உள்ள மேடையில் எழுதியிருப்பது.*

**(No. 129 of 1930). On the pial near the western wall of the same shrine. Record, the date of which is not found, in the reign of the Chōḷa king Kulottunga Choladeva registering the gift of 36 *kāśu* by Kāliṅgarāja-Uḍaiyār to the *nagarattār* of Dēśiyapuram for maintaining 6 [perpetual] lamps and of 42 *kaśu* to the Śivabrāhmaṇas of the Tiruppāśūr temple for maintaining 4 [perpetual] lamps in front of the god Tiruppāśūr-uḍaiyar.**

From the Epigraphical report it is seen that the inscription is written on the west and the south walls of the central shrine in the temple. It is dated in the 45th regnal year of Rājakēsarivarman *alias* Tribhuvana chakravartin, Kulōttuṅgachōḷadēva. The *nagarattār* mentioned in the inscription are those of Jayadharapuram, attached to the village Kakkalūr*alias* Rājāśrayachaturvēdimaṅgalam in Kākklūr-nāḍu, a sub-division of Īkkāṭṭu-k-kōṭṭam and the donor Arumbākkiḻār Araiyan Ponnambalakkūttanār *alias* Kāliṅgarājar of Maṇavil, in Maṇavil-nāḍu. The donor is the famous general Naralōkavīra.

சோழ மன்னனுன குலோத்துங்க சோழ தேவன் ஆட்சிக் காலத்துக் கல்வெட்டு. அரசனுடைய ஆட்சி ஆண்டு தெரிய வில்லை. காலிங்க ராஜ உடையார் திருப்பாசூர் உடைய நாயனர் கோவிலில் 6[நுந்தா]விளக்கு எரிப்பதற்காகத் தேசியபுரம் நகரத்தாரிடம் 30 காசும், 4 [நுந்தா] விளக்கு எரிப்பதற்காகச் சிவப்பிராமணர்கள் கையில் 42 காசும் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.[1]

---

1. சாசன இலாகாவின் அறிக்கையிலிருந்து இச் சாசனம் கர்ப்பகிரகத்தின் மேல்புற, தென்புறச் சுவர்களில் பொறிக்கப்பட்டிருப்பதாகக் காண்கிறது. ராஜகேசரிவர்மனுன திரிபுவன சக்கரவர்த்திகள் முதற் குலோத்துங்க சோழ தேவனுடைய ஆட்சியில் 45-ஆம் ஆண்டு கொண்டது. தானம் அளித்தவன் பெயர் மணவில் நாட்டு மணவில் அரும்பாக்கிழார் அரையன் பொன்னம்பலக் கூத்தனுரான காலிங்க ராஜர் என்பதாகும். இவனே நரலோக வீரன் என்று பிரசித்தி பெற்றவன். அவன் அளித்த பொன்னைப் பெற்றுக் கொண்டவர்கள் ஈக்காட்டுக் கோட்டத்துக் காக்கலூர் நாட்டுக் காக்கலூரான ராஜாச்ரய சதுர்வேதி மங்கலத்தைச் சேர்ந்த ஜயதரபுரத்து நகரத்தார் ஆவர்.

சாசனம் — 1134] [No. *29* on p. *119*

*அதே கர்ப்பகிரகத்தின் வடபுறம் உள்ள திண்ணையில் காண்பது. [திரணைபோலும்.]*

(No. 108 of 1930). On the northern pial [probably a mistake for the tier of the wall] of the central shrine in the same temple. Record dated in the 4th year in the reign of the Chōḷa king **Virarajendra-choladeva** registering the gift, by Kaṇṇan Araśu, [a *kaikkōḷa* of the village] of 9 *kaḷañju* of gold for the ear-rings and 10 *kaḷañju* of gold for a necklace to be provided for the goddess Paṇaimulai-Nāchchiyār in the temple of Tiruppāśūr-uḍaiya-Nāyanar.

*சோழ அரசனான வீர ராஜேந்திர சோழ தேவனுடைய நான்காம் ஆண்டுக் கல்வெட்டு. திருப்பாசூர் கிராமத்துக் கைக்கோளர் கண்ணன் அரசு என்பான், தேவியான பணை முலை நாச்சியாருக்குத் தோடு செய்து அணிவிக்க ஒன்பது கழஞ்சு பொன்னும் கழுத்து மாலை செய்து அணிவிக்கப் பத்துக் கழஞ்சு பொன்னும் அளித்த செய்தியைக் கூறுகிறது.*

சாசனம் — 1135] [No. *30* on p. *120*

*அதே கோவிலில் பிரம்மாவின் வடக்குச் சுவரில் காண்பது. [அதாவது கர்ப்பகிருகத்தின் சுவரில் வடபுறம் பிரம்மாவின் விக்கிரகத்துக்குப் பக்கத்தில் உள்ளது போலும்.]*

(No. 117 of 1930). On the north wall, near the image of Brahma, of the same central shrine. Record dated in the 13th year [Panguni] in the reign of the Chōḷa king [Tribhuvana chakravartin*] **Rajaraja deva** registering the gift by S'ēmbūr Maṇi-nāgan Iḍar-nīkki-mallan *alias* Vāṇarāyan [on behalf of S'eṅgēṇi miṇḍan S'īyan *alias* S'ambu-varāyan] of 10 *kāśu* of gold for burning a perpetual lamp in front of the goddess Āḷuḍaiya-Nāchchiyār of the *paḷḷi-aṟai* (bed-chambers) in the temple.

*சோழ மன்னனான ராஜ ராஜ சோழனுடைய ஆட்சிக் காலத்தில் 13-ஆம் ஆண்டு கொண்ட கல்வெட்டு. சேம்பூர் மணிநாகன் இடர்நீக்கிமல்லனான வாணராயன் என்பான் திருப்பாசூர் உடைய நாயனார் கோயில் ஆளுடைய நாச்சியார் சந்நிதியில் ஒரு நுந்தா*

விளக்கு எரிக்கப் பத்துக் காசு பொன் அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது.[1]

சாசனம் — 1136] [No. 31 on p. 120

*அதே கோவிலின் தென்மேற்குச் சுவரில் எழுதியிருப்பது.*

On the south-west wall of the same temple. Record dated in Kāli 4473, Parīdhāvi, in the reign of the Vijayanagara king **Vira-Kampana Udaiyar** registering the gift, by purchase, of a garden called 'Añjāntōppu' by a certain Kaṇṇandai-Araśan Tyāgan of Villivallam to god Tiruppaśūr-uḍaiyār and goddess Paṇaimulai-Amman.

This is the same as No. 155 of 1930, found engraved on the south wall (inside) of the second prākāra in the same temple, which gives additional astronomical details of the date, Karkaṭaka, Śu. daśamī, Pushya and states that the gift of land provides for the celebration of a festival. Mentions also *svāmidrōharagaṇḍan* Kaṭṭappa-Uḍaiyār, to the south of whose property the gift land was probably situated.

The *tithi* daśami, either in the Śukla or bahuḷa paksha, cannot combine with the *nakshatra* Pushya in the month of Kaṭaka. In the absence of the week day, the date cannot be verified. In that month Pushya fell on Śu. prathamā corresponding to A.D. 1372, July 2, Friday.

விஜயநகர மன்னனான வீர கம்பண உடையார் ஆட்சிக் காலத்தில் கலியப்தம் 4473, பரிதாபி வருஷம் கொண்ட கல் வெட்டு. திருப்பாசூர் உடையாருக்கும் பனை முலை அம்மனுக் கும் [உற்சவம் நடத்துவதற்காக] வில்லிவல்லம் கண்ணந்தை அரசன் தியாகன் என்பான் தோப்பு வாங்கி அளித்ததைத் தெரி விக்கிறது. தானம் அளிக்கப்பட்ட தோப்புக்கு 'அஞ்சாந் தோப்பு' என்ற பெயர் வழங்கப் பெற்றதாகவும் அது 'ஸ்வாமி துரோகர கண்டன்' கட்டப்ப உடையார் நிலத்துக்குத் தெற்கில் இருந்ததாகவும் கொள்ளலாம்.

---

1. சாசன இலாகாவின் அறிக்கையிலிருந்து அரசன் பெயருடன் திரி புவன சக்கரவர்த்திகள் விருதும், ஆண்டிலே பங்குனி மாதமும் காணப்படுகின் றன வென்று தெரிகிறது. தானம் அளித்தவன் செங்கேணி மிண்டன் சீய ஞன சம்புவராயன் சார்பிலே பள்ளியறை யாளுடைய நாச்சியாருக்குத் தீபம் எரிக்கப் பொன் அளித்ததாகவும் காண்கிறது.

சாசனம் — 1137] [No. 32 on p. 120

அதே கோவிலின் சுற்றுச் சுவரில் உள்ளது. [கர்ப்பகிரகத்தின் மேல் புறச் சுவரில் எழுதியிருப்பது].

(No. 125 of 1930). On the surrounding [west] wall of [the central shrine in] the same temple. Record dated in the first year of the reign of the Chōḷa king **Kulottunga Choladeva** registering the gift by Śendāḷi Tirukkāḷatti-Māṇikkam, [a maid servant of the temple], of 5½ *kaḷañju* of gold in the hands of the *sthānattār* for making certain ornaments to the image of the goddess Paṇaimulai-Nāchchiyār of the temple.

The Epigraphical report gives the date as the 9th regnal year of Tribhuvana chakravartin Kulōttuṅgachōḷadēva and adds that the *sthānattār* agreed also to provide for offerings on the 5th day of the Vaikāśi festival and on all the *amāvāsya* days of the year with the money received by them.

சோழ மன்னனான குலோத்துங்க சோழ தேவனுடைய ஆட்சிக் காலத்து முதல் ஆண்டுச் சாசனம். செந்தாழி திருக்காளத்தி மாணிக்கம் என்னும் தேவரடியாள் கோவில் தானத்தாரிடம் பணைமுலை நாச்சியாருக்குத் திருவாபரணம் செய்வதற்காக ஐந்தரைக் கழஞ்சு பொன் அளித்த செய்தியைக் கூறுவது.

சாசன இலாகாவின் அறிக்கையிலிருந்து சாசனம் திரிபுவன சக்கரவர்த்தி குலோத்துங்க சோழதேவனுடைய ஒன்பதாம் ஆண்டில் கொடுக்கப்பட்டதென்பதும், அவள் அளித்த பொன்னைக்கொண்டு வைகாசி உற்சவத்தின் ஐந்தாம் நாளிலும் ஆண்டு தோறும் அமாவாசை நாட்களிலும் விசேஷ நிவந்தம் நடத்தவும் ஸ்தானத்தார் ஏற்றுக்கொண்டார்கள் என்பதும் விளங்கும்.

சாசனம் — 1138] [No. 33 on p. 120

திருப்பாசூர் உடைய நாயனுர் கோயிலின் வடக்குப் பிராகாரச் சுவரில் [கர்ப்பகிரகத்தின் முன்னுள்ள மண்டபத்தின் வடபுறம்] எழுதியிருப்பது.

(No. 145 of 1930). On the northern surrounding wall [of the maṇḍapa in front of the central shrine] in the same temple. Record dated in the 10th year in the reign of the Chōḷa king **Kulottunga Choladeva** registering the gift of 3 *kāśu* gold by Deva-Ramāṇḍi, [a servant of Munaiyadaraiyan Tiruvaraṅgamuḍaiyan Rājādhiraja-Maḷaiyarajan] for burning a [twilight] lamp in front of the god,

**The Epigraphical report gives the 13th year of the reign of Tribhuvana chakravartin Kulōttuṅgachōḷadēva as the date of the record.**

*சோழ அரசனுன குலோத்துங்க சோழ தேவனுடைய ஆட்சிக் காலத்தின் பத்தாம் ஆண்டில் ராமாண்டி என்பவன் திருப்பாசூர் உடையார் முன்பு விளக்கு [ஸந்தியா தீபம்] எரிக்க 3-காசு பொன் அளித்த செய்தியைக் கூறுகிற சாசனம்.*

*சாசன இலாகாவின் அறிக்கையிலிருந்து சாசனம் திரிபுவன சக்கரவர்த்திகள் குலோத்துங்க சோழதேவனுடைய பதின்மூன்றும் ஆண்டில் அளிக்கப்பட்டதென்றும், தானம் அளித்த ராமாண்டி என்பவன் முனைய தரையன் திருவரங்கமுடையான் ராஜாதிராஜ மலையராயன் வேலையாள் என்றும் தெரிய வருகிறது.*

சாசனம் — 1139] [No. *34* on p. *121*

*அதே கோவிலில் கர்ப்பகிரகத்தின் வடபுறத் (திண்ணை) [திரணை]யில் இருப்பது.*

(No. 113 of 1930). **On the northern pial (which is a mistake for the tier) of the central shrine in the same temple. Record dated in the 30th year in the reign of Rajasekhara Pandyadeva registering the gift by the king of 5 villages in Kākkalūr-nāḍu to the god Tiruppāśūr-uḍaiyār.**

From the Epigraphical report, it is learnt that the record is dated in the 3rd year in the reign of the Chōḷa king Parakēsarivarman *alias* **Adhirajendradeva** beginning with the *meykkīrtti*, 'Tirumaḍandaiyum'. The record which is unfinished states that the king while seated in his palace *Gaṅgaikoṇḍa-śōḷan-māḷigai* at Gaṅgaikoṇḍaśōḷapuram was pleased to remit certain taxes leviable from the village S'elai in Kākkalūr-nāḍu, a sub-division of Ikkāṭṭu-kōṭṭam, a district of Jayaṅkoṇḍasōḷamaṇḍalam, as a *dēvadāna* in favour of the temple of Vēyiḍaṅkoṇḍaruḷina-Mahādēva at Tiruppāśūr. The remission seems to have been made at the request of the officer Araiyan Rājarājan *alias* Pāṇḍyan, for conducting certain services (*dharmam*) instituted by his mother Rājaśēkharan Rāmadēvi in the temple.

*ராஜ சேகர பாண்டியன் ஆட்சிக் காலத்தின் முப்பதாம் ஆண்டுக் கல்வெட்டு. திருப்பாசூர் உடையாருக்குக் காக்கலூர் நாட்டில் ஐந்து கிராமங்களை அரசன் அளித்த செய்தியைக் கூறுவது,*

*சாசன இலாகாவின் அறிக்கையிலிருந்து இது 'திருமடந்தையும்' என்று தொடங்கும் மெய்க் கீர்த்தியுடன் கூடிய சோழ மன்னனான பரகேசரி வர்மனான அதிராஜேந்திரதேவனுடைய மூன்றாம் ஆண்டைச் சேர்ந்த முடிவு பெறாத சாசனம் என்பது தெரிகிறது. கங்கைகொண்ட சோழபுரத்தில் கங்கைகொண்ட சோழன் மாளிகை என்னும் அரண்மனையில் அரசன் தங்கியிருந்த சமயம், ஜயங்கொண்ட சோழமண்டலத்து ஈக்காட்டுக் கோட்டத்துக் காக்கலூர் நாட்டில் உள்ள சேலை என்னும் கிராமத்தின் வரிகள் சிலவற்றை இறக்கித் திருப்பாசூரில் உள்ள வேயிடங்கொண்டருளின மகாதேவர் கோவிலுக்குத் தேவதானமாக அளித்த செய்தியைக் குறிப்பது. அரையன் ராஜராஜனான பாண்டியன் தன் தாயார் ராஜசேகரன் ராமதேவி என்பவள் நிறுவிய சில தர்மங்களை நடத்துவதற்காக வேண்டியதன்மீதே அரசன் அதை அளித்தான் என்றும் கூறுகிறது.*

**சாசனம் — 1140]** [No. 35 on p. *121*

*அந்தக் கோவிலின் கிழக்குப்பக்கத்துச் சுவரில் எழுதியிருப்பது.*

**(No. 152 of 1930). On the eastern surrounding wall of the same temple. Record dated in Śaka 1349, Plavaṅga, in the reign of the Vijayanagara king Vīrapratāpa Deva[raya] Maharaya registering the assignment allowing the duties and the extra emoluments of the merchants to the *sthānattār* and the managers of the temple of god Tiruppāśūr-uḍaiyār by Ariyappa Daṇṇāyaka.**

**From the Epigraphical report, it is learnt that the inscription engraved on the inner wall of the kitchen in the temple, furnishes further particulars of the date, pañchamī, Wednesday and Uttarațțādi. The record, the ends of lines of which are now built in, registers a royal order assigning certain taxes, due to the king, for offerings on ordinary and festival days and for repairs in the temple. Mentions other temples in Chandragiri-rājya, i.e., those at Kañchīpuram, Tiruvālaṅgāḍu, Kāḷahasti, Tiruvoṟṟiyūr and Tiruppālaivanam to which similar orders were issued by the king. Refers also to *Vibhūti-kāṇikkai* and Bhikshā-vritti-Ayyan.**

*விஜய நகர மன்னனான வீரப் பிரதாப தேவ[ராய*]மகாராயர் ஆட்சிக் காலத்தில் சக 1349, பிலவங்க ஆண்டு கொண்ட கல்வெட்டு. அரியப்ப தண்ணாயக்கர் என்பார் திருப்பாசூர் உடையார் கோவில் ஸ்தானத்தாருக்கும் நிர்வாகத்தாருக்கும் அவ்வூர்*

வியாபாரிகள் செலுத்த வேண்டிய மகமைகளையும் வரிகளையும் அளித்த செய்தியைக் கூறுவது.[1]

சாசனம் — 1141] [No. *36* on p. *121*

அதே கோவில் கோபுர வாசல் மேல்புறச் சுவரில் காண்பது.

(No. 157 of 1930). On the western wall of the gōpuram-gate in the same temple. Record stating that Koṇḍappayyar, the agent of *Amaram* Raṅgappayyar raised the rents of the village Perumbākkam and granted the same to the temple.

From the Epigraphical report it is learnt that the record, engraved on the inner wall of the southern gōpura of the temple, bears the date Vikāri, Āḍi[12], and registers the assignment to the *sthānattār* of certain taxes for worship and offerings in the temple of Vāśī-eḻunda-Nayinār.

அமரம் ரங்கப்பய்யர் காரியத்துக்குக் கர்த்தரான கொண்டப்பய்யர் என்பார் பெரும்பாக்கம் கிராமத்தின் வரியை அதிகமாக்கி [அதைக் கோவிலுக்கு அளித்த] செய்தியைக் கூறுவது.

சாசன இலாகாவின் அறிக்கையிலிருந்து இந்தச் சாசனம் அந்தக் கோவிலின் தெற்குக் கோபுரத்தின் உட்புறம் எழுதியிருப்பதாகக் காண்கிறது. விகாரி வருஷம் ஆடிமீ 12வ நாள், வாசி யெழுந்த நயினார் கோவிலின் அமுதுபடி உள்ளிட்ட நித்த நிவந்தங்களுக்காகச் சில வரிகளை நீக்கிக் கோவில் தானத்தாருக்கு அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது.

---

1. சாசன இலாகாவின் அறிக்கையிலிருந்து இந்தச் சாசனம் மடைப்பள்ளியின் உட்புறச் சுவரில் பொறிக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. சாசன வரிகளின் முடிவுகள் புதிதாக எழுப்பப்பட்ட கட்டடத்திற்குள் மறைந்துவிட்டன. சாசன ஆண்டின் பஞ்சமி, புதன் கிழமை, உத்தரட்டாதி நக்ஷத்திரம் ஆகிய விவரங்களும் கிடைக்கின்றன. கோவிலின் அமுதுபடி உள்ளிட்ட நித்த நிவந்தங்களுக்கும் விசேஷ உற்சவங்களுக்கும் வேண்டிய செலவுக்கு அரசன் தனக்குச் சேரவேண்டிய சில வரிகளை நீக்கி அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. இதே போன்ற உத்தரவுகளைச் சந்திரகிரி ராஜ்யத்தில் உள்ள காஞ்சிபுரம், திருவாலங்காடு, காளஹஸ்தி, திருவொற்றியூர், திருப்பாலைவனம் ஆகிய ஊர்களின் தேவஸ்தானங்களுக்கும் அரசன் அளித்த செய்தியையும் கூறுகிறது. விபூதிக் காணிக்கை, பிக்ஷா விருத்தி ஐயன் ஆகிய சொற்களும் காணப்படுகின்றன.

சாசனம் — 1142] [No. 37 on p. 121

அந்தக் கோவிலின் தென்புறச் சுவரில் எழுதியிருப்பது.

On the southern surrounding wall of the same temple. Record registering the grant of a portion of land by the inhabitants of [Rā]janārāyaṇa-chaturvēdimaṅgalam to god Tiruppāśūr-uḍaiyār.

This is probably the same as No. 138 of 1930, engraved on the south wall of the maṇḍapa in front of the central shrine in the same temple, which is damaged and built in at the ends of lines. Dated in the 26th year, Dhanus, ba. ēkādaśi, Saturday, S'ōdi, inthe reign of the Chōḷa king Tribhuvana chakravartin Rajarajadeva it seems to register an auction sale of temple land, originally purchased by the assembly of Rājanārāyaṇa-chaturvēdimaṅgalam, to a certain Neṭṭuḷan Nallanāyan Tiruvaraṇtaḷaittakaiyan of Aṇukkāvūr in Aṇukkāvūr nāḍu. Also mentions Toṇḍaimān Śōḻiyavaraiyan.

திருப்பாசூர் உடையாருக்கு [ரா*]ஜ நாராயண சதுர்வேதி மங்கலம் கிராமத்தின் ஒரு பகுதியை அவ்வூரார் அளித்த செய்தியைக் கூறுவது.

கர்ப்பகிரகத்தின் முன்னுள்ள மண்டபத்தின் தென் சுவரில் எழுதியுள்ள சாசனமே போலும். சிதிலமாகவும் வரிகளின் கோடி புதிதாக எழுப்பப்பெற்ற கட்டிடத்தில் மறைந்தும் உள்ளது. சோழ அரசனான திரிபுவன சக்கரவர்த்திகள் ராஜ ராஜ தேவனுடைய ஆட்சிக் காலத்தில் 26-ஆம் ஆண்டு தனுர் மாதம் ஏகாதசியும் சனிக்கிழமையும் கொண்ட சோதி நாள், முன்னர் ராஜ நாராயண சதுர்வேதிமங்கலத்துச் சபையார் விலை கொண்டிருந்த கோவில் நிலத்தை அணுக்காவூர்நாட்டு அணுக்காவூர் நெட்டுழான் நல்லநாயன் திருவறம் தழைத்த கையன் என்பவனுக்கு விலைகூறி (ஏலம் போட்டு) விற்ற செய்தியைக் குறிக்கிறது. தொண்டைமான் சோழியவரையன் பெயரும் காணப்படுகிறது.

## அவிநாசி Avināśi

கோயம்புத்தூர் ஜில்லா அவிநாசி தாலுகாவில் உள்ளது. இவ்வூரிலிருந்து கிடைத்த 14 சாசனங்கள் முதல் பாகத்தில் 191-204 நெ. ஆக வெளியிடப்பட்டுள்ளன.

This is the head-quarter station of the Avināśi taluk in the Coimbatore district. 14 inscriptions (Nos. 191-204) secured from this place have been given in Vol. I above.

சாசனம் —1143] [No. 1 on p. 4

அவிநாசி ஆளுடையார் கோவிலில் பெருங்கருணை நாயகி என்று வழங்கப்பெறும் அம்மன் கோவிலின் தென்புறம் உள்ள மகா மண்டபத்தின் பின்புறச் சுவரில் எழுதியிருப்பது.

சாசனங்களின் பட்டியலில் இது காணப்படினும், இது பிரதி செய்யப்பட்டுள்ள ஏடு கிடைக்கவில்லை.

(No. 186 of 1909). On the backside [south wall] of the maha-maṇḍapa on the south of the [Brihat Karuṇāmbika] Amman shrine in the temple of Avinaśi-aḷuḍaiyār. Record, the date of which is not found, in the reign of king **Konerinmaikondan** registering the tax-free gift by the king of the village Vīraśōḷa-nallūr for worship and food offerings to god Avinaśi-Aḷuḍaiyār and goddess Nachchiyār [Peruṅkaruṇai-ch-chelviyār.] Even though this finds a place in the **List of Inscriptions**, its copy is not traceable.

From the Epigraphical report, it is learnt that the record is dated in the 2nd year in the reign of the Koṅgu king Rājakēsari Kōnērin-mai koṇḍān. The gift village was Vanavaśi *alias* Vīraśōḷanallūr in Kīṭpa-nāḍu and the gift was made on the occasion of the king's coronation (*abhishēkā*).

அவிநாசியாளுடையாருக்கும் நாச்சியா[ரான பெருங் கருணைச் செல்வியா]ருக்கும் அமுதுபடி உள்ளிட்ட நித்த நிவந்தங்களுக்காக வீர சோழ நல்லூர் என்னும் கிராமத்தை இறையிலியாகக் கோநேரின்மை கொண்டான் அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது.[1]

## கடம்பர்கோவில் Kaḍambarkōvil

இவ்வூர் செங்கற்பட்டு ஜில்லா காஞ்சீபுரம் தாலூகாவில் உள்ளது.

This village is in the Kāñchīpuram taluk of the Chingleput district.

---

1. சாசன இலாகாவின் அறிக்கையிலிருந்து பின்வரும் விவரங்களும் தெரிகின்றன. கொங்கு நாட்டு மன்னனான இராஜகேசரி கோநேரின்மைகொண்டானுடைய இரண்டாம் ஆண்டுச் சாசனம். கீட்பா நாட்டு அநவாசியான வீர சோழ நல்லூரை அரசன் தன்னுடைய அபிஷேக காலத்தில், அதாவது முடிசூட்டு விழாவின்போது, அளித்த செய்தியைக் குறிப்பது.

சாசனம் — 1144] [D. 2806

[ஊரில் உள்ள கடம்பநாத சுவாமி கோவிலின் கர்ப்பகிரகத்து மேற்குச் சுவரில் பொறிக்கப்பட்டிருப்பது.]

(No. 155 of 1923). [On the west wall of the central shrine in the Kaḍambanathasvamin temple]. Record dated in Śaka 1242, Vikrama, Tai, Su. tritīyā, Saturday, Uttaraṭṭāḍi in the reign of the Vijayanagara king **Krishnadeva Maharayar** registering the gift, probably by a certain Ponnambala Dīkshitar of Uttaramērūr of two villages Kāṅgai Nelvāyi......and Nambachcheri on the southern bank of the river Cheyyāṟu in the Uttaramērūr-p-paṟṟu, a sub-division of Kāliyūr-k-kōṭṭam, a division of Jayaṅkoṇḍaśōḷa-maṇḍalam for the worship (*mahāpūjā*) of the god Kaḍambantuṟai-Nāyanār.

The Śaka year should be 1442 and the month Kumbha. This would yield A.D. 1521, February 9 as the date of record.

ஸ்வஸ்தி ஸ்ரீ [॥*] ஸகலு மஹா மண்டலேஸ்வர ஸ்ரீ க்ருஷ்ண தேவ மஹா ராயர் ப்ருதிவிராஜ்யம் பண்ணி வருகு[ற*] நிர்ண்ணயம்............... சகாப்தம் 1242[1]-க்கு மெல் செல்லா நின்ற விக்ரம வருஷத்திர்க்கு தை[2] மாஸம் ஸுக்லபக்ஷத்து த்ருதியை திதியில் சனிவாரமும் பெத்த உத்திறட்டாதி நாள் செயங் கொண்ட சொழ மண்டலத்து காலியூர் கொட்டத்து உத்திறமெரூர் பத்து செய்யாத்து தென்கரை காங்கை நெல்வாயி...பெருடைய க்ராமம் ஒண்ணு நம்பச்செரி கிறுமம் ஒண்ணு உத்திறமெரூரில் பொன்னம்பற தீக்ஷிதர் ....ம்பந்துறை நாயநார்க்கு மஹாபூஜைக்கு தானபூர்வமாகக் குடுத்தொம். இது சந்திருதித்தர் வரைக்கும் னடக்கத் தக்கதாகவும். இந்த கிறுமத்திர்க்கு [அ*]கிதம் நினைத்தவர்கள் கெங்கைக் கரையில் காறாம் பசுவைக் கொன்ற தொஷத்திலெ பொகக் கடவும். இவை பொன்னம்பற...த்தய்யா பிள்ளை கையெழுத்து. இப்படி அருவென்......உத்திறமெரூர் உறத்தூர்...தீக்ஷிதர் புத்திறன் இப்படி அருவென் உத்திறமெரூர் மணி முத்தபட்டன் [॥*]

---

1. சக வருஷம் 1442 ஆகும்.
2. சாசன இலாகாவினர் இதைக் 'கும்ப ஞாயிற்று' என்று வாசித்திருக்கிறார்கள்.

## படூர் | Paḍūr

இந்தப் பெயரைக் கொண்ட ஊர்கள் தமிழ் நாட்டில் பல உள்ளன. அவற்றுள் இது எந்த ஊராகும் என்பதை நிச்சயிக்க முடியவில்லை. மக்கென்ஸியின் சாசனப் பட்டியலில் இது ஊற்றத்தூர்ப் பகுதியில் இருப்பதாகக் கொடுக்கப்பட்டுள்ளது. ஆயினும் இதற்கு முன்னுள்ள சாசனம் காஞ்சீபுரம் தாலூகா கடம்பர்கோவிலிலிருந்து கிடைத்தது; பின்னால் உள்ளது கோயம்புத்தூர் ஜில்லா தாராபுரம் தாலூகா கொடுவாய் என்னும் கிராமத்திலிருந்து கிடைப்பதாகும். ஆகவே அதைக் கொண்டு நிச்சயிக்க முடியாது. சாசனத்திலே பெரும் படூர் என்ற பெயர் காணப்படுகிறது. சுவாமியின் பெயர் மிகவும் பிழையாகப் பிரதிசெய்யப்பட்டிருக்கிறது.

There are many villages with the name of Paḍūr and it is not possible to identify this village for want of further details. In the *List of Inscriptions from the Southern Districts* where this is mentioned as No. 23 on page 199 under the heading of Uṭṭattūr (Tiruchirappaḷḷi district), the previous number gives the inscription copied from Kaḍambarkōvil in the Kāñchīpuram taluk (probably mistaking it for the village of the same name in the Tiruchirappalli district) and the succeeding one refers to an inscription copied from Koḍuvāy in the Dhārāpuram taluk of the Coimbatore district.

### சாசனம் — 1145] [D. 2807

படூர் பெரிய மதகில் நட்டிருந்த சிலாசாசனத்துக்கு நகல்.

On a stone planted on the big sluice in the village. The record dated in the reign of **Vikrama Pandyadeva** has been copied very corruptly. The date cannot be made out. The name of village Perum-paḍūr occurs, while the name of the god has been distorted beyond recognition. Seems to register the tax-free gift (*mānya*) of some land as *tirunāmattukkāṇi* fixing the revenue at 5 *kalams* of paddy.

ஸ்வஸ்தி ஸ்ரீ [||*] விக்கிறம பாண்டிய தேவர்க்கு ஆண்டு ஸ்ரீ சகுலியான பறம...சிவற சமபங்கி யொத காணியாகக் கொண்டு ...வறக்கு அதுமென் அவருடைய நிலத்தெகிற மெழும் பெருஞ் செவை யென்று பெரும்படூர் நாயநார் சிரிது காலம் மணீசுவற முடயாருக்கு[1] திருப்பணி செய்வதாக திருநாமத்துக்காணி(க்க)யாகக் கொடுத்த மான்னியம் நாங்கள் உடயார் செர்ந்து விளாதத ஆனி......யிம்மனே யாதவ யாண்டு உடயாற் யெகத்தாமூல

1. சுவாமியின் பெயர் விளங்கவில்லை.

நடென்றுள்ளத்தில் அங்கல நெல்லு...... நம்முயீதரும் இவ்வூரி லிருப்பான் தரு ஆண்டிக் கனகாணி ஆக கொமில்லெயெகொ திரு தல் செவயாக கடவொமாகவும். யெங்களுக்கு தா்ம்ம தானம் வந்து வெட்டி வைத்தொமாகில் நாங்களும் மெல்படித்தவா்க ளும் மாா்க்கத்து துரொகி வைத்துரொத நாட்டு தெவநாகக்கவற்[1] மெல்படி சம்மதிச்சு கல்லிலெ வெட்டி வைத்திருக்குற ஸ்தாப னம் பண்ணிநொம். கெகொல முப்பத்து வடித்தில்த் ஆறம்பம் பண்ணிநெனும் [||*]

நடுவச்சேரி Naḍuvachchēri

இவ்வூர் இப்போது கோயம்புத்தூர் ஜில்லாவில் அவிநாசி 'தாலூகாவில் உள்ளது. இவ்வூரிலிருந்து பிரதி செய்யப்பெற்றுள்ள 3 சாசனங்கள் (234-236 ரெ.) முதல் பாகத்தில் வெளியிடப்பெற்றுள்ளன.

The village is now included in the Avināśi taluk of the Coimbatore district. Three inscriptions (Nos. 254-236) copied from this place are published above in Vol. I.

சாசனம் — 1146] [No. 22 on p. 11

கோடேச்வர சுவாமி கோவிலில் கோதைப் பிராட்டி ஈசுவர சுவாமி ஆலயத்தின் மண்டபத்துத் தென்சுவரில் எழுதியிருப்பது, இந்தச் சாசனம் பிரதி செய்யப்பெற்றுள்ள ஏடு கிடைக்கவில்லை. தென் ஜில்லாக்களில் பிரதி செய்த சாசனங்களின் பட்டியலில் காணும் விவரங்களைக் கொண்டு இவ்விடம் இது கொடுக்கப்பட்டுள்ளது.

(No. 442 of 1920). [On the south wall of the prākāra in the Kōdēśvara temple.] Record dated in the reign of **Kulottungachola deva** mentioning the inhabitants of Mūnṟupūṇḍi village and Kōdaipiraṭṭīśvaram uḍaiyar. The other particulars are not available. The record is said to be damaged on the stone.

The text of this record is not available. The particulars gleaned from the '*List*' are the main source. From the Epigraphical Report it is learnt that the record is dated in the 13th year in the

1. 'இந்த தா்மத்துக்கு அகிதம் நினைத்தவா்கள் மாா்க்கத் துரோகி, இனத் துரோகி, நாட்டுத் துரோகிகளாகக் கடவாா்கள்' என்பது போன்ற ஒரு வாக்கியமாக அமைந்திருக்க வேண்டும்.

**reign of the Koṅgu king Rajakēsarivarman *alias* Tribhuvana chakravartin Kulottunga Choladeva registering the gift by the eight communities of Mūnṟupūṇḍi village to the temple of Kōḍaipirāṭṭīśvaram-uḍaiyār at Vaḍakkēpaḷḷi in Vaḍa-pariśara-nāḍu of the *i[ṣai]kkiḍāy* and *paṇ-kuṟuṇi* (taxes in sheep and corn?) accruing from their villages,**

குலோத்துங்க சோழ தேவனுடைய ஆட்சிக் காலத்தில் கொடுக்கப்பட்ட சாசனம். கோதைப் பிராட்டீசுவரம் உடையாரையும் மூன்றுபூண்டி கிராமத்தையும் குறிக்கிறது. மற்ற விவரங்கள் கிடைக்கவில்லை. சாசனம் சிதிலமாக இருப்பதாகக் குறிக்கப் பெற்றுள்ளது.

*சாசன இலாகாவின் அறிக்கையிலிருந்து கொங்கு மன்னன் ராசகேசரி வர்மனான திரிபுவன சக்கரவர்த்திகள் குலோத்துங்க சோழ தேவனுடைய 13-ஆம் ஆண்டில் மூன்றுபூண்டிக் கிராமத்தின் எட்டுச் சாதியாரும் கூடி வட பரிசார நாட்டு வடக்கே பள்ளியின் கோதைப் பிராட்டீசுவரம் உடையாருக்கு இ[சை]க் கிடாயும் பண் குறுணியும் அளித்த செய்தியைக் குறிப்பதாகத் தெரிகிறது.*

## சிதம்பரம் Chidambaram

*இவ்விடத்திலிருந்து பிரதி செய்யப்பெற்ற சாசனங்கள் முதல் பாகத்தில் 10-25 நெ. ஆக வெளியிடப்பட்டுள்ளன.*

The inscriptions copied by the assistants of Col. Mackenzie from this place have been published as Nos. 10-25 in Vol. I.

*பின் வருபவை சாசனப் பட்டியலில் ஒரே சாசனமாகக் குறிக்கப்பட்டிருந்தாலும், பிரதியிலே தனித் தனிச் சாசனங்களாகக் கொடுக்கப்பட்டுள்ளன.*

The following three items though copied separately are given under one entry in the *List of Inscriptions from the Southern Districts* of Col. Mackenzie.

சாசனம் — 1147] [D. 3353-16

*சிதம்பரம் நடராஜர் கோவிலின் மூன்றும் மதிலில் எழுதியிருப்பது. [இரண்டாம் பிராகாரத்துத் தென்புறத்துச் சுவரில் காண்பதாகச் சாசன இலாகாவின் வெளியீட்டிலிருந்து தெரிகிறது.]*

(No. 180 of 1892). On the third wall [south wall of the second prakāra] in the Naṭarāja temple. Sanskrit verse mentioning the

performance of the *tulābhāra* ceremony [by the Paṇḍya king **Sundara Pandyadeva**] and the utilisation of the gold in gilding the *vimāna* of the temple. The king is given the epithet *bhūpatiravi* i.e., *Rāja-sūrya* of the other inscriptions.

This has been published as No. 628 in the **South Indian Inscriptions** (*Texts*), Vol. IV.

ஸ்வஸ்திஶ்ரீ [||*]

த்வாமெத்ய பூபதிரவெ[ர்]வ்விநதா [ஃ*][1]ப்ரகாம-
முச்சை[ஃ*] பதம் நியதமாப்ஸ்யதி[2] சாஶ்ரயொ[ந்]தா |

ஹாராசநேத்ராயசயொ[ந்]நா[3] ஹவத்தூர்த்வாயாம்
பம்ஹொஸ்மாந[4]சயிரொஹதி ஹெமசராசிஃ ||[5] உ-

த்தௌஸ்வஸ்த்ய—

இது தென்னிந்திய சாசனங்கள், IV வால்யூம், 628 நெ. ஆக வெளியிடப்பட்டுள்ளது.

சாசனம் — **1148**] [D. 3353-14

*அதே மதிலில் நிருதி திக்கில் இருப்பது. மக்கென்ஸியின் பிரதியிலே ஒரே சாசனமாகப் பிரதி செய்யப்பட்டிருப்பினும் சாசன இலாகாவினர் இரு தனிக் கல்வெட்டுகளாகக் காட்டியிருக்கிறார்கள்.*

---

1. ‘ ஊபதிரவெ விநதாஃ ’ என்று வாசிக்க.

2. ‘ வதம் நியதமஹ்நாத ’ என வாசிக்க.

3. ‘ ஹாராநெ்தாயஷய்நா ’ என்று வாசிக்க.

4. ‘ பம்ஹொவிச்சாந ’ என இருத்தல் வேண்டும்.

5. இந்தச் சுலோகத்தின் பொருள் பின்வருமாறு :

‘ அரசர்களிடையே சூரியன் போல் விளங்குபவனே ! உன்னை அடைந்து மிகவும் தாழ்ந்து வணங்குபவர்கள் உயர்ந்த பதவியை அடைவது நிச்சயம். இப்போது நீ துலாபாரம் ஏறியபொழுது [பாரத்தால்] தாழ்ந்த [தட்டிலிருந்த] பொன் குவியல் சிவபெருமான் விமானத்தின் மீது ஏறிக்கொண்டுவிட்டதே; [அதேபோலத்தான்.]

[அ]

(No. 178 of 1892). On the same wall (southwest corner). Sanskrit verse stating that even though one has a thousand elephants like the crown-elephant *Śatruñjaya,* one crore of horses and able soldiers, a fort cannot be captured unless the endeavour has the support of **Sundara Pandyadeva's** heart, i.e., unless Sundara Pāṇḍyadēva has set his heart on it.

This has been published as No. 626 in the **South Indian Inscriptions** (Texts), Vol. IV.

ஸ்வஸ்திஶ்ரீ [||*]

ஶத்ருஞ்ஜயஸமா கரிஸஹஸ்ரா
நஸ்வாஸாட்யாஸ்வ ப்ரஸவவாஜிகொடய: |
தயாபி தெ ஸுந்தரபாண்ட்யதேவ:
துர்க்கம் ப்ரவிஶெதெ ஹ்ருதயம் ஸஹாய: ||[1]

இது தென்னிந்திய சாசனங்கள், IV வால்யூம், 626 நெ. ஆக வெளியாகியுள்ளது.

[ஆ]

(No. 181 of 1892). On the same wall. Sanskrit inscription in the Grantha script containing two verses. One verse hails the prosperity of the arm of the emperor **Sundara Pandya** which

---

1. இந்தச் சுலோகத்தின் சரியான வடிவம் பின்வருமாறு அமையும்.

ஶத்ருஞ்ஜயஸமா: கரிஸஹஸ்ரா
ணஸ்வாஸாட்யாஸ்வ ப்ரஸவவாஜிகொடய: |
தயாபி தெ ஸுந்தரபாண்ட்யதேவ
துர்க்கம் ப்ரவிஶெதெ ஹ்ருதயம் ஸஹாய: ||

இதன் தமிழ் மொழிபெயர்ப்பு:

சத்ருஞ்சயம் என்னும் பட்டத்து யானையைப் போன்ற ஆயிரம் யானைகள், கோடிக் கணக்கான குதிரைகள், அஞ்சா நெஞ்சம் படைத்த போர்வீரர்கள் கொண்ட பெரும் படையோடு தாக்கினாலும் வெற்றி கிட்டிக் கோட்டையைப் பிடித்துவிட முடியுமோ, சுந்தர பாண்டியனுடைய இதயம் என்னும் உதவி கிடைக்காவிட்டால், (அதாவது அவன் மனது வைக்காவிட்டால்)?

brings calamity to the chief ornament (i.e., *tāli* or *mangala sūtra*) round the neck of the wives of his enemies.

The other verse states that king Rājasūrya gave the entire gold and pearls obtained by weighing himself against them to Lord Sabhapati of the *dabhra sabhā*.

This has been published as No. 629 in the **South Indian Inscriptions** (Texts), Vol. IV.

ஸ்வஸ்தி ஸுந்தரபாண்ட்யஸ்ய
பாஹவே சக்ரவர்த்திந: |
பரராஜவதூகண்ட
ப்ரதாநாபர[ண*]த்ரோஹிணே ||[1]

ராஜஸூர்ய[ஸ்*] ஸ்வாத்மாநம்
துலா[:*] கநகமௌக்திகை: |
துலாகாரஸ்த்த[:*][2] ஸர்வம்
ததௌ தஹ்ரஸபாபதே: ||[3]

இது தென்னிந்திய சாசனங்கள், IV வால்யூம், 629 நெ. ஆக வெளியாகியுள்ளது.

---

1. இதன் மொழி பெயர்ப்பு வருமாறு:

எதிரி மன்னர்களின் மனைவிகளுடைய கழுத்தில் விளங்கும் முக்கிய அணி[யான தாலி]க்குத் துரோகம் செய்யக்கூடியதான சக்கரவர்த்தி சுந்தர பாண்டியனுடைய கைக்கு மங்களம் உண்டாகட்டும்.

2. சாசன இலாகாவினர் இந்தப் பகுதியை 'ஸுவர்ணகார ஸ்தா ஸ்ரமாத' என்று வாசித்திருக்கிறார்கள்.

3. இதன் தமிழ் மொழிபெயர்ப்பு வருமாறு :

ராஜ சூரியனான சுந்தரபாண்டியன் பொன்னும் முத்தும் கொண்ட துலையில் ஏறி, இறங்கியதும் அந்தத் துலையில் இருந்தவை எல்லாவற்றையும் சிற்றம்பலத்தில் ஆடும் சபாபதிக்கு அளித்து விட்டான்.

சாசன இலாகாவின் பாடப்படி இது தமிழில் கீழ் வருமாறு அமையும்:

சிற்றம்பலத்தில் ஆடும் சபாபதியின் முன்பாக ராஜ சூரியனான சுந்தர பாண்டியன் பொன்னும் முத்தும் கொண்ட துலையில் ஏறிச் சபையை அலங்கரித்தான்.

சாசனம் — 1149] [D. 3353-15

*அதே மதிலில் பொறிக்கப்பட்டிருப்பது.*

(No. 182 of 1892). On the same wall. Sanskrit inscription written in Grantha characters containing two verses. One of the verses says that king **Sundara Pandya** who captured Ceylon (*Laṅkā-rājyam*), destroyed the Kaṭhaka (i.e., the Pallava) king, killed the ruler of Kāñchi, and driven out Gaṇapati whose army fled in disorder from the battle-field, gave the gold of several *tulābhāras* to god Sabhāpati of the Chiṟṟambalam (*dabhra sabhā*) for remodelling the hall extensively. The other verse says that the wives of *chandra* (the moon) have come with lakhs of pearls for the *tulābhāra* praying, 'O King, be pleased to remove the blot to [the name of] our husbands with your fame.'

The Paṇḍyan king Sundara Pāṇḍya referred to in these inscriptions is Jaṭavarman **Sundara Pandya** I who counts his date of accession from A.D. 1251. The Kaṭhaka chief referred to as having been conquered by him was the Pallava Kō-Peruñjinga of S'ēndamaṅgalam, while the Lord of Kāñchi was the Telugu Chōḍa chief of Nellore having sway over Kāñchi. Gaṇapati was the Kākatīya king and Chandra would refer to Sōmēśvara, the Hoysaḷa king of Dvārasamudra.

This has been published as No. 630 in the **South Indian Inscriptions (Texts)**, Vol. IV.

ஸ்வஸ்திஸ்ரீ [||*]

லங்காராஜ்யஹராரி காடகந்ருப
  ப்ரத்வம்ஸ காஞ்சீபதிঃ[1]
க்ருத்வாதீ[2] க்ஷத்ரஸைநிகோ கணபதி
  வ்யத்ரா[வி][3] யேநாஹவே ।
ஸ்வர்ணைஸ்தோ துலாபாரைஸ் ஸபாபதிஸ் தஸ்ய
  வாஸ்தேஹ்ய ப்ரஸ்ருதம்[4]
தப்ராக்ய ஸதாபரேஷாம்
  ஸ்தார விஸ்தாரிணீம் ||

1. 'ப்ரத்வம்ஸி காஞ்சீபதிঃ' என்று வாசிக்க.
2. 'வத்ராவாதி' என வாசிக்க.
3. 'கணபதிர்வ்யத்ராவி' என்று வாசிக்க.
4. 'ஸப்தஸ்தாரா' என வாசிக்க.

வதூ : கஹைம் யயவா ஹரெதீ
யாஜூராஜூவா அர[1]ஊவொாஊஹிஷூ: |
வ்ராயஸ்தூஞாமொள கீகுமக்ஷஹாஜ(ா)[:]
ஞாம்[2]ாாஜவாமயூ-லெர்ணதாஹவஞி||[3].

இது தென்னிந்திய சாசனங்கள் VIII வால்யூம், 630 செ. ஆக வெளியிடப்பட்டுள்ளது.

## புல்லாவி — Pullāvi

இவ்வூர் தென் ஆர்க்காடு ஜில்லா சிதம்பரம் தாலுகாவில் இருக்கிறது.

**In the Chidambaram taluk of the South Arcot district.**

சாசனம் — 1150] [D. 3509

கிருஷ்ணகிரி சந்நியாசியார் மடத்துக்குச் சொந்தமான ஒரு கல்லில் பொறிக்கப்பட்டிருப்பது.

**On a stone belonging to Krishṇagiri Sanyāsi maṭha in the village.**

**Record dated in S'aka 1556, Chitrabhānu, Tai 1, registering the gift of 500 *kuḷi* of land in Nallippāḷaiyam by Pālakkaḷa-Nāyaka to the maṭha of Krishṇagiri Sanyāsi, a *Paramahamsa*, on the holy occasion of *saṅkrānti* in the presence (*sannidhi*) of god Daivanāyakasvāmi (Perumāḷ) at Tiruvahīndrapuram for the merit of Akkaḷa-Nāyaka *gōtra*.**

ஸ்வஸ்தி ஸ்ரீ [*||] சகாப்தம் கருளாருமசு இதன் மெல் செல்லா னின்ற சித்திறபானு வரு தை மீ முதல் உ ஸங்கறாந்தி புண்

---

1. 'யாஜெஜூதூவாபூஹு' என்று வாசிக்க.
2. 'ஸ்வாரம்' என இருத்தல் வேண்டும்.
3. இந்தச் சுலோகங்களின் மொழிபெயர்ப்பு வருமாறு :

லங்கா ராஜ்யத்தைக் கைப்பற்றி, காடக அரசனை அழித்து, காஞ்சீபதியான மன்னனைக் கொன்று, போரில் சீர்குலைந்த சேனையுடன் கணபதியை விரட்டியடித்த சுந்தரபாண்டியனான இம் மன்னன் அநேக துலாபாரங்கள் ஏறிய பொன்னைச் சிற்றம்பலத்தில் ஆடும் சபாபதியின் அம்பலத்தை விஸ்தாரமாக நிர்மாணிக்க அளித்தான்.

'அரசே, எங்கள் புருஷனுக்கு உள்ள களங்கத்தை உன்னுடைய கீர்த்தியினால் போக்கடிக்க வேண்டும்' என்று யாசிக்கும் பொருட்டு வரும் சர

ணிய காலத்தில் திருவயிந்திறபுறம் தெவனாயக சுவாமி சன்னதியில் பறம ஹம்ஸாச இருஷ்ணகிரி சென்னியாசி[யா*]ர் மடம் தர்ம்மத்துக்கு அக்கள னாயகர் கொத்திறத்துக்கு புண்ணியமாக நெல்லி பாளயத்தில் பாலக்கள னாயக்கர் விட்ட மானியம் குழி றாள. யிந்த தர்மத்திர்க்கு அதர்ம்மம் பண்[ணி*]னால் கெங்கைக் கரையில் காரும் பசுவைக் கொன்ன தொஷம் [॥*]

## ஈரோடு (Irōḍu) Erode

*கோயம்புத்தூர் ஜில்லாவில் உள்ள இவ்வூரிலிருந்து கிடைத்த சாசனங்கள் முதல் பாகத்தில் 239-248 நெ. ஆக வெளியிடப்பட்டுள்ளன.*

Inscriptions copied from this place in the Coimbatore district have been published as Nos. 239-248 in Vol. I.

### சாசனம் — 1151] [D. 8302-iv-142

*'ஈரோடு ஜில்லா, ஈரோடு கிராமத்தில் விநாயகர் மண்டபத்தின் தென் புறச் சுவரில் எழுதியிருப்பது' என்று மக்கென்ஸியின் சாசனப் பட்டியலில் குறிக்கப்பட்டுள்ளது.*

On the southern wall of the maṇḍapa in the Vināyaka temple at Irōḍu as described in the *List*.

Record dated in the 12th year in the reign of the Koṅgu king **Konerinmaikondan** registering the tax-free gift as a *dēvadāna* of the village Koḍidi in Vikramaśōḷa-vaḷanāḍu to god Kōdaippiraṭṭi-Īśvaram-uḍaiyar, in return for a lump sum paid by the temple authorities towards the taxes due to the king.

A similar record copied from Naḍuvachchēri has been published as No. 235 in Vol. I. The present record is given as No. 20 on page 93 in Mackenzie's *List* while the Naḍuvachchēri record is given as No. 10 on page 20 of the same *List*.

---

*திரனுடைய மனைவியர், துலாபாரம் நடத்துவதற்காக லக்ஷக் கணக்கான முத்துக்களைக் கொணர்ந்து இப்போது ராஜ சூர்யனான உன்னை வணங்குகின்றனர்.*

*இவ்விடம் சந்திரன் என்று குறிக்கப்பட்டிருப்பது ஹொய்சள மன்னனான சோமேச்வரனே யாகும். காடக மன்னன் சேந்தமங்கலத்திலிருந்து அரசு புரிந்த கோப்பெருஞ்சிங்கன் ஆவன். காஞ்சீபதி என்பான் நெல்லூரிலிருந்து ஆண்டுவந்த தெலுங்குச் சோழ மன்னன் ஆவன். கணபதி காகதீய மன்னன் என்பது வெளிப்படை.*

ஸ்வஸ்தி[॥*] ஸ்ரீ கோனேரி[ன்மை*]மக்கோன்டான் வடபரிசார நாட்டு வடக்கு ப(ழய)[ள்ளி] கொதைபருட்டி இசுவரமுடையா றுக்கு விக்கிரம சொழ வளநாட்டு கொடுதி னமிதனும் யிறுக்க கடவ[ர]யினாயும்[1] எலவை ஓகவை மன்றுபாடு தெண்டம் குத்த மும் யிரை புரவு சிற்றயம் மற்றும் யெப்பெற்(ப்)பட்டதும் நமக்கு யிறுக்கும்படி இறுப்பாருக. இவ்வூறி[ன்*] பெரு நாங் கெல்லைக்கி உள்ப்பட நிலமும்.........நன் புலமும் பொன் புல மும்[2] (க) கொதைப் பருட்டி இஸ்வறமுடையார் தெவர்கன்[மி] கள் நமசாகக்கு பொன் வச்சமையால் கொடிதி தெவதானமாக குடுத்தொம். சந்திருதித்தர்வரை செல்வதாக குடுத்தொம். நமக்கு யாண்டு பனிரெண்டாவது முதல் சிலையிலும் [செம்பி லும்*] வெட்டிக் கொள்வாராகவும். நம்மொலை குடுத்தொம்[॥*][3]

சாசனம் — 1152] [D. 3302-iv-143

On a stone in the gate (entrance) of the temple of Perumāḷ (Vishṇu) at Īrōḍu in the Īrōḍu district [i.e., taluk of the Coimbatore district as described in the *List.*]

*கோயம்புத்தூர் ஜில்லாவில் 'ஈரோடு ஜில்லா, ஈரோடு கிராமத்தில் உள்ள பெருமாள் கோவில் வாசற்படியில் ஒரு கல்லில் காண்பது' என்று மக்கென்ஸியின் சாசனப் பட்டியலில் குறிக்கப்பட்டுள்ளது.*

A record registering the *sarvamānya* gift of land within the boundary stones on the four-sides inclusive of the tank, fields and other lands to the god Kōdai-p-piraṭṭi-uḍaiyar and goddess Kōmaḷa-valliyār.

A similar record found at Naḍuvachchēri in the Avināśi taluk of the same district has been published as No. 234 in Vol. I. The present inscription is given as No. 19 on page 92 of Mackenzie's *List* while the Naḍuvachchēri inscription is given as No. 21 on page 11 of the same *List.*

---

1. 'ஊரவர் நமக்கு இறுக்கக்கடவ வரிகள்' என்பது போல் இருத்தல் வேண்டும்.

2. 'புன்பலமும்' என்று வாசிக்க.

3. அவிநாசி தாலூகா நடுவச்சேரியிலிருந்து கிடைத்த இதே போன்ற சாசனம் ஒன்று முதல் பாகத்தில் 235 ெந. ஆகக் கொடுக்கப்பட்டுள்ளது.

கொ[ழ*]தப் பிராட்டி உடையாறுக்கும் கொமளவல்லியா றுக்கும் யிந்த குளம் வயல் நிலம் முள்பட ஙல்பாங்கும் கல் படிக்கி சற்வு மானியம். இந்த தற்மம் வில[க்*]கின பெற் கெங் கைக் கரையில் காரும் பசுவை கொண்ட தொஷத்துலெயும் பிரு மணரை கொன்ற தொஷத்திலும் பொகக் கடவராகவும். இப் படி பெரிய குப்பாண்டான் சின்ன குப்பாண்டன் யெழுத்து [॥*][1]

## அறவக்குறிச்சி Aṛavakkuṛichchi

*இவ்வூர் இப்போது திருச்சிராப்பள்ளி ஜில்லா கரூர்த் தாலூகாவில் சேர்ந் திருக்கிறது. மக்கென்ஸியின் காலத்தில் 'தாராபுரம் துக்கடி அறவக்குறிச்சித் தாலூகா'வில் சேர்ந்திருந்ததாகக் காண்கிறது.*

The village is now included in the Karūr taluk of the Tiruchirappaḷḷi district.

### சாசனம் — 1153] [D. 2803-உ

*அறவக்குறிச்சியில் நாகேசுவர சுவாமி கோவில் சிலாசாசனம்.*

On a stone in the Nāgēśvarasvāmin temple at Aṛavakkuṛichchi. Record dated in the 13th year of the reign of [the Kongu king] Tribhuvana chakravartin **Konerinmaikondan** registering the sale of land measuring in extent *aṟu kala nelvidai* (i.e.. land sufficient for sowing six *kalam* of paddy) in Muḍikoṇḍaśōḷapuram, the other name of which is not clear having been copied corruptly, in Veṅgāla nāḍu, a division of Vīraśōḷamaṇḍalam, to the authorities of the temple of god Tiruveñjamāṅkūḍal-Nāyanār [of the village of Tiruveñjamakkūḍal] by the king in return for money 120(?) *Śrīyakki palañśalāgai achchu* deposited [probably by the inhabitants of Vikramaśōḷa chaturvēḍimangalam], exempting the land from several taxes. The title 'Rājakēsari' is written at the opening of the record.

A similar record, No. 144 of 1905, is found in the Vikritiśvara temple at Veñjamāṅkūḍalūr and this has been published as No. 729 in Vol. II above.

*ருசகேசரி [॥*] ஸ்வஸ்தி ஸ்ரீ[॥*]திரிபுவன சக்கிறவர்த்தி* கோனேரி மேர்க்கோண்டான் *திருவெஞ்ச[ம*]ாகூடல் நாயகநார்*

---

1. இதே போன்ற சாசனம் ஒன்று அவிநாசித் தாலூகா நடுவச்சேரியி லிருந்து பிரதி செய்யப்பெற்றுள்ளது. அது முதல் பாகத்தில் 234 நெ. சாச னமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

கொவில் தெவர்களுக்கு(ம்)[1] நம்மொலை குடுத்த பரிசாவது:யென் ............ஞயகநாருக்கும் ஸ்ரீ பண்டாறத்தில் அச்சிட்டு விக்கிற மசொளீசுறம் பெதிகாவலனும்[2] ஊற[ர*]ண்மை காணி ஒட்டிக் கொண்டு அவ்வூறவர்கள் வைச்சு ஸ்ரீ பண்டறத்தில் ஒ(ட்)டிக் கினம்பியில் யிவ்வச்சுக்கு நெலங் கொள்ள வெணு மென்று யித் திருக்கொவில் தெவர்க(ள்)ந்ம்மிகள் நம்[மை*]ம வந்து விங்வித மயில் இப்பொவி ஸ்ரீஅக்கி [ப*][ழ]ஞ் சலாகை அச்சு னூர்றரிந்தும்[3] நமசறக்கு நங்கன்மிகள் கைக்கொண்டு இவ்வச் சுக்கு விட்ட நிலமாவது: வீறசொழ மண்டலத்தில் வெங்கல நாட்டுக் குளம் தானம் தரிச்சையான முடி(ங்)கொண்ட சொள புறத்து னமக்கு திறப்பான நஞ்சை பத்தாடி யவர்க்கு சுறத்த பெதச்சை வெலி நிலத்தில் ஆண காளி கொயிலுக்கு ஆணைப் பாடி நெல்வரை ருசினிலும் விதை முக்கலம் யிம்முக்கலத்தில் யெல்லையாவது............கிளக்கு யெல்லைக்குப் பத்து ஆணை கோயில்க் காவுக்கு தெர்க்கு ஒளுத்தரை காட்டு யெளுமாகில் நெல் விதை முக்கலத்துக்கு யெல்லையாவது குடிபற்றில் மசை கல்லுக்கு மெர்க்கு கிளக்கு நொக்கி பொலக்க வர்க்கும் வடக்கு அடக்குற்றில் காட்டு யெளுமா பொன்கவர்க்கும் கிளக்கு வடக் கினிலும் கட்டு யெளுமாவுக்கு தெர்க்கு நாங்கெல்லைக்கி உள்ப் பட்ட நஞ்சை ஆக நெல் விதை அருகலத்துக்கு முடிக்கண்ட சொளபுறத்தில் வந்த யிரை பெறவும் சித்தாயம் யெலவை ஒகவை யெப்பெர்ப்பட்டதும் தண்ணி வெட்டி செய்யாருகவும். முன்னீர் துறத்து உளுவார்களாகவும். இன்னெல் விதை கவரு அற்று விலையாக்கி ஸ்ரீஅக்கி பளம்ச் சாலாகை அஞ்சு னூற்றெரி வரும்[3] ஒன்கம்மிகளுக் கொள்கை கொண்ட மயிறப்பின் நெல் விதை அருகலமு ஆண்டு பதிமூன்ருவது காற்முதல் அக்கரும் பொலம் பொகாமல் முற்றூற்று தெவதானமானக்[4] குடுத்து சந்திருதித்தவரை செம்பிலும் சிலையிலும் வெட்டிக் கொடுத் தொம். இவை யெல்லாம் வல்ல சொள [மூ*]வெந்த வெளான் யெளுத்து...............இது வாண[ரத*]ருய தெவன் யெளுத்து.

---

1. 'தெவர்கன்மிகளுக்கு' என்று வாசிக்க.

2. 'விக்கிரம சொழ சருப்பெதி மங்கலம்' என வாசிக்க.

3. 'ஸ்ரீயக்கி பழஞ்சலாகை அச்சு நூற்றிருபதும்' என வாசிக்கலாம்.

4. 'கார் முதல் கற்றுப்புல் பொகா முற்றூட்டுத் தெவதானமாக' என்று வாசிக்க.

................இவை காடு வெட்டி யெழுத்து...............ஒப்பம் கேசுருறசி.........சுக [॥*] [1]

சாசனம் —1154] [D. 2803-ந

ஷை சாசனத்துக்கு மேல் வரியில் எழுதியிருப்பது.

At the same place [above the previous record]. Record dated in the 22nd + 1st + 1st year, Subhānu, Simha, śu. pañchamī, Monday and Rēvati in the reign of [the Koṅgu king] **Vira Pandya deva** registering an order of the assembly of the village of Ottanūr *alias* Perumpaḷanam in Vaḍapariśāra-nāḍu. The tank at Avaraip-paḷḷam in the eastern portion of the village, which had been in a damaged condition for a long time, was repaired providing bund and sluices, at the expense of certain private individuals and the village assembly assigned the lands irrigated by the said tank to the several persons who contributed for the expenses of repairs, stipulating that they were to enjoy the full produce for the first 4 years, and then give *vāram*, probably to the assembly, at the rate of $\frac{1}{4}$th for the next three years, subsequently raising the rate to $\frac{1}{3}$ and finally to one-half of the produce.

A similar record is found at Perumānallūr in the Palladam taluk of the Coimbatore district and has been published as No. 336 in Vol. I above.

ஸ்வஸ்தி ஸ்ரீ [॥*] வீறபாண்டிய தேவருக்கு ஆண்டு உயஉ-வதுக்கெதி ருவதுக் கெதிருவது சுபானு சம்வத்(வ)சரத்து சிம்ம மாசத்து பூருவ பக்ஷத்து பஞ்சமியும் திங்கள்க் கிழமையும் பெற்ற தெவதிளுள்[2] வட பரிசாற நாட்டு ஒத்தனூருன பெரும் பழநத்து யூறும், ஊருர்களும் ஆகம்பாகக்குது வரதருச பட்டர் மகன் ஸ்ரீருயபட்டருக்கும் சறசாறம்பிற திருவெண்காகு பட்டர் மகன் நாருயண பட்டருக்கும் உப்பம்பிருல் கொவிந்த பட்டர் மகன் சொலைப்பிருன் பட்டருக்கும் அவர் தம்பி மகாதெவ பட்டருக்கும் காசாறம்பி திருநம்பி பட்டர் மகன் சொதி

1. 'இது பன்மாகெச்வர ரக்ஷை' என்று வாசிக்க.

இதே போன்ற சாசனம் ஒன்று கரூர்த் தாலூகா வெஞ்சமாங் கூடலூரி லிருந்து கிடைத்துள்ளது. அது இரண்டாம் பாகத்தில் 729 செ. ஆக வெளி யாகியுள்ளது.

2. 'ரெவதி நாள்' என்று வாசிக்க.

மாணிக்கப் பட்டருக்கும் பெச்சங்கீழ் சிவந்த வாசின பட்டர் மகன் நாருயண பட்டருக்கும் சிற்றிங்கோப் பெருமாள் நாருயண பட்டர் காங்க நாட்டு முத்தூரு வியாபாரி மன்னுள ஓறசம்பந்த பெருமாளுக்கு நாங்கள் திருமலையில் கல் வெட்டிக் கொடுத்த பரிசாவது.........யெங்களூரில் கீள்காட்டில் அவரைப் பள்ளத்து உடை குளம் நெடுங்காலம் சாயக் கரை பட்டுக்கிடந்த இந்த உடப்புகளுக்கும் கரைக்கும் தாம்புக்கு வெண்டு முதல் தாங்களே யிடுகயில் இக்குளக்கிம துளம்பகளாலும்[1] அணையாலும் நீர்பாய் நிலம் யெதுக்கும் திருத்தி பயிர் செய்யக்கடவார்களாகவும். பயிர் செய்த யிடத்தில் திருத்தின ஆண்டு முதல் விளைச்சலொ டெநாழட்டை[2] நாள் முற்றூட்டும் உண்ணக் கடவீர்களாகவும். ................பின்பு மெல் வாறத்துக்கு முவறட்டு நாள் நான் னென்று நொவெமாகவும்[3]. பின்பு கொட்டைதான மூன்றில் ஒன்று கொள்வொமாகவும்..............பட்டர் மகன் ஸ்ரீ ருமக பட்டர் மதில் பங்குகொண்டு இதில் வெரெ தம்பியும் உடயார்க்கு பங்கு காலாச்சு பங்கு ஒன்ரெ முக்கால்குத் திருவெண்காடு பட்டர் மகன் நாருயண பட்டருக்கு ஒன்னரை இதில் திருக்கொடியாற் வுடையார் மகன் எச்சற்கு பங்கு அரைக்கால் பங்கு ஒன்று கொவிந்தப்ப பட்டர் மகன் சொலைப்பிருமண பட்டருக்கு பங்கு ஒன்று. இவர் தம்பி பட்டருக்கு பங்கு ரெண்டு...................... இதில் இவர் மச்சுனனுருக்கு பங்கு காலுங் குடுக்கவும்......ரு...[4]

## மடவளாகம் Madavaḷāgam

இது கோயம்புத்தூர் ஜில்லாவில் தாராபுரம் தாலூகாவில் உள்ளது. இவ் வூரிலிருந்து கிடைத்த சாசனம் முதல் பாகத்தில் 320 நெ. ஆக வெளியிடப்பட்டுள்ளது. அதனோடு தொடர்பு கொண்டதே இந்தச் சாசனமும்.

The village is now included in the Dhārapuram taluk of the Coimbatore district. One inscription copied from this place has been given as No. 320 in Vol. I

---

1. 'குளக்கீழ்த் தூம்புகளாலும்' என்று வாசிக்க.

2. 'நாலாட்டை' என வாசிக்க.

3. 'மூவாட்டை நாள் நாலில் ஒன்று கொள்வொமாகவும்' என்று வாசிக்க.

4. சாசனம் முற்றுப் பெருமல் இதனோடு நின்று விடுகிறது.

இதே போன்ற சாசனம் ஒன்று கோயம்புத்தூர் ஜில்லாவில் பல்லடம் தாலூகாவில் பெருமாநல்லூரிலிருந்து கிடைத்திருக்கிறது. அது முதல் பாகத்தில் 336 நெ. ஆக வெளியாகியுள்ளது.

சாசனம்—1155] [D. 2808-உ

*சுவாமி சந்நிதியில் தெற்கே தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் கர்ப்பக் கிரகத்தில் அர்த்த மண்டபத்தில் வெளிப்புறத்தில் உள்ளது.*

(No. 227 of 1920). On the south wall of the central shrine in the Ārdra Kapālēśvarasvāmin temple at the village. Record dated in the cyclic year Sarvadhāri, Tai 25, in the reign of the Vijayanagara ruler Mahamaṇḍalēśvara **Hariyaraya Udaiyar**, son of Dēvaraya, registering an agreement given by the *nāṭṭār* of Kāṅgaya-nāḍu regarding the gift of 5 *mā* of land in Ālambāḍi and Kaṟṟāyaṅkaṇṇi villages for daily worship and offerings to the god Uḍaiyār Pachchōṭṭu-āvuḍaiyār of Paṟpati in Kāṅgaya-nāḍu [referred to in another inscription, No. 225 of 1920, published as No. 320 in Vol. I above]. An annual tax of one *paṇam* per village is also mentioned.

ஸ்வஸ்தி [॥*] ஸ்ரீம(ா)ன் மகாமண்டெலெசுவறன் ருயர் மகாருயர் தெவருய ஒடயார் குமாறர் அரிருய ஒடயாருக்கு செல்லானின்ற[1] சறுவதாரிஷு தைமீ உ௰ரு௳ காங்கய நாட்டு நாட்டவர்: யெங்கள் நாட்டில் பாறபதி ஊருடய நாட்டார் பச்சொட உடயாருக்கு[2] கல்லிவெட்டிக்கொடுத்த வாசகமாவது... .......யெங்கள் நாட்டில் ஆலம்பாடியும் கத்தாங்கண்ணி இவை மூன்று மாவு நெலமும் ஒடயவருக்கு தெவஸ்தானமாக அரிருய உடயார் குடுத்தார்கள். யெலுகரை நாடு பதிநெண் விஷயமும் கட்டிக் கொடுத்து உடயவருக்கு மகாபூசை கொள்குற அளவுக்கு காங்கய நாட்டிலெ பெரிரு ஊரு சித்தூர் கல்ப்பாட்டூர்க்கு ஒரு பண முறக் காலத்தில் அமுது படிக்கா வருஷவர்த்தனயாகக் குடுத்து ஆலம்பாடிக்கி வருஷா காணிக்கை விணையொகமும் ஒடயாருக்கு இந்த கொவில் காணி ஒடய சிவ பிறும்மணர் மார்க்கண்டய கொத்திறத்தில் குமார தெவர் பச்சை ஒடயாருக்கு உள்ளிட்டார் இந்த ஊரு ஆலம்பாடியும் குடியெத்திக் கொண்டு கத்தாண்ணி னிலமும் பயிறு செய்துக் கொண்டு பட்டாவில் பட்ட தெவதாயமும் ஊருக்கு ஒரு பணமும், மற்றும் பொர முதல் ஆதாயம் வருமுதலுக்கு பத்திக் கொண்டு உடயவருக்கு அமுதுபடிக்க இறிலெ வெளக்கு யெண்ணை திலொபாணம் அதி பெரிபட்டம் தி ஓலை திருமெல் பூச்சு நம்பியார் பரிசாறகம்

---

1. 'செல்லா நின்ற' என்று வாசிக்க.
2. 'உடையார் பச்சொட்டு ஆவுடையார்க்கு' என வாசிக்க.

திருவலகு திருமெணுகலார அர்ச்சணை யிட்டுக் கொண்டு பூசை புனஸ்காறம் நடக்கக் கடவாருகவும். யிந்த தர்ம்மம் சந்திருதித்தர் உள்ளவரைக்கும் நடக்கக் கடவொமாகவும். இந்த தர்மத்தை நடத்திக் குடுத்தலன்று முதல் பாலிகம் சுகமெயிருப்பன். யிந்த தர்மத்தை அழித்தவன் மெத்த மாத்தலனும் கெங்கை கறையிலெ காரும் பசுவைக் கொன்று குருவயுங் கொன்றவன் புக்க னறகம் புகுவன். மாகெசுவற ரெக்ஷெ [॥*]

திருவொற்றியூர் Tiruvoṟṟiyūr

இது செங்கல்பட்டு ஜில்லா சைதாப்பேட்டைத் தாலூகாவில் உள்ளது. இவ்வூரிலிருந்து பிரதி செய்யப்பட்ட 24 சாசனங்கள் முதல் பாகம் 507-530 நெ. ஆகக் கொடுக்கப்பட்டுள்ளன.

24 inscriptions copied from this place which is included in the Saidapet taluk of the Chingleput district have been published as Nos. 507-530 in Vol. I.

சாசனம் — 1156] [L. R. 52-உடுச

திரு ஒற்றியூர் புற்றிடங்கொண்ட தியாகராய சுவாமி கோயில் கர்ப்பகிரகத்துக்குப் பின்னுலே எழுதியிருக்கப்பட்ட சிலாசாசனத்துக்கு நகல்.

On the back wall of the central shrine in the temple of Puṟṟiḍam-koṇḍa Tyāgarāja (i.e. Tyagaraja who has taken his residence in the ant-hill), now known as Ādhipurīśvara in the village. Record dated in the 3rd year of the Chōḷa king Tribhuvana chakravartin **Raja-dhirajadeva** registering the gift of 32 cows for a perpetual lamp in the 'Garland of light' (*jyōtimālā*) by one of the temple officials (*dēvarkanmi*) named Sūryadēva *alias* Vyākaraṇadāna-Bhaṭṭa.

A similar inscription has been published as No. 513 in Vol. I above. But that is No. 7 on p. 105 of the *List of Inscriptions from the Southern Districts*, while the present one is No. 24 on p. 110 of the same *List* and these two are found separately in the *Local Records* also. Further the name of the king is given as Tribhuvana chakravartin Rājarājadēva on the other record.

ஸ்வஸ்தி ஸ்ரீ [॥*] திரிபுவன சக்கிறவற்திகள் ராஜாதி ராஜதெவர்க்கு யாண்டு மூன்ருவது செயங்கொண்ட சொழ மணடலத்து புழர்[க்*] கொட்டத்து உடையார் திரு ஒற்றியூருடையார்

கொயிலில் தெவர்கந்மி காலூ [1] கொத்திரத்து உமிப்புறத்து உல காளுடையான் சூரிய தெவனுன வியாகரண தான பட்டனென். இக் கொயி[லி*]ல் ஞனிட்ட சொதி மாலையில் (ஞனிட்ட சொதி மாலையில்) வைத்த திருநந்தா விளக்கு ஒன்றுக்கு திருபுவன சுந் தரதந் தெருவில் மன்ருடிகளில் பல்லவன் இவன் தம்பி யென் [2] இவர் வைத்த திருனந்தா விளக்கு ஒன்றுக்கு ஞன் கைக்கொண்ட பசு கூமிஉ. இம் முப்பத்திரண்டுங் கைக்கொண்டு இவ் விளக்கு சந் திராதித்தவரை செலுத்தக் கடவெனுனென் பல்லவன் இவன் தம்பியென். [2] [இது பன்*] மஹெஸ்வரரக்ஷை. உ [3]

விஜயமங்கலம் Vijayamangalam

சாசனம் — 1157] [D. 3369-சு

கோயம்புத்தூர் ஜில்லா பெருந்துறை தாலூகா விசயமங்கலம் மிட்டா மவுசே 'பெடாரியூர்' பெருமாள்கோவில் மகாமண்டபத்தில் சந்நிதிக்குத் தென் புறம் மேற்குச் சுவரில் உள்ளது.

On the south wall (western side) of the mahāmaṇḍapa in front of the Vishṇu temple at (Piḍariyūr, a hamlet of) Vijayamaṅgalam.

Record, the date of which is not found, in the reign of the Paṇḍyan king Jaṭāvarman **Sundara Pandyadeva** registering the gift of 12 *paṇam* placed in the hands of a priest of the temple by a certain Śiṅga-p-perumān for a twilight lamp in front of Karumāṇikka Āḻvar at Vijayamaṅgalam in Kuṟuppu-nāḍu.

For the identification of the king see No. 1094 above.

ஸ்வஸ்தி ஸ்ரீ [॥*] கடம்பன்மரான திறுபுவன செக்கறவர்த்திகள் ஸ்ரீ காந்த பாண்டியனுக்கு [4] [........] திங்கள் முதல் குறுப்புநாட்டு விசய மங்கல மூலெக் கொன்ற குமரன் யெடுத்தொனை சிங்க

---

1. 'சுரபூவ' என்று வாசிக்க.

2. 'பல்லவன் இளநம்பியென்' என வாசிக்க.

3. இதேபோன்ற சாசனம் ஒன்று முதல் பாகத்தில் 513 ல. ஆகக் குறிக்கப்பட்டுள்ளது. ஆயினும் இது வேருகக் கொடுக்கப்பட்டுள்ளது. தவிர, அரசன் பெயரும் வேருக இருக்கிறது. மற்றதில் ராஜ ராஜ தேவர் பெயர் காணப்படுகிறது.

4. 'கொச் சடைய பன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் சுந்தர பாண்டிய தேவர்க்கு' என்று வாசிக்க.

பெறுமாள் [........] மாணிக்க முல்லவற்கு[1] வைத்த சந்தியா தீப வெளக்கு ஒன்றுக்கு பணம் பனிரெண்டு [......] இக் கொயிற் காணியு[டை*]டய பிறுமணன் காசிப கொத்தரத்தில் அளகிய மண வாள வபனமாளனுக்கு [......] கொடங் கொண்டு கொவில் புகுவான் தனத்தார்த்தில்ரைதாக யிது ஸ்ரீ வயிவஷ்ட்டனுவரை ஷெசிக்க[2] [॥*]

## மல்லபட்டினம் Mallapaṭṭinam

பின் வரும் 7 சாசனங்களும் மக்கென்ஸியின் சாசனப் பட்டியலிலே மல்லபட்டினம் ஈசுவர சுவாமி கோவிலிலிருந்து பிரதி செய்தனவாகக் கொடுக்கப்பட்டுள்ளன. அவை பிரதி செய்யப்பெற்றுள்ள ஏடு கிடைக்கவில்லை. பட்டியலில் இவ்வூர் உடையார்[பாளையம்] ஜில்லாவில் உள்ளதாகக் குறிக்கப்பட்டுள்ளது. அரியலூர் (திருச்சிராப்பள்ளி ஜில்லா), சேந்த மங்கலம், திருவெண்ணெய் நல்லூர் (தென் ஆர்க்காடு ஜில்லா), கண்ணுடிப் புத்தூர் ஆகிய ஊர்கள் அந்தப் பகுதியில் அடங்கியுள்ளனவாகக் காணப்படுகின்றது. எனினும், இவ்வூர்ச் சாசனங்களிலே திருப்பாலைவனம் உடைய நாயனூர் பெயரும் கண்ட கோபாலன் பெயரும் காணப்படுவதால், செங்கல்பட்டு ஜில்லா பொன்னேரித் தாலூகாவில் திருப்பாலைவனத்துக்குப் பக்கத்தில் உள்ள மல்லப்பட்டினமாகவே இது இருத்தல் வேண்டும்.

இவ்வூர் கடற்கரையை அடுத்து உள்ள தென்பதை நோக்கும்போது இது பல்லவ மன்னர்களின் ஆட்சிக்காலத்தில் பிரபலமான துறைமுகப் பட்டினமாக விளங்கியிருத்தல் வேண்டும் என்பது விளங்கும்.

ஒவ்வொரு சாசனமும் கோவிலில் எந்த இடத்தில் பொறிக்கப்பட்டிருந்ததென்பது குறிக்கப்படவில்லை.

The following 7 inscriptions are given in the *List of Inscriptions from the Southern Districts* as having been copied from the Īśvara temple at Mallapaṭṭinam. But their texts are not available. The village is included in Uḍaiyār[pāḷaiyam] tract in the *List*. Places like Ariyalūr (Tiruchirāppaḷḷi district), Śēndamaṅgalam and Tiruveṇṇainallūr (South Arcot district) as well as Kaṇṇaḍipputtūr are included in this division. So the place has to be looked for in the South Arcot district area. But from the mention of the names of the god Tiruppalaivanam-uḍaiya-Nāyanār and the chief Gaṇḍa-

---

1. 'கருமாணிக்க ஆழ்வாருக்கு' என வாசிக்க.
2. 'இது ஸ்ரீ வைஷ்ணவர் ரக்ஷை' என்று இருத்தல் வேண்டும்.

the temple gods and conveyed them secretly out of the town, the Vishṇutemple images finding an asylum in the jungles of Uḍaiyārpāḷaiyam in the Trichinopoly district. But when the danger was past and Kāñchīpuram was considered safe, the local chieftain of Uḍaiyārpāḷaiyam, who was much enraptured at the image of the God Varadarāja refused to restore it to its original abode at Kāñchī with the result that, at the special intercession of Śrīmat Paramahamsa Parivrājakāchārya Āttān Jīyar, his disciple Lāla Tōḍaramalla terrorised the chief with a strong contingent of troops at his back and safely brought back the image and reinstated it in the temple with great pomp and splendour. This incident is even today commemorated in an annual festival called the Uḍaiyārpāḷaiyam festival. An exact parallel to the above restoration is furnished by Śrīraṅgam, the image of which temple, Śrī Raṅganatha, had to be restored by Gōppaṇa, the famous Brāhmaṇa general of Kumāra Kampaṇa in Śaka 1293."

The party who was instrumental for the above restoration, *viz.* Śrīnivāsadāsa or Āttān Jīyar, as he is called, has been identified with a relative of Akkanna and Mādanna of Gōlkoṇḍa fame, who fled south when Aurangazeb's forces sacked Gōlkoṇḍa and killed the two brothers. In a copper-plate grant deposited in the Madras Museum, the same Śrīnivāsadāsa, who is there mentioned as the protege of Tōḍaramalla, is said to have granted five villages to the temple of Śrīmushṇam near Chidambaram, in the Śaka year 1636 (A.D. 1714-15), four years later than the Kāñchīpuram record, in the regime of the Delhi Emperor Farruksiyar and the Karnatic Nawab Sa-ādat-Ullāh Khan.

**வரதராஜ சுவாமியின் விக்கிரகத்தை உடையார்பாளையத்திலிருந்து திருப்பிக் கொணர்ந்து சகாப்தம் 1632, விரோதி ஆண்டு தோன்றமல்லர் பிரதிஷ்டை செய்த விவரத்தைக் கூறுவது.**

மக்கென்ஸியின் உதவியாளர் படி எடுத்த சாசனப் பிரதி கிடைக்கவில்லை. சாசனப் பட்டியலில் அது தமிழ் மொழியில் தெலுங்கு எழுத்தில் உள்ளதாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. சாசன இலாகாவின் அறிக்கையிலிருந்து இது வடமொழியில் உள்ளதாகத் தெரிகிறது. சகாப்தம் 1632, விரோதி வருஷம் பால்குன அபரபக்ஷத் திரிதியையும் உத்தரபாத்ரபத(உத்திரட்டாதி) நக்ஷத்திரமும் பெற்ற சனிக்கிழமை விருஷப லக்னத்தில் பிரதிஷ்டை நடந்ததாகக் கூறப்பட்டிருக்கிறது.

சாசனம் பொறிக்கப்பட்ட கல்லின் உச்சியில் சங்கு சக்கரத்துடன் கூடிய தென்கலை நாமம் இருக்கிறது. இரண்டு வடமொழிச் சுலோகங்கள் கொண்ட அக்

கல்வெட்டு தெலுங்கு எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. அதைத் தொடர்ந்து தெலுங்கு வசனத்தில் ஒரு மொழிபெயர்ப்பும் நாகரி எழுத்தில் ஒரு பிரதியும் உள்ளன. மக்கென்ஸியின் உதவியாளர் பிரதி எடுத்த நாளையிலே தமிழ் மொழி பெயர்ப்பு ஒன்றும் இருந்து அது இப்போது காணவில்லையோ என்றும் சந்தேகிக்க இடம் உள்ளது.

உடையார்பாளையம் காடுகளில் அடைக்கலம் புகுந்திருந்த வரதராஜ சுவாமி, தாயார் ஆகியோருடைய திருமேனிகளை ஸ்ரீநிவாஸதாசரான ஆத்தான் திருவேங்கட ராமாநுஜ ஜீயரின் வேண்டுகோட்படி ராஜா தோடர மல்லர் காஞ்சீபுரத்துக்குத் திருப்பிக் கொணர்ந்து பழையபடியே கோவிலில் பிரதிஷ்டை செய்ததைத் தெரிவிக்கிறது இந்தக் கல்வெட்டு.

இவ்விடம் குறிக்கப் பட்டுள்ள தோடர மல்லர் என்பார் கர்நாடக நவாப் சதாத்துல்லா கானிடம் சேனுபதியாக இருந்தவர். செஞ்சி அரசன் தேசிங்கு ராஜனுடன் போர் புரிந்தவரும் இவரே. சுமார் கி. பி. 1688-ல், தென்னுட்டில் உள்ள மராத்தியர்களை முறியடிப்பதற்காகத் தில்லி பாதுஷா அவுரங்கஜேப் ஒரு படை திரட்டி அனுப்பி வைத்தான். அந்தப் படை வரும் இடங்களில் கோவில்களை இடித்து விக்கிரகங்களை உடைத்து விடுவார்களே என்று பயந்த தமிழ் நாட்டுக் கோவில் நிர்வாகிகள் பாதுகாப்புக்குத் தக்க ஏற்பாடு செய்தார்கள். கோவில் விக்கிரகங்களையும் விலையுயர்ந்த பொருள்களையும் படையெடுத்து வருகிறவர்கள் கையில் எட்டாதபடி மறைவிடங்களில் வைத்துப் பாதுகாத்தனர். அந்த வகையில் காஞ்சீபுரம் வரதராஜர் திருவுருவம் உடையார்பாளையம் காட்டுக்குப் போய்ச் சேர்ந்தது. கலவரம் நீங்கி நாட்டில் அமைதி நிலவ ஆரம்பித்ததும், கோவில் விக்கிரகங்களைத் திரும்பவும் கொணர்ந்து பிரதிஷ்டை செய்ய விரும்பினுர்கள். ஆனுல், வரதராஜரின் திருமேனியைக் கண்டு மயங்கிப் பக்தி பூண்ட உடையார்பாளையம் பாளையக்காரர் அதைத் திருப்பிக்கொடுக்க மறுத்துவிட்டார். அதன்மீது ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசாரிய ஆத்தான் ஜீயர் தம் சிஷ்யர் லாலா தோடரமல்லருடைய உதவியை நாடினுர். தோடரமல்லரும் படைப் பலத்துடன் சென்று பாளையக்காரரை மிரட்டி விக்கிரகத்தைத் திரும்பப் பெற்று வந்தாராம். அதன் பிறகு மூர்த்தி கோவிலில் பல சிறப்புகளுடன் பிரதிஷ்டை செய்யப்பட்டது. இதை யொட்டி இன்றைக்கும் வரதராஜர் கோவிலில் வருஷந்தோறும் உடையார்பாளைய உற்சவம் நடந்து வருகிறது.

இதேபோன்ற சம்பவம் ஒன்று ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருக்கும் ரங்கநாதப்பெருமாளுடைய திருவுருவத்துக்கும் நேர்ந்திருக்கிறது. பதினான்காம் நூற்ருண்டின் ஆரம்பத்தில் முகம்மதியர் தமிழ் நாட்டின்மீது படை யெடுத்து வந்த காலத்தில் ரங்கநாதர் திருவுருவத்தை ஊர் ஊராகத் தூக்கிச் சென்ருர்கள். கடைசியில் விஜயநகர அரசனுன கம்பண உடையாரின் தளகர்த்தரான கோபண்ணுவினுல் சக வருஷம் 1293-ல் அவ் விக்கிரகம் திரும்பவும் ஸ்ரீரங்கத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

இவ்விடம் குறிக்கப்பட்ட ஸ்ரீநிவாஸதாசரான ஆத்தான் ஜீயர் கோல்கொண்டாவில் மந்திரிகளாக இருந்த அக்கண்ணா மாதண்ணா என்னும் சகோதரர்களின் உறவினர் என்பர். அவுரங்கஜேப்பின் படைகள் கோல்கொண்டாவைத் தாக்கி அவ்விருவரையும் கொன்ற சமயம் அவர் அவ்விடத்திலிருந்து தப்பித் தென்னாடு போந்தவராம். சகாப்தம் 1636-ல், அதாவது காஞ்சீபுரம் நிகழ்ச்சிக்கு நாலு ஆண்டுகளுக்குப் பின், அவர் ஸ்ரீமுஷ்ணம் கோவிலுக்கு ஐந்து கிராமங்களைத் தானமாக அளித்த செய்தியைத் தெரிவிக்கும் செப்பேட்டுச் சாசனம் ஒன்று சென்னை பொருட்காட்சிச் சாலையில் உள்ளது. அதிலிருந்து அந்தத் தானம் தில்லி அரசன் பருக்சீயார் ஆட்சியில் கர்நாடக நவாபு சாதத்துல்லா கான் நாளையில் அளிக்கப்பட்டது என்றும் ஜீயர் தோடரமல்லருடைய ஆதரவில் இருந்தார் என்றும் தெரிகிறது.

சாசனம் — 1208] [No. *99* on p. *161*-ii

அஸ்திகிரி பர்வதத்தின் தென்புறம் மேலண்டை மூலையில் பொறிக்கப்பட்டிருப்பது.

On the south wall (western corner) of the Hastigiri 'rock' in the same temple. Record dated in S'aka 1591, Piṅgala registering an order issued by the Paṇḍārattār of the temple and Sēnai Mudaliyar for giving three *tīrtha* to Śrī Raṅgācharya in the temple.

The copy of this record as transcribed by the assistants of Col. Mackenzie is not available. But there is a similar record in the same temple. Record dated in Śaka 1599, Piṅgala, Kārttikai, S'u. pañchami, Monday, S'ravaṇa, corresponding to A.D. 1677, November 19, said to have been found at the same place, registering that S'rīraṅgācharya, son of Vādibhīkara Śrīnivāsaguru of Srīvatsa *gōtra* was entitled to receive the first *tīrtha*, *aruḷappāḍu* and other privileges in the temple of Dēvapperumāḷ hereditarily has been published as No. 419 in vol. I above.

Both these are given separately in the *List.*

சகாப்தம் 1591, பிங்கள வருஷம் கொண்ட கல்வெட்டு. கோவிலில் ஸ்ரீரங்காசாரியாருக்கு மூன்று தீர்த்தம் கொடுக்கப்பட வேண்டுமென்பதைக் கோவில் பண்டாரத்தாரும் சேனை முதலியாரும் அறிவிக்கும் சாசனம்.

இச்சாசனத்தின் பிரதியும் கிடைக்கவில்லை. ஆயினும் இதே போன்ற சாசனம் வேறு ஒன்று முதல் பாகம் 419 நெ. ஆக வெளியிடப்பட்டுள்ளது. அதே இடத்தில் பொறிக்கப்பட்டுக் காணும் அச் சாசனம் சகாப்தம் 1599, பிங்கல ஆண்டில் ஸ்ரீவத்ஸ கோத்திரம் வாதிபீகர ஸ்ரீநிவாஸ குருவின் குமாரர்

ஸ்ரீரங்காசாரியாருக்குக் கோவிலில் முதல் தீர்த்தம், அருளப்பாடு முதலிய மரியாதைகளை வழங்கவேண்டும் என்பதைத் தெரிவிப்பதாகும்.

சாசனம் — 1209] [D. 3302-v-53

மேலக் கோபுர வாசலுக்குத் தென்பக்கம் (சிறிய அறையின் சமீபம்) எழுதப்பட்டுள்ளது.

To the south of entrance (near the small room) into the west gōpura of the temple. An incomplete record dated in Śaka 1325, Chitrabhānu, Kumbha, ba. saptami, Wednesday and Anurādha in the reign of the Vijaynagara king Mahāmaṇḍalēśvara **Harihararaya** mentioning a large number of high sounding *birudas* of a subordinate belonging to the family of the Pallavas of Kāñchi.

The S'aka year was current and the corresponding date would be A.D. 1403, February 14.

A similar inscription from the same place registering the gift of 32 cows and a bull for maintaining a perpetual lamp in the temple of Perumāḷ Aruḷāḷanātha by the son of Piḷḷaiyār Podukkam Aubaḷadēva Mahārāja has been published as No. 373 in vol. I above.

As both these records are given separately in the *List* they are probably different.

இதேபோன்ற சாசனம் ஒன்று முதல் பாகம் 373-ஆ. ஆக வெளியிடப் பட்டுள்ளது. சாசனப் பட்டியலில் இரண்டும் தனித்தனியே கொடுக்கப் பட்டிருப்பதால் இவை வேறு வேறானவை போலும்.

ஸ்வஸ்தி [॥*] ஸ்ரீமந் மஹா மண்டலெசுபர ஸ்ரீ வீர ஹரிஹரராய ருக்கு செல்லா நின்ற சகாப்தம் ௲௩௱௨௰௫-க்கு மெல் செல்லா நின்ற சித்திரபானு ஸம்வச்சரத்து கும்ப நாயற்றில் [அபர பட்சத்தில் ஸப்தமியும் புதன் கிழமையும்] பெற்ற அனுஷத்து நாள் செயங்கொண்ட சொழமண்டலத்தில் எயில் கொட்டத்தில் [காஞ்சீபுரம்] திருவத்தியூர் நின்ற பெருமாள் அருளாளனாத னுக்கு ஸ்வஸ்திஸ்ரீ ஸமஸ்த மஹிமண்டலெசுபரன் ராசாதி ராஜ ராஜ பரமெசுவர பரம வம்சொத்பவ பல்லவ குலதிலக பாரத்வாஜ கொத்திர பவித்திர துரு ஸ்ரீ புரவராதீசுபர காமகொட்டிபீகா லப்த்த வரப்பிறஸாத பரம மஹெசுவர லளிதார்த்த சந்திர கட்டுவாங்கத் துவஜ கடுவாயுவரபொஷண சத்திய ஸம்பாஷண பஜபலபூஷண விறுஷப வாஞ்சனி வாரளவவெஷண திருவெங் கிடனாத னெடுவடி ஸாஹஸர்ஜின னீதிபாராயண கிறந்த ஜனச் சிறய ஸமறப் பிறசண்ட யிந்திரவதார ஜெகத்தங்க பயிரவ புவ

ளிதாருயண றூபகந்தற்ப அனெனற் றிபு ளிறுபதி மணிமகுட கட்டித சரனுரவிந்த பூலோக சாதுற்வற்ண பிறகாலக பூற்வதிக் பாக சப்த சதாகிபிஹார பிறதிஷ்டதாபரண கெங்கா ஜலதியில் கிறீடா விநோத திக்விஜயார்த்த [ததவருயருக்கு பஜாளி மாதவ ருய அஷெது] குலதெவ கிரிருய ருஜிய ஸம விக்கிற விபார மல்லா புரவல்லப மயிலாபுர நுதர் அருளாளனுத தெவ ஸ்ரீபாத பத்மரு தக வயிரி மண்டலிகற கண்ட மண்டனஅ முருறி அபங்குல புக் க்ருய ருய மிதிய ருய கண்ட மதியான மங்க மணவாளன் செகத கொபால வல்லபாரித பல்லவ திவனெத்திர திறணய பல்லவருய குமார பசவ சங்கற்ப தற தளாயருய[1].......

சாசனம் — 1210] [No. *119* on p. *163*-ii

அவ்வூரிலே ஏகாம்பரேசுவரர் கோவிலில் சபாபதி விமானத்தின் வடபுறம் எழுதியிருப்பது.

On the north wall of the Sabhapati [Naṭarāja] vimāna in the temple of Ekāmbaranātha at the same place.

Record dated in the reign of the Vijayanagara king **Krishna [deva] Raya** registering the gift of the village 'Comatoor' to the god **Ekāmrēśvara.**

The text of this inscription is said to be in the Grantha script.

---

1. மூலத்திலே இதுவரையில் தான் கிடைக்கிறது. இந்தப் பிரசஸ்திப் பகுதியின் திருத்தமான பாடம் வருமாறு:

ஸமஸ்த மகீமண்டலேசுவரன் ராஜாதிராஜ ராஜ பரமேசுவர பரம வச்சோத்பவ பல்லவ குல திலக பாரத்வாஜ கோத்ர பவித்ர காஞ்சீபுரவராதீச்வர காமகோட்டம்பிகா லப்த வரப்ரசாத பரம மாஹேச்வர லலிதார்த்த சந்த்ர கட்வாங்க த்வஜ சடுவாயு பரபோஷண ஸத்ய ஸம்பாஷண புஜங்க விபூஷண வ்ருஷப லாஞ்சந வரநுவேஷண திருவேங்கடநாத கொடுவடி ஸாஹஸார்ஜுந நீதி பாராயண பந்து ஜநாச்ரய ஸமரப் பிரசண்ட ருத்ராவதார ஜகதங்க பைரவ புவநி நாராயண ரூபகந்தர்ப்ப அநேக ரிபு ந்ருபதி மணிமகுட கட்டித சரணாரவிந்த பூலோக சாதுர்வர்ண பரிபாலக ஸ்ரீபர்வத பூர்வதிக்பாக ஸப்தசதாக்ரஹார பிரதிஷ்டிதாபரண கங்காஜல க்ரீடா விநோத திக்விஜயார்த்த.........குலதேவ கிரிராய ராஜ ஸம விக்ரம விஹார மல்லாபுர வல்லப மைலாபுரநாத அருளாளநாத தேவ ஸ்ரீபாத பத்மாராதக வைரி மண்டலீகர கண்ட தாநவமுராரி அபங்கராஹுத்தராய மிதியாகண்ட மதியாத மன்னர் மணாள ஜகத கோபால பல்லவாதித்ய பல்லவ த்ரிநேத்ர திரிநயந பல்லவ ராய குமார பசவ ஸங்கற்ப..........

விஜயநகர மன்னனான கிருஷ்ண[தேவ]ராயருடைய ஆட்சிக் காலத்துச் சாசனம். ஏகாம்பரேச்வரருக்குக் கோமத்தூர் என்னும் கிராமத்தை அளித்த செய்தியைத் தெரிவிப்பது.[1]

சாசனப் பட்டியலில் இச்சாசனம் வடமொழியில் உள்ளது என்றும் கிரந்த எழுத்தில் பொறிக்கப்பட்டிருக்கிறதென்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

சாசனம் — 1211] [No. *126* on p. *164*-ii

எந்தக் கோவிலில் எந்த இடத்திலே பொறிக்கப்பட்டிருக்கிற தென்பது குறிக்கப்படவில்லை. இந்தச் சாசனம் வரதராஜர் கோவிலிலே இருப்பது போலும்.

The exact place where this inscription is found engraved is not stated. Evidently it is in the Varadarāja temple at the place. Record dated in the 32nd regnal year of the Chōḷa king Tribhuvana chakravartin **Rajadeva** registering the grant of 500 *kuḷi* or 1¼ land measured by the twelve-feet rod to the god Varadarāja-svāmin and the *Āḷvārs*.

The king is evidently **Rajaraja III.**

The copy of this record also is not available.

திரிபுவன சக்கரவர்த்தி ராஜதேவனுடைய 32-ஆம் ஆட்சிக் காலத்தது. ஆழ்வாருக்கும் வரதராஜ சுவாமிக்கும் பன்னிரண்டு அடிக் கோலால் ஐந்நூறு குழி அல்லது ஒன்றே கால் பூமி நிலம் அளிக்கப்பட்ட செய்தியைத் தெரிவிப்பது.

அரசன் சோழ மன்னனான மூன்றும் ராஜராஜனே போலும்.

இதற்கும் மக்கென்ஸியின் பிரதி கிடைக்கவில்லை.

## மடம் Madam

இவ்வூர் வட ஆர்க்காடு ஜில்லா செய்யாறு தாலூகாவில் உள்ளது. இவ்விடத்திலிருந்து பிரதி செய்த சாசனங்கள் முதல் பாகத்தில் வெளியிடப்பட்டுள்ளன.

The place is in the Cheyyār taluk of the North Arcot district. Inscriptions copied from the place have been published in Vol. I above.

சாசனம் — 1212] [No. *3* on p. *62*.

ஊரில் உள்ள திருவக்கிநீச்வரர் கோவிலில் வடக்கு மண்டபத்தின் கிழக்காக அர்த்த மண்டபத்தின் தெற்குச் சுவரில் பொறிக்கப்பட்டிருப்பது. கோவில் இப்போது தடாகபுரீச்வரர் கோவில் என்று வழங்கப்படுகிறது.

---

1. தானம் வழங்கப்பட்ட ஊரின் பெயர் கொமட்டூர் எனவும் இருக்கலாம்.

(No. 232 of 1919). On the west and south walls of the central shrine in the temple of Tiruvagnīśvara, otherwise known as Taṭāka-purīśvara at the place. The record engraved in the Grantha and Tamil scripts in the reign of the Vijayanagara king **Devaraya Maharaya** giving the genealogy of the king from Saṅgama and registering the gift of land to the temple by the king at the request of Aṟamaḷatta-Nachchiyār. This is evidently the copy on stone of the Copper-plate grant said to have been obtained by the lady and her elder sister paying a visit to Dēvarāya-Mahārāya, referred to in another record from the same place. (Vide No. 128 of Vol. I above).

விஜயநகர மன்னனுன வீரப்பிரதாப தேவ [ராய] மகாராயர் ஆட்சிக் காலத்தில் கொடுக்கப்பட்ட சாசனம். அறம் வளர்த்த நாச்சியார் என்னும் தேவரடியாள் குளந்தை ஆண்டார் மடம் என்னும் கிராமத்தைத் திருவக்கிநீசுவர சுவாமிக்கு அளித்து, ஊரின் நான்கெல்லையிலும் சூலத்தாபனம் பண்ணிய செய்தியைத் தெரிவிக்கிறது.

சாசனம் கிரந்தத்திலும் கன்னடத்திலும் எழுதப்பட்டிருப்பதாகச் சாசனப் பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ளது. ஆயினும், சாசன இலாகாவின் அறிக்கையிலிருந்து அது கிரந்தம், தமிழ் ஆகிய இரண்டிலும் பொறிக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. தவிர, அதிலிருந்து பின்வரும் விவரங்களும் அறியப்படுகின்றன. வடமொழிப் பகுதியிலே தானம் அளித்த அரசனுன தேவராய மகாராயனுடைய வம்சாவளி முழுமையும் கொடுக்கப்பட்டுள்ளது. அறம் வளர்த்த நாச்சியார் என்னும் தேவரடியாள் விஜயநகர மன்னனுன தேவராயரை நேரில் பேட்டி கண்டு இக் கோயிலுக்குத் தானம் அளிப்பதற்கான கிராமத்தின் செப்பேட்டைப் பெற்று வந்தாள் என்றும் இக் கோயிலில் உள்ள மற்றொரு சாசனம் கூறுகிறது. அது முதல் பாகம் 128-ஆக வெளியிடப்பட்டுள்ளது. அவள் பெற்றுவந்த செப்பேட்டுச் சாசனத்தைக் கல்லில் வெட்டிய பிரதியே போலும் இது.

## திருக்கோவலூர் Tirukkōvalūr

இவ்வூர் தென் ஆர்க்காடு ஜில்லாவில் உள்ளது. இவ்விடத்திலிருந்து பிரதி செய்த சாசனங்கள் முதல் பாகத்தில் வெளியிடப்பட்டுள்ளன.

The village is in the Tirukkoyilur taluk of the South Arcot district and the inscriptions copied from this place have been given in Vol. I above.

சாசனம் — 1213] [No. 20 on p. 140

திரிவிக்கிரமப் பெருமாள் என்னும் விஷ்ணு கோவிலில் மடைப்பள்ளிக்குச் சமீபம் மண்டபவாசலின் வடபுறம் சுவரில் பொறிக்கப் பட்டிருப்பது.

On the northern wall to the entrance into the maṇḍapa near the cook-room in the Vishṇu temple [known as Trivikrama-Perumāḷ] at the place.

Record dated in the 10th regnal year of the Chōḷa king **Kulottunga Choladeva** registering the following lands for the worship and offerings to God. The gift was placed in the hands of the executive of the temple (*tiruppaṇi puriyum-āḷuḍaiyār* ?]. The details of the land given: 4010 *kuḷi* below S'ittēri, 9200 *kuḷi* to the south of Marukal, 11 *kuḷi* in Kīḷpōgi, 720 *kuḷi*. in Āhunjittaḍi, 320 *kuḷi* in Mākkēyantaḍi as also another 300 *kuḷi* of land.

The copy of this record is not available.

*சோழ மன்னனுன குலோத்துங்க சோழ தேவனுடைய ஆட்சி யின் 10-ஆம் ஆண்டு கொண்ட கல்வெட்டு. எம்பெருமான் பூஜைக்கும் நித்த நிவந்தங்களுக்குமாகப் பின் வரும் நிலத்தைத் திருப்பணி புரியும் ஆளுடையாருக்கு (?) திருக்கோவலூர் ஊரார் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.*

*சித்தேரியின் கீழ் 4010 குழி நிலம், மருகல்லுக்குத் தெற் கில் 9200 குழி நிலம், கீழ் போகியில் 11 குழி நிலம், அஹுஞ்சித் தடியில் 700 குழி நிலம், மாக்கேயன் தடியில் 320 குழி நிலம், இன்னும் 320 குழி நிலம்.*

*இந்தச் சாசனத்துக்கான மக்கென்ஸியின் பிரதி கிடைக்கவில்லை.*

## கீழையூர் Kīḻaiyūr

*தென் ஆர்க்காடு ஜில்லாவில் திருக்கோவலூருக்குப் பக்கத்தில் உள்ளது; கீழூர் என்றும் வழங்கப் பெறும். இவ்விடத்திலிருந்து கிடைத்த சாசனங்கள் முதல் பாகம் 41-54 நெ. ஆக வெளியிடப் பெற்றுள்ளன.*

The place, also known as Kīḻūr is near Tirukkōyilūr in the South Arcot district. Inscriptions copied from this place have been published as Nos. 41-54 in Vol. I above.

### சாசனம் — 1214] [No. 17 on p. 139

*வீரட்டானேசுவரர் கோவிலில் வடவண்டைச் சுற்று மதில் சுவரில் பொறிக்கப்பட்டிருப்பது.*

On the north surrounding wall of the Vīraṭṭānēśvara temple at the place. Record dated in the 10th year of the reign of the Chōḷa

king **Vikrama Choladeva** registering the grant of 2400 *kuḷi* of land in the village Dēvankuḍi by Rājēndrachēdiyarāyan for maintaining 4 lamps in front of god Tiruvīraṭṭanam-uḍaiya-Nāyanār.

The text of the record is not available. A similar record engraved on the base of the north wall in the second prākāra has been published as No. 44 in Vol. I above. It registers the gift by Malaiyamān Nānūṟṟuvan Malaiyan *alias* Rājēndra Chōḷa Chēdiyarāyan of Kiḷiyūr in favour of the *Tiruvuṇṇāḻigai sabhā*. Dēvanguḍi, an old *dēvadāna* village figures, in the boundaries of the gift land. But this seems to be a different one, as the other also is separately mentioned in the *List* as No. 10 on page 136.

சோழ அரசனான விக்கிரம சோழ தேவனுடைய ஆட்சிக் காலத்தின் பத்தாம் ஆண்டில் உடையார் திருவீரட்டானம் உடைய நாயனார் திருமுன்பு நான்கு நுந்தா விளக்கு எரிக்க ராஜேந்திர சேதியராயன் என்பான் தேவன்குடிக் கிராமத்தில் 2400-குழி நிலம் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.

இந்தச் சாசனத்துக்கு மக்கென்ஸியின் உதவியாளர் எடுத்த பிரதி கிடைக்கவில்லை. அதே கோவிலில் இரண்டாம் பிராகாரத்தில் வடபுறம் வச்சிரப்படையில் இதே போன்ற சாசனம் ஒன்று இருக்கிறது. அது முதல் பாகத்தில் 44 நெ. ஆக வெளியாகியுள்ளது. கிளியூர் மலையமான் நானூற்றுவன் மலையனாயின ராஜேந்திர சோழ சேதியராயன், திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ விக்கிரம சோழ தேவனுடைய ஆட்சியின் பத்தாம் ஆண்டு திருக்கோவலூர் உடையார் திருவீரட்டானமுடைய நாயனார்க்கு நான்கு நுந்தா விளக்கு எரிக்க 2400 குழி அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. எனினும், இரண்டும் சாசனப் பட்டியலில் வேறு வேறாகக் கொடுக்கப்பட்டிருப்பதால் இது அதனின்றும் வேறானது போலும்.

**சாசனம் — 1215]** **[No. *18* on p. *139***

அதே இடத்தில் உள்ளது.

At the same place. Record dated in the 2nd regnal year of the Chōḷa king **Rajarajadeva** registering the gift of 3050 *kuḷi* of land (mistake for 3150) in field known as 'Peruda' (Puṟatarukkāl), 850 *kuḷi* of land in the field Durgaiyār-vaṭṭam, 1500 *kuḷi* in the field Paruttik-kollaippāḍu and 1500 *kuḷi* of reclaimed land by Māmbākkiḷān of Dēvankuḍi (in all 7000 *kuḷi*) by Rājarājachēdiyarāyan for the worship and offerings to god Tiruvīraṭṭānam-uḍaiya-Nāyanār.

The text for this also is not available. A similar record engraved on the north wall of the second prākāra in the temple has been published as No. 45 in Vol. I above. It registers the gift

made by Malaiyamān Periya Uḍaiyār Iraiyūran *alias* Rājarāja Chēdiyarāyan of Kiḷiyūr for offerings and the monthly festival on the Tiruvādirai day to the god. But the present record seems to be different one from the above which is given as No. 11 on page 137 of the *List*.

*சோழ அரசனுன ராஜ ராஜ தேவனுடைய ஆட்சியின் இரண்டாம் ஆண்டில் திருவீரட்டானம் உடைய நாயனுர்க்கு அமுதுபடி சாத்துப்படிக்காக ராஜ ராஜ சேதிபராயன் 'புரதா' [புறதருக் கால்] குழி 3050 (3150 என்று இருத்தல் வேண்டும்) துர்க்கை யார் வட்டம் குழி 850, பருத்திக்கொல்லைப் பாடு குழி 1500, தேவன் குடி மாம்பாக்கிழான் திருத்து குழி 1500 (ஆக மொத்தம் குழி ஏழாயிரமும்) அளித்த செய்தியைத் தெரிவிப்பது.*

*இந்தச் சாசனத்துக்கும் மக்கென்ஸியின் பிரதி கிடைக்கவில்லை. இரண்டாம் பிராகாரத்து வடபுறம் சுவரில் பொறிக்கப்பட்டுக் காணும் இதே போன்ற சாசனம் ஒன்று முதல் பாகத்தில் 45 ந. ஆக வெளியிடப் பட்டுள்ளது. கிளியூர் மலையமான் பெரிய உடையான் இரையூரனுன ராச ராச சேதிய ராயன் திருவீரட்டானமுடைய நாயனுர்க்குத் திங்கள் திருநாள் திருவாதிரை எழுந்தருள அமுது படிக்கும் மற்றச் செலவுகளுக்கும் நிலம் விட்ட செய்தியைத் தெரிவிப்பது. எனினும் இரண்டும் சாசனப் பட்டியலில் தனித் தனியே கொடுக்கப்பட்டிருப்பதால் வேருனவை போலும்.*

**சாசனம் — 1216]** [No. *19* on p. *139*

*அதே இடத்தில் உள்ளது.*

At the same place. Record dated in the 40th regnal year of the Chōḷa king **Rajarajadeva** registering the grant by Rājarāja Chēdiyarāyan of the *Perumbāḍikāval* in the village of Madivallān Tirunandavanam for the maintenance of 30 lamps to god Tiru-vīraṭṭānam-uḍaiya-Nāyanār.

A similar record from the north wall of the second prākāra of the temple has been published as No. 43 in Vol. I above. It registers the gift in the 4th year in the reign of the Chōḷa king Tribhuvanachakravartin **Rajadhirajadeva** (II) by Malaiyamān Periya Uḍaiyān Iraiyūran *alias* Rājarāja Chēdiyarāyan of Kiḷiyūr of the *perumbāḍi-kāval* right and tax-free gift of 1½ *vēli* of land in Madivallān Tirunandavanam for the maintenance of 30 twilight lamps to burn upto the time of *ardhajāma-pūja* before the god Tiruvīraṭṭanām-uḍaiyār at Tirukkōvalūr. This has been given separately a No. 12 on page 137 of the *List*. As such, the present one seems to be a different record.

சோழ அரசனுன ராஜ ராஜ தேவனுடைய ஆட்சியின் நாற் பதாம் ஆண்டில் திருவீரட்டானமுடைய நாயனுர்க்கு முப்பது விளக்கு எரிக்க ராஜ ராஜ சேதியராயன் மதிவல்லான் திருநந்த வனத்தில் பெரும்பாடி காவல் அளித்த செய்தியைத் தெரி விப்பது.

இரண்டாம் பிராகாரம் வடபுறச் சுவரில் இதே போன்ற சாசனம் ஒன்று இருக்கிறது. அது முதல் பாகத்தில் 46 நெ. ஆக வெளியிடப்பட்டுள்ளது. திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ ராஜாதி ராஜ தேவருடைய ஆட்சியின் நான் காம் ஆண்டில் திருவீரட்டானமுடைய நாயனுர்க்குச் சந்தி விளக்கு முப்பது திருவர்த்தசாமம் அறுதியாக எரிக்கக் கிளியூர் மலையமான் பெரிய உடையார் இரையூரனுன ராஜ ராஜ சேதியராயன் மதிவல்லான் திருநந்தவனத்து ஒன்றரைவேலிக் கரையில் பெரும்பாடி காவலும் இறை மற்றுமுள்ள ஆயங் களும் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.

சாசனப் பட்டியலில் இரண்டும் தனித் தனியே கொடுக்கப்பட்டிருப்ப தால் இவை வேறு வேருனவை போலும்.

## அரகண்டநல்லூர் — Aragaṇḍanallūr

இது தென் ஆர்க்காடு ஜில்லா திருக்கோவலூர் தாலுகாவில் உள்ளது. இவ்விடத்திலிருந்து பிரதி செய்யப்பட்ட சாசனங்கள் முதல் பாகத்தில் 33-40 எண்களாக வெளியிடப்பட்டுள்ளன.

The village is included in the Tirukkōyilūr taluk of the South Arcot district. The inscriptions copied from this place have been published as Nos. 33-40 in Vol. I above.

**சாசனம் — 1217]** **[No. 31 on p. 143**

ஒப்பிலாமணீசுவரர் கோவிலில் தேவியான ஸௌந்தர்ய கநகாம்பிகை அம்மன் ஆலயத்தின் அர்த்த மண்டபத்தில் வடபுறச் சுவரில் பொறிக்கப்பட் டிருப்பது.

On the north side of the ardha-maṇḍapa in front of the shrine of Saundarya-kanakāmbikā in the temple of Oppillāmaṇīśvara. Record registering the grant of the village Śembiyan-mahādēvi by Ra[jā*]rā[ja*] Śī-pālan for meeting the expenses of the worship and offerings to god Nāyanār.

The text of this record is not available. A similar record engraved on the base of the south wall of the mahāmaṇḍapa in front of the central shrine of Oppilāmaṇīśvara has been published as No. 34 above. It registers the gift, in the 3rd year in the reign of Tribhu-

vanachakravartin **Kopperunjingadeva**, of the village S'embiyan-mādēvi, by Chōḷa-tungap-pallavaraiyan Śrīpāla-dēvan Marutāndāḷ-vār *alias* Rājarāja śrīpālan. But the present one seems to be different from the other which is also given reparately in the *List*.

*நாயனூர் அமுதுபடி சாத்துப்படி உள்ளிட்ட நித்த நிவந்தங்களுக்காகச் செம்பியன் மாதேவி என்னும் கிராமத்தை ரா[ஜ*] ரா[ஜ*] சீ பாலன் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.*

*இந்தச் சாசனத்தின் பிரதியும் கிடைக்கவில்லை. இதே போன்ற சாசனம் ஒன்று ஒப்பிலாமணீஸ்வரர் கோயில் கர்ப்பகிருகத்துத் தென்புறம் மகாமண்டபத்தின் தென்புறம் வச்சிரப்படையில் பொறிக்கப்பட்டிருப்பது முதல் பாகத்தில் 34-வெ. சாசனமாக வெளியிடப்பட்டுள்ளது. திரிபுவன சக்கரவர்த்தி* கோப் பெருஞ் சிங்கன் *ஆட்சி காலத்தின் மூன்றும் ஆண்டு கொண்ட அது சோழ துங்கப் பல்லவரையன் ஸ்ரீபாலதேவன் மருதாந்தாழ்வாரான ராஜ ராஜ ஸ்ரீபாலன் என்பான் செம்பியன்மாதேவி கிராமத்தை அளித்ததைத் தெரிவிப்பது. எனினும், மக்கென்ஸியின்* சாசனப் பட்டி*யலில் இவ்விரண்டும் வேறு வேறாகக் கொடுக்கப்பட்டுள்ளன.*

ஈரோடு Īrōḍu, [Erode]

சாசனம் —1218] [No. *1* on p. *86*

*மக்கென்ஸியின் உதவியாளர் இந்தச் சாசனத்துக்கு எடுத்த பிரதி காணவில்லை.* ஆயினும் சாசனப் பட்டியலில் இது *கொடுக்கப்பட்டுள்ளது. அதிலே இது 'ஈரோடு கிராமம் மசகூர் மாசதியில் ஒரு கல்லில் காண்பது' என்று குறிக்கப்பட்டிருக்கிறது.*

The transcipt of the record made by the assistants of Col· Mackenzie is not available. But in the *List of Inscriptions from the Southern Districts*, it is noted as found, 'on a stone at Masedi at Masakkoor in Erodu village.'

Record dated in Śaka 1683, Vijaya, in the reign of **Krishnaraja Odaiyar**, evidently the Mysore chief, registering the grant of 4 *mā* of land in Vayirippāḷayam village by 'Shanpaka charoovacairum (Shaṇbaga Seruvaikkāran?) etc., people for the charity.

[*மைசூர் அரசனோ?*] கிருஷ்ணராஜ ஒடையர் *ஆட்சிக் காலத்தில் சக 1683 விஜய ஆண்டு கொண்ட சாசனம். செண்பக* சேர்வைக்காரர் (?) முதலியவர்கள் வயிரிப் பாளயம் கிராமத்தில் நான்கு மா நிலம் தருமத்துக்கு அளித்த செய்தியைத்தெரிவிப்பது

சாசனம் — 1219] [No. *12* on p. *90*

*ஈரோடு தொண்டீச்வரர் கோவில் முன் மண்டபத்தின் கீழ்ப்புறம் உள்ளது.*

On the east of the maṇḍapa in front of the central shrine in the temple of Toṇḍīs'vara at the place. Record, the date of which is not given, registering the grant of a portion of land by Ādiyappa Gāvuṇḍar to god Toṇḍīśvara.

The text of this record is not available. But this seems to be the latter portion of the inscription No. 240 in Vol. I above, which is found given as the previous item (No. 11 on p. 90) in the *List of Inscriptions* and wrongly taken as separate record.

*தொண்டீச்வரர் சுவாமிக்கு ஆதியப்ப கவுண்டர் நிலம் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.*

*இந்தச் சாசனத்துக்கும் மக்கென்ஸியின் பிரதி கிடைக்கவில்லை. முதல் பாகத்தில் 240 நெ. ஆகக் கொடுக்கப்பட்டுள்ள சாசனத்தின் பிற்பகுதியே தனியாக எண்ணிடப்பட்டுச்* சாசனப் பட்டியலில் *கொடுக்கப்பட்டிருக்கிறது போலும்.*

பாளையங்கோட்டை Pāḷaiyaṅkōṭṭai

*இவ்வூர் எவ்விடம் இருக்கிறதென்று தெரியவில்லை. இவ்விடத்திலிருந்து கிடைத்த சாசனங்களின் பிரதி கிடைக்கவில்லை.* சாசனப் பட்டியலில் *இது* கோல்லூருர்ப் *பகுதியில் இருப்பதாகக் குறிக்கப்பட்டுள்ளது. அது எது என்பது விளக்கவில்லை. எனினும் இது மதுரை நாய்க்க மன்னர்கள் ஆட்சிக்கு உட்பட்டிருந்த பிரதேசத்தில் அடங்கியிருத்தல் வேண்டுமென்று தோன்றுகிறது. திருநெல்வேலி ஜில்லாவாக இருக்கலாம்.*

It is not clear which is the intended village, as there are more than one village of the same name in the Tamil-naḍu. The *List of Inscriptions from the Southern Districts* gives it under the heading 'Collooroor' tract. It should lie in the region which was included under the rule of the Nāyaka kings of Madurai, probably in the Tiurnelvēli district.

சாசனம் — 1220] [No. *2* on p. *190*

*ஊரிலே ராமஸ்வாமி கோவிலில் உள்ள ஓலைச் சாசனத்துக்குப் பிரதி.*

Copy of a Palm-leaf document in the temple of Rāmasvāmin at the place. Record dated in Śaka 1532, Īśvara in the reign of the Vijayanagara king **Sadasivadeva Maharaya** registering the gift of four *mā* of land in Rājavallipuram for worship and offerings to the

god Teppakkuḷam Rāmabhadrasvāmin by **Visvanatha Nayaka-Tirumalai Nayaka**, evidently the Nāyaka ruler of Madurai.

The succeeding record also is similar.

[Vide the inscription below].

*விஜயநகர மன்னனான சதாசிவதேவ மகாராயர் ஆட்சிக் காலத்தில் சகாப்தம் 1532, ஈச்வர வருஷம் மதுரை நாயக்க மன்னனான விசுவநாத நாய்க்கர் திருமலை நாய்க்கர் தெப்பக்குளம் ராமபத்ர சுவாமிகளின் பூஜை நைவேத்தியம் முதலிய நித்த நிவந்தங்களுக்காக ராஜவல்லிபுரம் கிராமத்தில் நான்கு மா நிலம் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.*

*இதே போன்ற சாசனம் வேறு ஒன்றும் அவ்விடம் காணப்படுகிறது. அது வேறானது போலும்.*

[*பின்வரும் சாசனத்தைப் பார்க்க.*]

சாசனம் — 1221] [No. *3* on p. *191*

*அதே கோவிலில் உள்ள மற்றோர் ஓலைச் சாசனப் பிரதி.*

Copy of another Palm-leaf document in the same temple. Record dated in the same year, *i. e.*, S'aka 1532, Īśvara in the reign of the Madurai Nāyaka ruler **Visvanatha Nayaka-Tirumalai Nayaka** registering the gift of four *mā* of land in Rājavallipuram for the worship and offerings to god Teppakkuḷam Rāmabhadrasvāmin.

There is also another record similar to this in the temple. [Vide the previous number]. Probably the previous inscription registers the order of the paramount power Vijayanagara ruler and the present one by the local chief.

The copies of the assistants of Col. Mackenzie for both these records are not available.

*மதுரை நாய்க்க மன்னனான விச்வநாத நாய்க்கர் திருமலை நாய்க்கர் ஆட்சிக்காலத்தில் சகாப்தம் 1532, ஈச்வர ஆண்டு தெப்பக்குளம் ராமபத்ர சுவாமியின் பூஜை நைவேத்தியம் முதலிய நித்த நிவந்தங்களுக்காக ராஜவல்லிபுரத்தில் நான்கு மா நிலம் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.*

*இது மேலே உள்ள சாசனத்தையே போன்றது. ஆயினும் சாசனப் பட்டியலில் தனியாகக் கொடுக்கப்பட்டிருப்பதால் இது வேறானது போலும். முதலில் கொடுக்கப்பட்டது விஜயநகர அரசன் உத்தரவும், பின்னதாக உள்ளது மதுரை நாயக்க மன்னன் உத்தரவுமாக இருக்கலாம். இவற்றுக்கு மக்கென்ஸியின் உதவியாளர்கள் எடுத்த பிரதி கிடைக்கவில்லை.*

## பழையகோட்டை — Paḻaiyakōṭṭai

கோயம்புத்தூர் ஜில்லா தாராபுரம் தாலூகாவைச் சேர்ந்தது இவ்வூர்.

The place is included in the Dhārāpuram taluk of the Coimbatore District.

சாசனம் — 1223] [D. 2949-7

*'தாராபுரம் காங்கயம் தாலூகாவுக்குச் சேர்ந்த மவுசே பளையகோட்டையிலே இருக்கும் நல்ல சேனாபதி சர்க்கரை உத்தமக் காமின்ற மன்றாடியார் வசம் இருக்கப்பட்ட தாமர சாசனத்துக்கு நகல்' என்று மக்கென்ஸியின் பிரதியில் குறிக்கப்பட்டிருக்கிறது.*[1]

Copper-plate grant, then in the possession of Nalla Sēnāpati Uttamak-kāmiṇḍa Manṟāḍiyār of Paḻaiyakōṭṭai.

The record states the circumstances under which the Kāraiyūr tract was bestowed as an *umbaḻige* on Aḻagan Uttamakkāmiṇḍan for his valour. It begins with the usual Tamil *praśasti* of high sounding titles of post-Vijayanagara period introducing the *Ummattūr* chief **Virupaksha Odaiyar** as the representative of the Vijaynagara rulers in charge of the Koṅgu-maṇḍalam and Nañjaya Oḍayar as the agent of Virūpāksha Oḍayar. It is stated that Nañjaya Oḍayar assumed his charge in Rādhāpuram, making his State-entry on a Monday, in Kali 4344, Krōdhin, Arppisi, 10, Śu. daśami, Rēvati. In his regime, a certain Koṅgarāyan of Tennilai came to Māndapuram on a certain Thursday in the cyclic year Parābhava, Ani 7, Makhā and chaturthi and captured and drove away the cattle killing the persons who came to its rescue. Thereupon the aggrieved persons along with the representatives of the four *nāḍus* went to Rādhāpuram and represented the matter to Nañjaya Oḍayar.

Nañjaya Oḍayar treated them to a feast and told them that he would bestow the head-ship of the twenty-four *nāḍus* together an *umbaḻige* on the person who brought him the head of Koṅgarāyan. Then the assembly told the chief that Aḻagan Uttamak-kāmiṇḍan of Kāraiyūr was the only person who could perform the feat. There-

---

1. இந்தச் சாசனத்துக்கு D. 3370 எண் உள்ள பிரதி ஒன்றும் இருக்கிறது. அதுவே மூலம் போலும்.

upon Nañjaya Oḍayar issued the orders granting the *umbaḷige* village and *kāṇiyāṭchi* right on the Kāraiyūr tract with the title of of '*Paṭṭakkārar* of the twenty-four *nāḍus*' on Aḷagan Uttamak-kāmiṇ-ḍan [in advance even before the donee took any action]. Aḷagan on receipt of the charter went to Vijayanagara and brought with him two persons Pachchaiya Paṇikan and Vēla Paṇikan together with their retinues of one hundred persons for each, promising them various gifts, monetary benefits and social rights. On return to the Koṅgu country, he invited the leaders of the 12 villages of the Kāṅgayanāḍu, took counsel in a single night and reached the fort of Tennilai on a Friday coupled with Śu. trayōdaśi and Mriga-śīrsha in the year Naḷa. They made holes in the walls to enter the fort. The wall sank closing the hole and killing those engaged in the task. The assailants, not discouraged with the loss, pursued in their work, effected an entry into the fort and finally killed Koṅgarāyan. They collected the head of Koṅgarāyan and three *marakkāls* (measures) of *tāli*, (i.e., *māṅgalya sūtra*) of the wives of persons killed there and started on their return journey to the court of Nañjaya Oḍayar. The three wives of Koṅgarāyan blocked their way and wanted permission to perform *sati* which was given. The image of *Piḷḷaiyār* (Gaṇēśa) which was also being carried away by the assailants as a booty refused to move when they reached a place to the west of Muttāru. They left the image there and finally reaching the presence of Nañjaya Oḍayar offered him the head of Koṅgarāyan brought by them as undertaken, together with the other booty obtained. Nañjaya Oḍayar was highly pleased with Uttamak-kāmiṇḍan and honoured him profusely and sent him back to Kāraiyūr in a State-procession.

சுவஸ்தி [||*] ஸ்ரீமன் மகா மண்டலெசுபறன் அரியருய விபாடன் பா[ெ*]ஷெக்கு தப்புவருய கண்டன் கண்ட நாடு கொண்டு கொண்ட னாடு கு(டுத்)[டா]தான் மூவ(றி)ருய கண்டன் கட்டாரி(ச்) சாளுவ மீசுவர கண்டன் துஷ்ட னிக்ரக சிஷ்ட பரிபாலன யெம்மண்டலமும் யீளமும் இலங்கா புரியும் தெரி கொண்டருளிய[1] ராசாதி ராசா ராச பறமெசுவறன் ராசாமார்த் தாண்டன், ராச வல்லபன், ராச புங்கவன், ராச செகரன், ராச

---

1. ' திறைகொண்டருளிய ' என்று வாசிக்க.

நவநீத[1] நாராயணன், துலுக்க தளவிபாடன் துலுக்க[ர்*] மொக[ர]ன் தவிர்[த்*]தான் இறணதுபருமன் துஷ்ட நிஷ்டுர கொட்ட கொலாகலன் மதியாத மன்னன் மகுட்டஞ் செதரி மதி சூரை கொளும் பறசு ராமன் அசுவபதி கெசபதி நரபதி நவ கொட்டி நாராயணன் அங்க வங்க களிங்க கெரளற் மதற மருடற் மறவற் துலுக்கற் கவுடற் மத்தகற் கொசலற் அவுணற் மளுவற் மலயாளற் கொங்கற் கம்பனற் குருதற் குஞ்சற கொந்த ளற் ஒண்டியற் தெலுங்கற் தொளுவற் துலுக்கற் சவுராஷ்டி ர[ர்*] மராட்டியற் மிக்காற் கொசலற் ஆரியற் பப்பற் கன்ன டற் சொனகற் சீனகற் மனயாளகற் மலெதெவி விபாடற் மத் தக் குடொறி பதினெட்டு கொட்டத்து மன்னியற் கண்டன் நவ னிதி பொடசூளாகிய பூலொக புரந்தரன் உத்தர தக்ஷிண பூற்வ பச்சம சப்த்த சமுத்திராதிபதி வீர தீர செற சொள பாண் டிய வல்லாளற் பயம்கற தெவருயற் வீரமதராயற் மல்லி கார்ச்சுனருயற் விறுபாக்ஷி புசபலருயற் வல்லாள ருயற் பிறவுட தெவருயற் நாளையில் ஊமத்தூர் விருபாக்ஷீ ஒடயர் அவற்களுக்கு கொங்கு மண்டலத்தில் நரயூரு நாடு இருதாபுரம் சீமை அறு வத்தி நாற்(க்)காத வட்டகையும் நாற்(ப்)பத்தி யெண்ணுயிரம் ஊரும் வனிதி சுத்தமாக கட்டளை யிட்டபடியினுலெ: விருபாக்ஷி ஒடயறவரவர்கள் காரியத்துக்கு கற்த்தரான நஞ்சய ஒடையறவர் கள் இராதாபுரத்தில் யெளுந்தருளினது. கலியுக சகாப்த்தம் ௪௲௫௱௪௰௪-க்கு[2] மெல் செல்லா நின்ற குரொதி ஹு அற்ப் பிசை மீ ௰ ௨ தி ரெவதி நக்ஷத்திரமும் பூற்வ பக்ஷத்து தெசமி யும் பெற்ற சொமவார நாள் யெழுந்தருளி பட்டணப் பிரவெசம் வந்து ஒதி ஒணர்ந்து ஒலகமுளுதான்று மும்மூர்த்தியும் முத்தமிழ் விநொதன் சறிபுட தாங்கும் தான விநொதன் ஆளிக்குச் சந்திரன் மறத்தத்துக்கு மன்னிச் சொல்லினில் தற்மமன், தொளினில் பீமன், வில்லுனில் விசயன், வாளினில் அபிமன், பரிதனில் நகு லன், கறிதன்னிலுதயன், புகுழினில் பொஜன், பொகத்தில் இந்தி ரன், செவித்தில் வராஹி, நடுவினிலெமன், தைரியத்தில் நிறுதி, தனத்தில் குபெரன், அறிவுக்கு அகஸ்தியன் யென புகழ் படைத்து இனிய சொல்லால் இனிதளித்து வன் சொல்லால்

---

1. ‘நவநிதி’ என வாசிக்க.

2. இந்தச் சாசனத்தின் மற்றைப் பிரதியில் இந்தக் கலி வருஷம் ‘௪௲௫௱௪௰௪’ என்றும் காணப்படுகிறது.

மரம் கடைந்து அளுகும் கொளவி காம்பொடைய தாய் பொல் அனைத்துயிர்களுக்கும் இனி தெனலகிசத்துக் குண நாங்கும் வள்ளுவருரைத்த(ா)முப்பால் முளியும் படிய்யெ அறிவெ அறிந்து அல்லவ கடந்து நல்லவ நாட்டி ஆ றி வெ லா ன் று கடமை கொண்டு செங்கொல் நீதி வழுவாமல் நடந்து[1] கொண்டு வருகிற நாளையில் மணலூற் நாட்டில் தென்னிலையில் வெங்கச்சி வெட்டுவறில் கொங்கராயன் தெங்கரை நாடு, காங்கய நாடு, பூந்துறை னுடு, அரய னுடு யிந்த நாலு நாட்டிலெயும் சவள காணிக்கை வர வெணுமென்று னிற்றச் சில்லறை பண்ணின படியினுலெயும்: பருபவ ஸு ஆனி மீ எஉ மகா நக்ஷத்திரம் சதுற்த்தியும் பெற்ற வியாழக் கிழமை நாள் கொங்குருயன் வந்து மாந்தபுரத்திலெ வெட்டிக் குத்திச் சில்லறை பண்ணி ஆடு மாடு பிடிச்சுக் கொண்டு பொனபடியினுலெ அப்பொது வள்ளியறச்சல் புல்லறில் தொண்டமா[ன்*] மன்னுடி மகன் மாந்தக் கவுண்டனும் ஷெிபூரில் காவல்ப் பெறிய தம்பிக் கவுண்டன் மகன் பெறியணனும் காறையூற் மணியரில் ருவுத்த கவுண்டன் மகன் வாரணவாசி கவுண்டனும் யிவர்கள் மூன்று பெரும் சிறுந்து முக்கையும் கூட்டிக்கொண்டு தாரையின் பெறிலெ தொடர்ந்து பொய் மொஞ்சனூர் குளத்துவழியிலெ யிந்த மூன்று பெரும் பட்டார்கள்.

---

1. இந்தப் பகுதி பிற்காலச் சாசனங்கள் பலவற்றில் காணப்படுகிறது. இதன் திருத்தமான வடிவம்:

ஓதி உணர்ந்து உலகமுழுதாண்டு
மும்மூர்த்தியும் முத்தமிழ் விநோதன்
சரிபுடதாங்கும் தானவிநோதன்
ஆளிக்குச் சந்திரன் அர்த்தத்துக்கு மன்னி
சொல்லினில் தருமன் தோளினில் பீமன்
வில்லினில்விசயன் வாளினில் அபிமன்
பரிதனில் நகுலன் கரிதனில் உதயன்
புகழினில் போஜன் போகத்தில் இந்திரன்
சேவகத்தில் வராஹி நடுவினில் எமன்
தைரியத்தில் நிருதி தனத்தில் குபேரன்
அறிவுக்கு அகஸ்தியன் எனப் புகழ்பெற்று
இன் சொலால் இனிதளித்து
வன் சொலால் மறங் கடிந்து
அழும் குழவிக்கு அன்புடைய தாய்போல்
அனைத் துயிர்களுக்கு இனிதென

அப்பொது யிந்த நாலு நாட்டனவரும் றத்தக் குறியும் கொண்டு இராதாபுரத்துக்குப் பொயி நஞ்சய ஒடையாறவர்கள் சமுகத்திலெ பசுங்குளை பொட்டு அட்டம் விளுந்து மொறை யிட்ட படியினாலெ அப்பொது நஞ்சய ஒடையாரவற்கள் நாட[்டை*]னவர்க்கும் விரும்ந்திட்டு பொகுமானங்கள் பண்ணிவச்சுக் கொண்டு தென்னிலேயும் கொங்கருயன் தலையும் வெட்டிக்கொண்டு வந்து வைத்தவர்களுக்கு உம்பளிக்கை கிராமமும் கட்டளை யிட்டு யிருவத்தினாலு நாட்டுக்கும் முதன்மையாக நடப்பிவிக்கிரொமென்றும் அரமனையாற் சொன்னபடியினாலே:

அப்பொது நாட்டனவரும் கூடிக் கொங்கருயன் பெறிலெ காரியம் சாதிக்குறத்துக்கு காரையூற் அளகன் உத்தம காமிண்டனெ அல்லாமல் மற்றவர்(க்) கையிலெ ஆகாது யென்று நாடனவரும் அரமனையிலெ சொன்னபடியினாலெ: அப்பொது நஞ்சய ஒடையரவற்கள் நம்மை அனுப்பிவிச்சு கொங்கருயன் காரியம் மட்டுப் படுத்தினதெயானால் காரையூரிலெ மணிய வெள்ளாள மொத[ன்*]மை காச வெட்டுவ[ர்*] [மொ]தமை செட்டியள் மொதமை யிந்த மூணு மொதமையும் கூட்டி ஒனக்கெ க[ார*]ரயூற் வளிதி சுத்தமாக ஒரு முகனெயாக கட்டளை யிட்டொம் யென்றும் உம்பளிக்கை கிறாமம் கொடுமணங் கட்டளையிட்டொமென்றும் வாறத்தெப்பாடாக நம்மட கர்த்தாக்கள் விரூபாக்ஷி ஒடையர் அய்யன் அவர்கள் பாத[த்*]தாணெயெ நம்முடைய குருக்களய்யன் பாத[த்*]தாணெயெ இந்தப்படிக்கு தப்பாது யென்று சொல்லி ஊமதத்தூரு விரூபாட்சீ ஒடைய[ர*]ரய்யனவர்கள் நஞ்சய ஒடையாரய்யனவர்கள் காங்கய னுடு பயாகுல வெள்ளாளரில் சொமனுத்தமக் காமிண்டனுக்குக் காரையூற் வளதி சுத்த

---

உலகத்துக்கு உரை நான்கும்
வள்ளுவர் உரைத்த முப்பால்
மொழியும்படியே அறவே அறிந்து
அல்லவ கடிந்து நல்லவ நாட்டி
ஆறிலொன்று கடமை கொண்டு
செங்கோல் நீதி வழுவாமல் நடந்து

சில இடங்களில் சிற்சில தொடர்களே காணப்படும். எனினும், இது மிகவும் நீண்ட செய்யுள் வடிவமாக அமைந்திருக்கவேண்டும் என்று தோன்றுகிறது.

மாக நாற்பாங்கு யெல்லைக்கும் காணியாக்ஷி பட்டயம் குடுத்த யெல்லைக்கு விபரம்: காரையூருக்குக் கிளக்கு முத்தாறுக்கு மெற்கு யெல்லை குளிப்பு களுமடை கொம்பு இதின் தெற்கு ஞெச்சிப்பள்ளம் காரையூருக்கு தெற்க்கு வள்ளியிறச்சிலுங்கு வடக்கு அடைப்பாளிக் காடு இதின் மெற்க்கு மறம்பாளி இதின் மெற்க்கு வீர சொள புரத்து முக்கிட்டெறி காரையூருக்கு தென் மெற்க்கு பாறப்பளிக்கு வடகிளக்கு கிருவம்பாளி(க்கு) மடவளா கத்துக்கு வடக்கு சக்கையடிச்சான் பாரை யிதின் மெற்க்கு ஓறத் தப் பள்ளம் காரையூருக்கு மெற்க்கு பறம்ஞ்செற் வள்ளிக்கு கிளக்கு வெங்கால்லு மெடு இதின் வடக்கு குட்டரைபாரை காரையூருக்கும் வடமெற்க்கு மறுதுரைக்கு தெற்க்கு கறும்காடு இதின் கிளக்கு நொ[ய்*]யிலுக்கு பொர பெறுமாத்துப் பள்ளம் இதின் வடக்கு சொக்கநாதன் சாரகு யிதின் வடக்கு கருமன் கிணறு காரையூருக்கு வடக்கு பூந்தளிற் நாடு அரிச்சலூருக்கு வளிஞ்சியும் குளம் யிதின் கிளக்கு பொறசல் மெடு யிதின் கிளக்கு நெடும் சாத்துகளும் தெவன் குதிச்சக் கல்வெட்டுக்கு யிதின் கிளக்கு யெலவநத்ததுக்கு தெற்க்கு காரை மெடு காரை யூருக்கு வடகிளக்கு மூலை அரைய நாடு கொல்லன் கொவிலுக்கு மெற்க்குக் கொடுவான் தீட்டிப் பாரை யிதின் தெற்க்கு முதல்ப் பாளி யிதின் தெற்க்கு நொ[ய்*]யிலாத்துக்கு வடக்கு மெட்டுப் பாரை யிந்தப்படிக் காரையூற் நாற்ப்பாங்கு யெல்லையும் கொடு மணலு[ம்*] வும்பளிக்கை கிராமமாகவும் யிருவத்தினுலு நாட் டுக்கும் பட்டக்காரனுக வரிசையும் பெற்று நடந்துகொண்டு வரு வாயாகவும். யிப்படி சம்மதிச்சு அளகனுத்தமக் காமண்டனுக் குக் காணியாக்ஷிப் பட்டயம் குடுத்தெோம். யிதற்க்கு சாக்ஷி தெவ கரைனுடு வெண ஓடயாகவுற[1] புங்கலிக்கை னுடு அங்கிதொளு அவனுசிக்காறற் குன்றடம் வடுகப்பக்காறற் வராகா னுடு துடிய ஊற் சின்னப்பக்காறற் ஆர னுடு சொளியாண்டாக்காறற் குறுப்ப னுடு விசய மங்கலம் வெட்டுவறில் விசயக்காறற் காஞ்சி கொவில் னுடு காளிங்கருயக்காறற் வடகர னுடு அந்தியூற் பொன் னளக்காறற் பூந்துரை விசுவனுதக்காறற் வெள்ளாடு சின்னப்பக் காறற் நசியனூர் காசிலிங்கக்காறற் யெளுமாத்தூர் நல்லப் பெறி யாக்காறற் அரய நாடு வெங்கம்பூற் குட்டக்காறற் அஞ்சியூற்

---

1. 'காவுண்டர்' என்பதே இவ்விதம் 'கவுற்' என்றும் பின்னல் 'காறற்' என்றும் எழுதப்பட்டிருக்கிறது. இப்போது கவுண்டர் என்று வழங்குவதன் மூல வடிவம் போலும்.

காங்கயக்காறற் மொறஞ்சனூர் குடிமியாக்காறற் காறுவளி வெளு வெட்டு மூத்தரைக்காறற் காங்கய நாட்டில் காங்கயம் பல்லவருயக்காறற் வளியாசலும் தொறைமான்ருடி காடயூற் களுவன் காங்கய மண்ணுடியாற் பட்டாலி காலில் பெறிய சிதம் பறக்காறற் கீறனூற் குடிமி வெட்டுவற் செம்பருயன் மறுதுரை விளுப்பிருயன் பாறப[த்*]தி செனுபதி செட்டி பறஞ்செற் பள்ளி காலில் செனுபதி கண்ணபுரத்து செட்டி பட்டக்காறற் அற்த்தனுறி வெள்ளை கொவில் காலில் வீர பெருமாள் முத்தூரு திருவம்பலத்தக் காறற் அனவரையும் சாக்ஷி வைச்சு யிந்தப்படி காணியாக்ஷி அனுபவிச்சுக்கொண்டு சுகத்திலெ யிருக்கிறுற். யிந் தப் பட்டயம் யெளுதின ந[ன்*]ம்மைக்கு இராதாபுரத்து (ஷ்த லது) [ஸ்தலத்து] சம்பிறிதி சவுண்டசையன் கையெளுத்து.

இந்த(ற்)பட்டயம் வாங்கிக் கட்டிக்கொண்டு கொங்கருயன் பெறில் காரியம் சாதிக்கத் தக்கதாக அளக னுத்தம காமிண்டன் விசய நகரத்துக்குப் பொயி அவடத்து களனப் பறயறில் பச்சயா பணிகன் வெலப்பணிகன் இவர்கள் ரெண்டு குறிக்காரரையும் கண்டு நீங்கள் கொங்க னுட்டுக்கு வந்தால் யெங்களுடைய ஆதீ னத்திலெ வெகுமானமாயி வயித்து யிருக்குமெரும் மென்று அந்த தெசத்திலெ யிட்ட களவும் நடந்த சில்லரையும் ஒன்னெடெ யென்று யிதிலெ செதப்பட்டதெ யானுல் அந்தப் பணிகனெ வாங்கிக் குடுக்குரெனென்றும் ஆண்பிள்ளைப் புரந்தால் நானெ பரியமிட்டுப் பெண் கொண்டு கொடுக்குரெும் யென்றும் அடக் கின பாக்கும் பிடிச்ச வெத்திலை ஓடனெ நாயநவர்கள் சமுகத் திலெ நடந்தபடிக்கு நாமும் நாமும் நடத்திவருகுரொம் யென் றும் ஆயுதம் பொட்டுக் கடந்து குடுத்து செயும் கொ. ஷெி சுவற்[1] பெறிலெயும் ஆணையிட்டு காணியாக்ஷி குடுத்தொமென் றும் விசய நகரத்திலெ துற்க்கா பரமீசுவறி சன்னதியிலெ சத்தி யம் பண்ணிக் குடுத்து பச்சயா பணிகனையும் வெலப்பணிகனை யும் அவர்களுடனெ செந்த யெனத்தாரிலெ நூறு பெர் செவுக ரையும் கூட்டிக் கொண்டு ஊரெ வந்து அன்னெரமெ காங்கய னுடு காங்கய னுடு பனிரெண்டு கிறமத்துக்கு ஆள் அனுப்பிவிச்சு யெக ராத்திரியிலெ கூட்டமிட்டு நள ஸூ............மிறக சீரிஷ நக்ஷத்திரத்தில் பூற்வ பக்ஷத்து தெரயொதசியும் பெற்ற சுக்கிர வாரம் நாள் தென்னிலைக் கொட்டை செற்ந்து கன்னப் பறய

---

1. 'செயங்கொண்டீசுவரர்' என்று இருத்தல் வேண்டும்.

ரைக் கொண்டு கொட்டையைக் கன்னம் பிடிவித்து அந்து சொறங்கம் யிடிந்து கொட்டை விளுந்து சொறங்கத்துக் கன்னப் பறயன் வெல்லன் தம்பபி சின்ன வெலனும் பச்சயான் மறுமகன் காளியும் அவர்கள் பந்து செனங்களிலெ குமாரன் சூரன் திறு மானவரித்தான பெறுமாள் வெள்ளையன் சசங்கனும் நல்ல கட்டி இத்தினெ பெறும் கன்ன வாசலிலெ கொட்டை விளுந்து செத்தார்கள். அப்படி யிருந்தும் ஒடனெ கொட்டை புகுந்து கொட்டை துளியிட்டு தென்னிலெ கொங்கயறுயனெ தலையும் வெட்டிக்கொண்டு முக்குறுணி தாலியும் அறுத்துக்கொண்டு வரு குற சமயத்துலெ கொங்கயறுயன் பெண்[டு]கள் மூன்று பெரும் வந்து அளகனுத்தம காமிண்டனெ மறிச்சுக்கொண்டு யெங்களை சாகவரம் குடுத்து பொகவென்று விரமாஷதிகளாக வந்து சொன்னபடியினாலெ அவர்களையும் ஒடனெ சாக செயிவிச்சு மற்றுநாள் முக்குறுணி தாலியும் கொண்டு கொங்கராயன் தலையும் யெடுத்துக்கொண்டு தென்னிலெ வாளரைசுபி பிள்ளையாரையும்[1] மல... .... யில் யெத்துக்கொண்டு காரையூருக்குப் பொகையில் முத்தாறுக்கு மெற்க்கு காரையூருக்கு கிளக்கு அங்கெயிருந்து வரமாட்டொமென்று படியினாலெ பிள்ளையாரையும் அங்கே வச்சு பொட்டு[2] ஒடனெ காரையூரிலெ வந்து செறந்தார்கள். மற்றுநாள் நாடனவரையும் கூட்டிக்கொண்டு கொங்கறுயன் தலையும் கொண்டு இறுதாபுரமெ பொயி நஞ்சய ஒடயறவர்கள் சமுகத்திலெ கொங்கயறுயன் தலையையும் வைஇத்தார்கள். அ[ப்*]பொது நஞ்சய ஒடயாறவர்கள் அளகனுத்தம காமிண்டனுக்கு தாளி சவுக்களி குஞ்சரம் காளாஞ்சி கபாலெ குல்லா இதுவெல்லாம் குடுத்து பல்லக்குமிட்டு பட்டணப் பிரவெசமும் வந்து நாலு னாள் இறுதாபுரத்திலெ நின்று பல்லக்கு வரிசை ஒடனெ நாடனவரையும் கூட்டிக்கொண்டு காரையூரெ வந்து நாடனவறக்கு விருந்திட்டு அவறவறக்கு பொகுமானமும் பண்ணி அவரவரையும் ஊருக்கு அனுப்பிவிச்சு அரமனயாரும் நாடனவரும் கட்டளையிட்டபடியெ நடந்து கொள்ளுவொமாகவும். யிந்த பட்டயம் ச[ரி]பாது யெளுதினது காரையூரு ஷ்தலத்துக் கணக்கு அரச பிள்ளைக் கையெளுத்து [||*]

---

1. 'அரசு பிள்ளையார்' போலும். 'சுரபி பிள்ளையார்' என்றும் வாசிக்க முடியும்.

2. இதேபோல விநாயகக் கடவுளை நடுவழியிலே விட்டுவிட்டுப் போனதாகக் காணும் கதைகள் வேறு இடங்களிலும் கேட்கப்படுவது உண்டு.

திருக்கோவலூர் Tirukkōvalūr

சாசனம் — 1223] [No. 21 on p. 140

[திரிவிக்கிரமப் பெருமாள்] விஷ்ணு கோவிலில் மடைப்பள்ளிக்குச் சமீபம் மண்டப வாசலுக்கு வடபுறம் பொறிக்கப்பட்டிருப்பது.

On the northern wall of the gate of the maṇḍapa near the kitchen in the temple of Vishṇu. Record dated in the 24th regnal year of the Chōḷa king **Kulottunga Choladeva** registering the grant of a portion of land in the neighbourhood of Tirukkōvalūr to the god in favour of Chaṇḍēśvara of the temple of Tiruvīraṭṭānam-uḍaiyār.

An inscription engraved in the second prākāra of the Vīraṭṭānēśvara temple at Kīḷaiyūr, dated in the 24th regnal year of the Chōḷa king Tribhuvana chakravartin **Kulottunga Choladeva** (III) 'who was pleased to capture Iḷam (Ceylon), Madurai, the crowned head of the Pāṇḍya, Kachchi and Karuvūr' registers the exchange of lands belonging to the temples of Tiruviḍaikaḷi-Emperumān and Uḍaiyār Tiruvīraṭṭānam-uḍaiya-Nāyanār at Tirukkōvalūr in Kuṟukkai-k-kūṟṟam, a district of Jananātha vaḷanāḍu *alias* Malāḍu. The exchange was effected in the names of S'rī Sēnāpati Āḷvār and Chaṇḍēśvara on behalf of the gods of the Vishṇu and Śiva temples respectively. The present one is evidently a copy of the record in the Vishṇu temple.

The copy of the record prepared by the assistants of Col. Mackenzie is not avilable.

சோழ அரசனான குலோத்துங்க சோழ தேவனுடைய ஆட்சிக் காலத்தின் 24-ஆம் ஆண்டு கொண்ட கல்வெட்டு. திருவீரட்டானம் உடையார் கோவில் சண்டேசுவரர் பேரில் திருக்கோவலூர்ப் பக்கத்திலே உள்ள நிலம் சிலவற்றை அளித்த செய்தியைத் தெரிவிப்பது.

இந்தச் சாசனத்துக்குப் பிரதி கிடைக்கவில்லை. எனினும் கீழையூர் வீரட்டானேசுவரர்கோவிலிலிருந்து கிடைக்கும் இதே போன்ற சாசனம் ஒன்று முதல் பாகத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. சோழ அரசனான திரிபுவன சக்கரவர்த்திகள் ஈழமும் மதுரையும் பாண்டியன் முடித்தலையும் கொண்டருளிய [மூன்றும்] குலோத்துங்கசோழனுடைய இருபத்து நான்காம் ஆண்டு கொண்ட அக் கல்வெட்டு மலாடான ஜனநாத வளநாட்டுக் குறுக்கைக் கூற்றத்துத் திருக்கோவலூர் திருவிடைகழி எம்பெருமான், உடையார் திருவீரட்டானமுடைய

நாயனார் ஆகியோர் கோவில்களின் லிங்களைப் பரிவர்த்தனை செய்ததைத் தெரிவிக்கிறது. சிவன் கோவிலுக்காகச் சண்டேசுவரர், விஷ்ணு ஆலயத்துக்காகச் சேனை முதலியார் ஆகியோர் பெயரில் இப் பரிவர்த்தனை செய்யப்பட்டதாகக் கூறுகிறது.

அதே சாசனம் விஷ்ணு கோயிலிலும் வெட்டுவிக்கப்பட்டிருத்தல் அவசியம். அதன் பிரதியே போலும் இது.

## ஸ்ரீபெரும்புதூர் — Śrīperumbudūr

இவ்வூர் செங்கல்பட்டு ஜில்லாவில் உள்ளது. இவ்விடத்திலிருந்து பிரதி செய்யப்பட்ட சாசனங்கள் முதல் பாகத்தில் வெளியாகியுள்ளன.

The place is a taluk head-quarter station in the Chingleput district. Inscriptions copied from this place are published in Vol. I.

சாசனம் — 1224] [No. *1* on p. *158*

இராமானுஜ ஆழ்வார் கோவிலில் உள்ள செப்பேட்டுச் சாசனம்.

Copper-plate grant in possession of the temple of Rāmānuja Āḻvār at the place. Record dated in Śaka 1478, Nala in the reign of the Vijayanagara king **Sadasiva Maharayar** registering the grant of the following villages: Kachchikkatti, [Kachchi kōttam villages?] Perumbudūr, Kīḻappaṭṭu, Kuśappaṭṭu, Puttērigrāmam, Pullattanjēri, Perumbēḍu, Puduchchēri, Bañjālappaṭṭi, Nemmeli, Būdūr (or Pōndūr), Nagarikkuppam, Koṇḍapperumbēḍu, Tirumaṉikkuppam, Muḷaśūr, Kundangali, Sarattunāḍu, [villages ?] Pumbalūr, Grāmam, Sammatiya Ayilachchēri, Kīḻaviḷāgam, Nallaharam, Naduppaṭṭi, Nayarnāḍu [villages ?], Vakayalupāḍu, S'iṟupākkam Mala Vēṭṭamaṅgalam, Puttēriviḷāgam, Paiyyur kōṭṭam, [village ?] Kipakkam, Kachurnatha [Kachchūr nāḍu village ?], Śomadēva-pākkam, Kaḷattūr kōṭṭam, [village ?] Śalapākkam by the king for the worship and offerings to Rāmānuja Āḻvār.

The text of the grant is not available and the record seems to have been written in Sanskrit language in the Grantha script.

விஜயநகர மன்னரான சதாசிவ மகாராயர் ஆட்சிக் காலத்திலே சகவருஷம் 1478 நள ஆண்டு ராமாநுஜ ஆழ்வாருடைய நித்த நிவந்தங்களுக்காக அரசன் பல கிராமங்களை அளித்த செய்தியைத் தெரிவிப்பது. அவ்விதம் தானம் அளிக்கப்பட்ட கிராமங்களின் விவரம் :

கச்சிக்கட்டி [கச்சிக்கோட்டம் கிராமங்கள்?], பெரும்புதூர், கீழ்ப்பட்டு, குசப்பட்டு, புத்தேரி கிராமம், புல்லத்தஞ்சேரி, பெரும்பேடு, புதுச்சேரி, பஞ்சாலப்பட்டி, நெம்மலி, பூதூர் (அல்லது போந்தூர்), நகரிக்குப்பம் கொண்ட பெரும்பேடு திருமணிக் குப்பம், முளசூர் குந்தங்கழி, சரத்துநாடு (கிராமங்கள்?) பும்பா ஊர், கிராமம் சம்மதியா(?) அயிலச் செரி, கீழ விளாகம், நல்லகரம், நடுப்பட்டி, நாயறு நாடு (நாட்டுக்கிராமங்கள்) வகயலுபாடு, சிறுபாக்கம், மேலவேட்ட மங்கலம், புத்தேரி விளாகம், பையூர் கோட்டம் [கிராமம்?], கீபாக்கம், கச்சூர்நாத [கச்சூர் நாட்டுக் கிராமம்?] சோம தேவ பாக்கம், களத்தூர் கோட்டம் (கிராமம்?), சாலபாக்கம் ஆகியவை.

*இந்தச் சாஸனத்தின் பிரதி கிடைக்கவில்லை. இது கிரந்த எழுத்தில் எழுதப்பட்ட வடமொழிச் சாசனம் போலும்.*

கோல்லூரூர் **Kollūrūr**

*இவ்வூர் இருக்கும் இடம் தெரியவில்லை. ஊர்ப் பெயரும் தவறாகப் பிரதிசெய்யப்பட்டிருக்கிறது. திருநெல்வேலிச் சீமைப்பகுதியில் இருக்கவேண்டும் போலும். [மேலே 1220 நெ. பார்க்க.]*

The name of the village is corrupt and it is not possible to say exactly where it is located. Probably it is in the Tirunelvēli region. [Vide No. 1220 above].

சாசனம் — 1225] [No. *1* on p. *190*

*'ஊரிலே சிற்பாசாரி கலுசுகல மாயஞசாரி வசம் உள்ள செப்பேட்டுச் சாசனம்' என்று குறிக்கப்பட்டுள்ளது.*

Copy of a Copper-plate grant then in the possession of S'ilpacharya and 'Kalujukla Mayanāchari' of the village. Record dated in S'aka 979 and Kollam 131 in the reign of 'Vooneteroovada Pumboo Raun' registering the grant by the king of 2 villages Pondulūr and Palambarūr to Ādirāyar for the sake of stone-masons.

The record appears to be spurious.

சகாப்தம் *979*, கொல்லம் *131* ஆண்டு கொண்ட சாசனம். சிற்பாசாரியாருக்காகப் பூந்துஊர் பழம்பாரூர் ஆகிய இரு கிராமங்களையும் ஆதிராயன் என்பவர் வசம் ஓர் அரசன் அளித்த செய்தியைத் தெரிவிப்பதாக உள்ளது. அரசன் பெயரும் பிழையாகப் பிரதி செய்யப்பட்டுள்ளது. ஊனத் திருவதி பும்பூரான் என்பது போல ஏதோ ஒன்றாக இருத்தல் வேண்டும்.

*சாசனம் போலி என்று தோற்றுகிறது.*

அரியலூர் **Ariyalūr**

இவ்வூர் திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் உடையார்பாளையம் தாலூகாவில் இருக்கிறது. இவ்விடத்திலிருந்து கிடைத்த சாசனங்கள் இரண்டாம் பாகத்தில் வெளியாகியுள்ளன.

The place is in the Uḍaiyārpāḷaiyam taluk of the Tiruchirāpaḷḷi district. Inscriptions copied from this place have been published in Vol. II above.

சாசனம் — 1226] [No. *25* on p. *211*

ஊரிலே சுப்பிரமணிய சுவாமி கோவில் பண்டாரம் மடத்தில் உள்ள ஒரு செப்பேட்டுச் சாசனம்.

Copy of a Copper-plate then in possession of the Paṇḍāram *maṭha* in the temple of god Subrahmaṇya at the place. Record dated in S'aka 1625, Svabhānu in the regime of the chief Araśunilaiyitta Maḷavarāya **Rangappa Malavarayar** registering a [*magamai*] of one *kāśu* for each bag [probably of the merchandise sold at the market] and one *kāśu* for a week for each market, the amount so collected to be paid to Ambalattāḍum-Ayyan of Chidambaram for the worship.

The text of the grant is not available. It is likely that that the name of Ambalattaḍum-aiyan of Chidambaram represents the name of the god Naṭarāja of Chidambaram. It may also be taken to represent a person, probably the individual, concerned with the management.

அரசு நிலையிட்ட மழவராயர் ரங்கப்ப மழவராயர் நாளையில் சகாப்தம் 1625, சுபானு வருஷம் சிதம்பரம் அம்பலத்தாடும் ஐயன் பூசைக்காகச் சந்தையில் வாரத்துக்கு ஒரு காசு வீதமும், விற்பனையாகும் சாமான்களுக்கு மூட்டைக்கு ஒரு காசு வீதமும் மகமை கொடுப்பதாக ஒப்புக்கொள்ளும் சாசனம்.

சாசனப் பிரதி கிடைக்கவில்லை. பட்டியலில் காணும் வாசகத்தைக் கொண்டு மகமைத் தொகையைப் பூசை செய்வதற்காகச் சிதம்பரம் அம்பலத்தாடும் ஐயன் வசம் கொடுப்பதாக நிர்ணயிக்கப்பட்டது என்றும் கொள்ளலாம்.

சாசனம் — 1227] [No. *33* on p. *213*

அரியலூர் கிருஷ்ணசுவாமி கோவில் மகாமண்டபத்தின் வடபுறம் சுவரில் உள்ளது.

On the North [wall] of the mahā maṇḍapa in the temple of Krishṇasvāmin at the place. Record dated in S'aka 1664, Dundhubhi, in the regime of **Vijaya Oppilla Malavarayar** registering the grant of 15 *kuḻi* of land in Kuḷattūr village to Narasappayya. The name of the village may be restored even as Ālattūr or Āttur.

The transcript of the record is not available.

A similar record from the same place registering the gift of 75 *kuḻi* of land in Attiyūr village to Narasayya of Maddūr has been published as No. 666 in Vol. II.

விஜய ஒப்பிலா மழவராயர் ஆட்சியில் சகாப்தம் 1664, துந்துபி ஆண்டு குளத்தூர் கிராமத்தில் 15 குழி நிலம் நரசப்பய்யருக்குத் தானம் அளிக்கப்பெற்ற செய்தியைத் தெரிவிக்கிறது.

தானம் வழங்கப்பட்ட நிலம் இருந்த கிராமத்தின் பெயரை ஆலத்தூர் என்றோ ஆத்தூர் என்றோ வாசிக்கவும் முடியும். இந்தச் சாசனத்தின் பிரதியும் கிடைக்கவில்லை. இதேபோல் இவ்விடத்திலிருந்து கிடைத்த மற்றொரு சாசனம் இரண்டாம்பாகத்தில் 666 நெ. ஆக கொடுக்கப்பட்டுள்ளது. அதிலே மத்தூர் நாசய்யருக்கு அத்தியூர் கிராமத்தில் 75 குழி நிலம் துவாதசிப் பிராமண போசனத்துக்ககாக அளித்த செய்தியைக் குறிக்கப்பட்டுள்ளது.

## கோவிலூர் Kōvilūr

ஊரின் பெயர் சாசனப்பட்டியலில் கூவலூர் என்று காணப்படுகிறது.

The name of the village is given as "Kūvalūr" in the *List*.

சாசனம் — 1228] [No. 35 on p. *214*

ஊரில் ஈசுவரன் கோவிலில் உள்ள காகிதச் சாசனத்தின் பிரதி.

Copy of a Paper-document in the temple of Śiva at the place. Record dated in Śaka 1711, Akshaya registering the grant to the god Agastyēśvara of the Śiva temple of the place by Rāmayyar, the *monegar* and others of the village of Saharājapuram of their contribution of 4 pagodas per year from the *kasba* (i.e., the local) *māgāṇam*, 5 pagodas per year from the *Ten* (South) *māgāṇam*, 4 pagodas per year from *Vaḍa* (North) *māgāṇam* and 5 pagodas per year from Conanoor.

The copy of this record is not available.

சகாப்தம் 1711, அக்ஷய வருஷம் கொண்ட சாசனம். ஊரில் உள்ள அகஸ்தீசுவரர் பூசைக்காகக் கஸ்பா மாகாணத்துக்காக வரு

ஷம் தோறும் நான்கு வராகனும், தென் மாகாணத்துக்காக ஆண்டுதோறும் ஐந்து வராகனும், வடமாகாணத்துக்காக ஆண்டு தோறும் நான்கு வராகனும், கானனூர் (கிராமம் அல்லது பிரதேசத்துக்காக) ஆண்டுதோறும் ஐந்து வராகனும் மகமையாக ஸஹராஜபுரம் [மணியகாரர்?] ராமய்யர் முதலானோர் அளிக்க ஒப்புக்கொண்டதைத் தெரிவிக்கும் சாசனம்:

இதன் பிரதியும் கிடைக்கவில்லை.

சாசனம் — 1229] [No. *36* on p. *214*

'கூவலூர் ஊருக்கு மேற்கே கால் மைல் தூரத்தில் ஓர் இலுப்பைத் தோப்பில் நட்டிருக்கும் கல்லில் காணும் சாசனம்' என்று குறிக்கப்பட்டுள்ளது.

On a stone set up in the *Iluppai* garden ¼ mile to the west of the village. Record dated in S'aka 1650, Pramādhin, registering the grant of the *iluppai* garden for maintaining a lamp in front of the god Agastyēśvara by the inhabitants of the village and Hazrat 'Kebla' Khan Sahib, probably the lessee under the Nawab of the Karnatic.

The text of the document is not available.

*சகாப்தம் 1650*, பிலவங்க ஆண்டு அகஸ்தீசுவர சுவாமி திருமுன்னர் ஒரு விளக்கு எரிப்பதற்காக அந்த இலுப்பைத்தோப்பை அளிப்பதாகத் தெரிவிக்கும் கல்வெட்டு. கர்நாடக நவாபின் கீழ்க் குத்தகைதாரரான ஹஜரத் 'கப்ள' கான் சாகிப் அனுமதியின் பேரில் ஊரார் அளித்ததாகத் தோற்றுகிறது.

சாசனப் பிரதி கிடைக்கவில்லை.

## அரியலூர் Ariyalūr

சாசனம் — 1230] [No. *40* on p. *215*

'அரியலூரில் கங்காதரேசுவரர் கோவிலில் பூசை செய்யும் சுப்பராய குருக்கள் வசம் உள்ள செப்பேட்டுச் சாசனம்' என்று குறிக்கப்பட்டுள்ளது.

Copy of a Copper-plate grant then in the possession of Subbaraya Gurukkaḷ, the *sthānīka* of the Gaṅgadharēśvara temple at Ariyalūr. Record dated in S'aka 1074 registering the grant of 15 *kuḷi* of land in Vukkalūr and 20 *kuḷi* of dry land in Vayalpaḍu to the god Gaṅgādharēśvara and goddess Svarṇamauktikāmbāḷ of the place by Tuṅga Muttāyi, mother of Veṅkappa Maḷavarāyar, a member of the *polegar* family.

The year 1074 is evidently a mistake for S'aka 1674. The text of the record is not available. Another record (vide No. 660 in Vol. II) from the same place registers the gift of 200 *kuḻi* of land by Paḻani Muttāyi to Krishṇasvāmin temple.

*சகாப்தம் 1074-ல் அரியலூர் கங்காதரேசுவர ஸ்வாமிக்கும் சுவர்ண மௌக்திகாம்பாள் அம்மனுக்கும் வெங்கப்ப மழவராயர் தாயார் துங்க முத்தாயி என்பார் உக்கலூர் கிராமத்தில் 15 குழி நிலமும் வயல்பாடு கிராமத்தில் 20 குழி புஞ்சை நிலமும் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.*

*இந்தச் சாசனத்தின் பிரதி கிடைக்கவில்லை. சக வருஷம் 1674 ஆக இருத்தல் வேண்டும். இவ்வூரிலிருந்தே கிடைக்கும் மற்றொரு சாசனத்தில் சகாப்தம் 1664, துந்துபி ஆண்டு பயணி முத்தாயி என்பார் 200 குழி புஞ்சை நிலம் அளித்த செய்தி காணப்படுகிறது. (இரண்டாம் பாகம், 666 நெ. சாசனம் பார்க்க.)*

சாசனம் — 1231] [No. 41 on p. 216

*அதே ஊரில் கோதண்டராம சுவாமி கோவிலில் உள்ள ஒரு செப்பேட்டுச் சாசனம்.*

Copy of a Copper-plate grant in the temple of Kōdaṇḍarāma-svāmin at the same place. Record dated in S'aka 1651, Sādharaṇa, in the regime of Araśunilaiyiṭṭa **Ranga Malavarayar** registering the grant of a *magamai* of one *paṇam* for each of the bride and the bride-groom parties for each marriage and [also one *paṇam* per year for each house expressed here by the word 'door.'] by the members of the shepherd community mentioned herein as *Āyappāḍi Gōpāla-vamśattār*.

The transcript of this record is not available.

*அரசு நிலையிட்ட ரங்க மழவராயர் நாளையில் சகாப்தம் 1651 சாதாரண ஆண்டு கொண்ட சாசனம். கோதண்டராம சுவாமிக்காக ஆயப்பாடி கோபால வம்சத்தார் ஒவ்வொரு கல்யாணத்துக்கும் பிள்ளை வீட்டாரும் பெண் வீட்டாரும் தலைக்கு ஒரு பணம் வீதமும் ஆண்டு தோறும் வீட்டு வாசற்படி ஒன்றுக்கு ஒரு பணம் வீதமும் மகமை கொடுப்பதாக ஒப்புக்கொண்டதைத் தெரிவிப்பது.*

*இதன் பிரதியும் கிடைக்கவில்லை.*

## சேந்தமங்கலம் Śendamangalam

இவ்வூர் தென் ஆர்க்காடு ஜில்லா திருக்கோவலூர் தாலூகாவில் சேர்ந்திருக்கிறது. இவ்விடத்திலிருந்து கிடைத்த சாசனங்கள் முதல் பாகத்தில் வெளியாகியுள்ளன.

The village is in the Tirukkōyilūr taluk of the South Arcot district. Inscriptions copied from this village have been included in Vol. I.

சாசனம் — 1232] [No. 48 on p. 219

ஆபத்சகாயேசுவரர் கோவில் மகாமண்டபத்தின் தென் சுவரில் காண்பது.

On the south wall of mahāmaṇḍapa of Āpatsahāyēśvara temple in the village. An undated record registering the gift of the village of (Mūkkanari marriage ?) for the maintenance of a lamp and worship and offerings to god Vāḷ-nilai-kaṇḍa Vīrēśvara.

The transcript of this record also is not available.

வாணிலை கண்ட வீரேசுவரர் கோவிலில் தீபத்துக்கும் பூசை முதலிய நித்த நிவந்தங்களுக்குமாக மூக்கனூர் என்னும் கிராமம் அளிக்கப்பெற்ற செய்தியைத் தெரிவிப்பது. சாசனம் அளிக்கப் பட்ட காலமோ அரசன் பெயரோ குறிக்கப்படவில்லை.

இதன் பிரதி கிடைக்கவில்லை.

## திருவெண்ணெய் நல்லூர் Tiruveṇṇainallūr

இதுவும் திருக்கோவலூர் தாலூகாவில் உள்ளது. இவ்விடத்திலிருந்து கிடைத்த சாசனங்கள் முதல் பாகத்தில் கொடுக்கப்பட்டுள்ளன.

This place also is in the Tirukkōyilūr taluk and inscriptions copied from this place have been given in Vol. I.

சாசனம் — 1233] [No. 50 on p. 219

ஸ்ரீ வைகுந்தப் பெருமாள் என்னும் விஷ்ணு ஆலயத்தின் மகாமண்டபத்தின் தென்புறம் உள்ள துவார பாலகருக்கு மேல்புறம் பொறிக்கப்பட்டிருப்பது.

On the west side of the *dvārapāla* image on the south of the mahāmaṇḍapa in the temple of Śrī Vaikuṇṭha-perumāḷ in the village. Record dated in the 5th regnal year of the Pāṇḍya king **Vikrama Pandyadeva** registering the grant by the king of the village of Puttaputtilur for the worship and offerings to god S'ri Vaikuṇṭha-perumāḷ.

The text of the record is not available. Another record from the same place dated in the 5th regnal year of the Pāṇḍya king **Vikrama Pandyadeva** beginning with the *praśasti* commencing with the words *Samasta bhuvanēka vīra*, registers the gift of the village Peruṅkuḷattuḍaiyān-ēndal by the king. This has been published as No. 83 in Vol. I.

*பாண்டிய மன்னனான விக்கிரம பாண்டிய தேவனுடைய ஆட்சியின் 5-ஆம் ஆண்டு கொண்ட கல்வெட்டு. ஸ்ரீ வைகுந்தப் பெருமாளுடைய பூசை முதலிய நித்த நிவந்தங்களுக்காகப் புத்தப் புத்தலூர் என்னும் கிராமத்தை அரசன் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.*

*இந்தச் சாசனத்துக்கும் பிரதி கிடைக்கவில்லை. இவ்விடத்திலிருந்து கிடைத்த மற்றொரு சாசனம் 'ஸமஸ்த புவநேக வீர' என்னும் வடமொழிப் பிரசஸ்தியுடன் தொடங்கும் பாண்டிய மன்னனான விக்கிரம பாண்டிய தேவனுடைய 5-ஆம் ஆண்டு கொண்டுள்ளது. அது பெருங்குளத்துடையான் ஏந்தல் என்னும் கிராமத்தை அரசன் அளித்த செய்தியைத் தெரிவிப்பது. அது முதல் பாகத்தில் 83 நெ. சாசனமாக வெளியிடப்பட்டுள்ளது.*

சாசனம் — 1234] [No. *54* on p. *221*

*இந்தச் சாசனம் எந்த ஊரில் எவ்விடத்திலிருந்து கிடைத்ததென்பது குறிக்கப்படவில்லை.*

The place wherefrom this record was copied is not found noted. Record dated in the 3rd year in the reign of the Pāṇḍya king **Sundara Pandyadeva** registering the grant of the village Māvaḍikoṇḍai as *sarvamānya* to god Paḷḷikoṇḍa-mūlavar.

A similar record of the reign of the Pāṇḍya king Tribhuvana chakravartin Kōnērinmaikoṇḍān **Sundara Pandya**, the year of which is lost, registering the tax-free gift as *tiruviḍaiyāṭṭam* of the village Māvaḍikoṇḍai in Muṇḍa-nāḍu to meet the expenses of worship and offerings of Paḷḷikoṇḍa-Āḻvār in Tiruppāṛkkaḍal Chittirameḻi-viṇṇagaram at Nellūr *alias* Vikrama-simhapuram secured

from the modern Nellore in the Andhra State has been published as No, 938 in Vol. II.

But both these are mentioned separately in the *List.*

பாண்டிய மன்னனுன சுந்தரபாண்டியன் ஆட்சிக் காலத்தில் 3-ஆம் ஆண்டு கொண்ட கல்வெட்டு. பள்ளிகொண்ட மூலவருக்குச் சர்வ மானியமாக மாவடிக் கொண்டை என்னும் கிராமத்தை அளித்த செய்தியைத் தெரிவிப்பது.

*இதன் பிரதி கிடைக்கவில்லை. ஆந்திர ராஜ்யம் நெல்லூரில் கிடைத்த இதே போன்ற சாசனம் ஒன்று இரண்டாம் பாகத்தில் 938 நெ. ஆக வெளியிடப்பட்டுள்ளது. நெல்லூரான விக்கிரமஸிம்ஹ புரத்தில் திருப்பாற்கடல் சித்திரமேழி விண்ணகரம் எம்பெருமான் பள்ளிகொண்ட பெருமாள் பூசை நைவேத்தியத்துக்காக முண்ட நாட்டு மாவடிக்கொண்டை என்னும் கிராமத்தைப் பாண்டிய மன்னனுன திரிபுவன சக்கரவர்த்திகள் கொநேரின்மை கொண்டான்* சுந்தர பாண்டியன் *அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. அதிலே அரசன் ஆட்சியின் ஆண்டு சிதைந்துபோய்விட்டது; கிடைக்கவில்லை. இவ்விரண்டும் சாசனப்பட்டியலில் தனித் தனியே கொடுக்கப்பட்டுள்ளன.*

## சிங்கநல்லூர் — Singanallūr

*இவ்வூர் உடையார்பாளையம் சீமையில் இருப்பதாகச்* சாசனப் பட்டியலில் *கொடுக்கப்பட்டுள்ளது. எனினும் இது கோயம்புத்தூர்ப் பக்கத்தில் உள்ளதாக இருக்குமோ வென்று தோன்றுகிறது. சாசனப் பிரதி கிடைக்காமையால் நிச்சயிக்கமுடியவில்லை.*

The village is given in the *List* as situated in the district of Uḍaiyārpāḷaiyam. But it appears to be the place near Coimbatore. This cannot be definitely settled as the transcript of the record is not available.

**சாசனம் — 1235]** [No. 55 on p. *221*

*'ஊரிலே மத்தகர நாராயண ஐயர் என்பவர் வசம் உள்ள ஒரு செப்பேட்டுச் சாசனம்' என்று குறிக்கப்பட்டுள்ளது.*

Copy of a [Copper] plate then in the possession of Madakara Nārāyaṇa Aiyar of the place. Record dated in Kali 1469, Plavaṅga in the reign of the Chōḷa king **Karikala Cholaraja** registering the creation of the village S'iṅgamāpuram near the river Kāñchī [the modern Noyyil ?] and to the west of Oliyamkuḷam (probably a village of that name) and granted the same to the Brāhmaṇas. The Kaḷi

date is evidently a mistake for the S'aka year. We do not know whether a king or at least a chief of the name Karikāla Chōḻarāja was exercising authority at such a late date.

கரிகால சோழ ராஜாவின் ஆட்சியில் கலியப்தம் 1469 பிலவங்க ஆண்டு கொண்ட சாசனம். காஞ்சி [நொய்யில் ?] நதி தீரத்தில் ஒலியன்குளம் (ஒதியன்குளம் ? கிராமத்து)க்கு மேற்கில் சிங்கமாபுரம் கிராமத்தை நிர்மாணித்து அதைப் பிராமணர்களுக்கு அரசன் தானம் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.

சாசனத்தின் காலம் கலியப்தம் என்பதற்குப் பதிலாகச் சகாப்தம் என்று இருக்கவேண்டும் போலும். அந் நாளிலே கரிகால சோழ ராஜா என்ற பெயர்கொண்டவர் அரசுரிமை பெற்றிருந்த விவரம் வேறு ஆதாரங்களிலிருந்து கிடைக்கவில்லை.

சாசனம் — 1236] [No. 56 on p. *221*

ஊரார் வசம் உள்ள செப்பேட்டுச் சாசனத்தின் நகல்.

Copy of a Copper-plate grant then in possesion of the inhabitants of the village. Record dated in Kali (mistake for S'aka) 1469, Plavaṅga in the reign of the Vijayanagara king **Sadasiva Raya** registering the grant of the village Gōvindarāmapura-chaturvēdimaṅgalam to the Brāhmaṇas by the king.

The transcript of the record is not available.

விஜயநகர மன்னரான சதாசிவராயர் ஆட்சிக் காலத்தில் கலியப்தம் 1469 (சகாப்தம் என்று இருத்தல் வேண்டும்) பிலவங்க ஆண்டு கொண்ட சாசனம். கோவிந்தராமபுர சதுர்வேதி மங்கலம் கிராமத்தை அரசன் பிராமணர்களுக்குத் தானம் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.

சாசனத்தின் பிரதி கிடைக்கவில்லை.

## கண்ணுடிப்புத்தூர் Kaṇṇāḍipputtūr

இதுவும் உடையார்பாளையம் பகுதியில் உள்ள ஊராகவே சாசனப் பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ளது. எனினும் இது கோயம்புத்தூர் ஜில்லா உடுமலைப்பேட்டை தாலூகாவில் உள்ள ஊராகவே இருத்தல் வேண்டும் என்று தெரிகிறது.

This place also is given as situated in the Uḍaiyārpāḷaiyam region; but it appears to be the village in the Udumulpet taluk of the Coimbatore district.

சாசனம் — 1237] [No. *66* on p. *224*

*'வேங்கட ஐயர் குமாரன் லட்சுமண ஐயர் வசம் உள்ள செப்பேட்டுச் சாசனத்தின் பிரதி' என்று குறிக்கப்பட்டிருக்கிறது.*

Copy of a Copper-plate then in the possession of Lakshmaṇa Aiyar, son of Vēṅkaṭa Aiyar in the *agrahāram* of the village. Record dated in Śaka 1587, Viśvāvasu in the reign of the Vijayanagara king **Srirangadeva Maharayar** registering the gift of 15 *mā* of land of Kaṇiyūr village to the inhabitants of Kaṇiyūr by **Visvanatha Nayakar-Chokkanatha Nayakar-Vira Nayakar.**

The transcript of the record is not available. It is likely that Vīra Nāyakar made the gift in the reign of Chokkanātha Nāyaka, evidently the ruler of the Madurai Nāyaka line.

விஜய நகர மன்னனுன ஸ்ரீ ரங்கதேவ மகாராயர் ஆட்சிக் காலத்தில் சகாப்தம் 1587 விச்வாவசு ஆண்டு கொண்ட கல் வெட்டு. கணியூர் கிராமத்தில் பதினைந்து மா நிலத்தைப் பிராமணர் களுக்கு விசுவநாத நாயக்கர் சொக்கநாத நாயக்கர் வீர நாயக்கர் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.

*இந்தச் சாசனத்தின் பிரதி கிடைக்கவில்லை. தானம் மதுரை நாய்க்க மன்னனுன விசுவநாத நாய்க்கர் சொக்கநாத நாய்க்கர் ஆட்சியில் வீர நாய்க் கர் என்பவரால் அளிக்கப்பெற்றதாக இருக்கலாம்.*

சாசனம் — 1238] [No. *67* on p. *225*

*அவரிடத்திலே உள்ள மற்றொரு செப்பேட்டுச் சாசனம்.*

Copy of another Copper-plate grant then in possession of the same person. Record dated in Śaka 1541, Kālayukti, in the reign of the Vijayanagara ruler Vīra **Ramadeva Maharaya** registering the grant of the village 'Balargapūr.' [Balarāmapuram ?] to the villagers by Raghunāthadēva Mahārāja.

The transcript is not available for this record also. From Sewell's *List of Antiquities* (Vol. II, No. 187), it is learnt that the donor was the son of Śrī Vēnkaṭadēva Mahārāja of Uraiyūr and the agent of the Madurai Ruler Vīrappa Nāyaka.

விஜய நகர மன்னனுன வீர ராமதேவ மாகாராயர் ஆட்சிக் காலத்தில் சகாப்தம் 1541, காளயுக்தி ஆண்டு கொண்ட சாசனம் ரகுநாததேவ மகாராஜா என்பவர் பலராமபுரம் (?) என்னும்

கிராமத்தைப் பிராமணர்களுக்குத் தானம் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.

இதன் பிரதியும் கிடைக்கவில்லை. தானம் அளித்த ரகுநாத தேவ மகாராஜா உறையூர் ஸ்ரீ வேங்கடதேவ மகாராஜாவின் குமாரர் என்றும் மதுரை மன்னரான வீரப்ப நாய்க்கருடைய காரிய கர்த்தாவென்றும் தெரிகிறது.

## எலத்தூர் Elattūr

திருவாங்கூர் - கொச்சி ராஜ்யத்திலே சென்னை ராஜ்யத்தின் எல்லையை ஒட்டி உள்ள ஊர்.

The village is in the Travancore-Cochin State on the borders of the Madras State.

சாசனம் — 1239] [No. *21* on p. *304*

ஊரில் உள்ள மதுநாத சுவாமி என்னும் பெயருள்ள சிவன் கோவிலில் கர்ப்பகிருகத்தின் சுவரில் பொறிக்கப்பட்டிருப்பது.

On the wall of the central shrine of the temple of S'iva known as Madhunāthasvāmin. Undated record in the reign of 'Vīra Bāṇa-[Pāṇḍya ?] gurula dēvar' registering the grant of some land to the temple of Madhunāthasvāmin by Elattūr Aḻagappan.

'வீரபாண்டிய குருலதேவர்' என்பார் ஆட்சிக் காலத்தில் மதுநாதஸ்வாமிக்கு எலத்தூர் அழகப்பன் என்பார் நிலம் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.

## சுக்காம்பட்டி Śukkāmpaṭṭi

இவ்வூர் மதுரை ஜில்லா நிலக்கோட்டை தாலுகாவில் உள்ளது.

The place is in the Nilakkōttai taluk of the Madurai district.

சாசனம்—1240 ] [D. *3398*

'திண்டுக்கல் வகையரா சுக்காம்பட்டி ஜமீன்தார் பாலமுக குண்டு முத்தப்ப நாயக்கனிடத்தில் உள்ள பட்டயங்களுக்கு நகல்' என்று மக்கென்ஸியின் பிரதியில் குறிக்கப்பட்டிருக்கிறது.

Copper-plate grant then in possession of Bālamukkuṇḍu Muttappa Nāyakar, Zamindar of S'ukkāmpaṭṭi, included in the Dindigul region,

The record contains the following interesting details: It commences with the statement that it was given to Bālāla Mutti Nāyakar known by the title *Bhujabala parākrama Śāluva Kaṭṭāri* by the members of the five (artisan) castes and seventy .four *gaṇas* in the presence of Tirumalai Nāyakar. on the 17th day Tai in the year Tāraṇa, Śaka 1257.

It appears that a girl of five years of the artisan community at Malayanūr included in the territory of the Nāyaka of Panañjēri while she was playing on the river-bank one day was carried away as a captive by the *Paṭhān* chief of Ratnagiri-durga. The members of the community on hearing this wanted to revenge for the injury done to them and struck work of every description, in gold, iron, wood. stone and brass. Agricultural implements could not be had. When this continued for six months, the Rāyar invited the representatives of the five communities in his court and enquired of them. On hearing the cause, he .became angry and getting the Nāyaka of Panañjēri to his presence ordered the chieftain to get the girl released immediately and also bring him the head of the offender. The chief accordingly invested the fort of Ratnagiri-durga seven times in all of which he failed. The Rāyar enraged at his failure, sent male and female emissaries to inflict torture on him and his wife and also recover a fine of twenty-one thousand *pon*. When the torture was going on, Bālāla Mutti Nāyaka, who had been on his way to see the Rāyar, came on the scene unexpectedly. Enraged at the treatment meted out to the Nāyaka of Panañjeri, he killed the male emissary, removed the shackles of the Nāyaka and similarly freed his wife driving out the female emissary. After this, he returned to his own place without going to the presence of the Rāyar, and collecting an army he invested the Ratnagiri fort. The siege lasted for one and a half-years, at the end of which period he was able to get the head of the *Tulukka* and release the *Kammāḷa* girl. He then went to the presence of the Rāyar carrying all these together with the *birudas* and other valuables of the *Tulukka* captured by him at Ratnagiri.

The girl who was by this time seven years of age was given in marriage to a person of her own community under the auspices of the chiefs and the Rāyar. When the Rāyar asked the members of the community of what recompense they would give to Bālāla Mutti Nāyaka who bravely accomplished this heroic deed, the members promised to pay him 10 *paṇam* for every marriage, 5 *paṇam* per head per year for adults and 1 *paṇam* per head per year for children perpetually in addition to various other honours and privileges conferred on him.

The record appears to be a spurious one.

ம-ா-ா ஸ்ரீமன் மண்டலெசுவற அகண்ட மண்[ட*]லாதிபதி உத்தண்ட தொர்த்தண்ட மண்டலிதற கண்ட சண்டப் பிற சண்ட மணி மகுட மார்த்தாண்ட தீர்த்தப் பிறதாப மகா பசலாப அமொக சிலிமுக தனஞ்சயரூகிய கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு குடாத றயற உத்த கெண்ட அதிவிற சூறரூகிய பவள மளய மங்கு சுத்தியு மதித்த வீற பொக வசந்தருயர் பிறபு வுடனெவ மகாருயற்[1] விறமல்லருயர் மல்லிகார்ச்சுனருயர் மகா ருயர் கிருஷ்ணருயர் முசுகுந்தருயர் கொவிந்தருயர் பிறதிவீ ருச்சியம் பண்ணிச் சொல்லி அருளாயின்று சுஸித ஸ்ரீ ஸ்ரீ கூஉாருஎ-க்கு தாறண ஸ்ரீ தைமீ ஸௌஉ திருமலருயற் நாமதெய நவ மன் மதாகாற யொதனம்யொத அசகாய சூர கவிதா சாதுரிய சத்துரு சங்காறகீர்த்திப் பிறதாப மகுட மண்டலெசுவறரவாகிய திருமலை ருயர் தெவர்கள் சமுகம் முன்னுதலிக்க பட்டயங் குடுத்துது. புசபலபராக்கிறம சாளுவக் கடாரியாகிய பாலால முத்தி நாயக்கர் அவர்களுக்கு நாங்க ளஞ்சாதி யெழுவத்தி நாலாகணமும் சம்மதி விறத்தி மெலெ தாம்பிற சாசனமாவது.

பளங் கொண்ட பெருசெரி மாக்கா ணயக்கன் பல்லக்க வாணன் சீமயில் மலையனூரில் யெங்கள் பெண் அஞ்சு வயசு பெண் ஆத்தங்கறயில் விளையாடிக் கொண்டிருக்குறபொது ரத்தி னத்திரி[2] யென்று ஒரு அந்த துர்க்கம் ஆளப்பட்டவன் வலவல கான் யெங்குற படாணி அவடத்துக்கு வெட்டைக்கி வந்த விடத்தில் யிந்த கம்மாறச் சிறு[மி*]யைக் கண்டு யெடுத்துக் கொண்டு பொயி றத்தினகிரி துர்க்கத்தின் மீதில் வைத்துக் கொண்டான். இந்த (சமா) சமாசாறம் அஞ்சு சாதி பெரும் அரிந்து நாமள் சு[ம்*]மாயிருந்தால் நம்மிட பளி தீறப் பொறதில்லை யென்று யொசித்து கொல்லு வெலை தச்சு வெலை கல்தச்சு வெலை தட்டாறவெலை கன்னுற் வெலை ருயர் தெவர் சமுகம் காறுகாநா வெலையெல்லாம் நிருத்தினபடியினாலெ, ஆரு மாசத்திர்க்கு மெல் ருயர்தெவருக்கு அரிக்[கை*]க யாச்சுது. ருயர் தெவர் நம்மிட சமுகத்தில் காத்திருக்கப்பட்ட சொமசுந்திற செகற ஆசாரி குருவாசாரி மல்லய்யநாசாரி இவர்கள் அஞ்சு பெரையும் வறவளைத்து, காருகாணு வெலை முதல் மத்தவெலையெல்லாம் னிருத்தவெண்டிய தென்னவென்று கெழ்க்கு மிடத்தில் நாங்கள் சொன்னது: "பனஞ்

---

1. 'பிரவுட தேவ மகாராயர்' என்று வாசிக்க.

2. 'ரத்தினகிரி' என்று வாசிக்க.

செரி மாக்க ஞயக்கற் சீ[ை*]மயில் எங்கள் சிறயெ றத்தினகிரி துர்க்க மாளப்பட்ட வலவலுக்கான் எடுத்துக்கொண்டு பொயி யிருக்கிறபடியினாலெ அந்த சிறையை திருப்பி துலுக்கன் த[லை*]லயும் யெங்களிடத்துக்கு வந்து செருதாவன் நாங்கள் உங்கள் சமுஸ்தானத்தில் யிருப்பொம். அஞ்சு சாதி திருவராயும் நடப்பிப்பொம். யில்லாதிருந்தால் காறுகாணு வெலெ முதல் ஒன்று நடக்கமாட்டாது. மானம்பொயி உயிறக்கவெலா" வென்றுசொன்னவிடத்தில், அப்படியாவென்று மகா கொபத்துடனெ பனஞ்செரி ஞயக்கரை வறவழைத்து, "அ மொக்க ஞயக்கா, உன் சீர்[ை*]மயில் கம்மாழச்சிறையை றத்தின துர்க்கத்துக்கு வலவலுக்கான் யெடுத்து யிருக்க யிது நெற வரைக்கும் அந்த சமாசாறம் னம்மிடத்தில் சொல்லாமல் பொனதென்ன?" வென்று மிகுதியும் கொபம் பண்ணி மாக்கா ஞயக்கனை பார்த்து, "நீ யிருத்து ரத்தின கிரி துறத்தயும் கைவசப்படுத்தி வலவலகான் த[ை*]லயியை இங்கெ கொண்டுவந்து னம்மிட சமுகத்தின் முன்னெ வைத்தாலாச்சுது. இல்லாதிருந்தால் உனக்கு அதர்க் கெத்த் பிருயச் சித்தம் நடக்கு" மென்று மிகுதியும் தாக்கீது ஆன விடத்தில், மாக்க நாயக்கனும் மிகவும் பயந்து, "சுவாமி, ரத்தினகிரி துறத்தினத்தின் பெரில் பொயி வருகுறெ"நென்று சமூகத்தில் அனுப்பிவிக்கக் கொண்டு பொயி தன்னை சார்ந்த பாளையக்காறறும் தன்னுட தளங்களும் தானும் றத்தினகிரி துர்க்கத்தின் பெரில் பாளயமிறங்கி துலுக்கனொடெ மெலப் பொருதி மாக்கா ஞயக்கன் நிருவாகம் பண்ணமாட்டாமல் யெழு தறம் முரிஞ்சி அவன் ஊருக்கு ஓடிவந்து ருயர் தெவர் கெட்டு அறன்மனை முத்திரை மனுஷன் குருவணனையும் அறண்மனை வெலைக்காறச்சி ருமக்காளையும் மக்கா நாயக்கனிடத்துக் கனுப்பி முதுவில் முள்ளும் மெலெ கல்லும் கையில் கட்டியும் பொட்டு மக்கா நாயக்கன் பெண் சாதிக்கும் ருமக்காளை அனுப்பி உபத்திறவம் செய்து இப்படியெல்லாம் செய்குற யெழுதிறம் முரிஞ்சு வந்தத்துக்கு யெழு மூணிருவத் தொருயிரம் பொன் வாங்கச் சொல்லி ருயர் தெவர் உத்திறவுபண்ணி அனுப்பிவிச்சார்கள். அறண்மனை மனுஷன் இந்தப் பிறகாறம் நடப்பிவிச்சுக் கொண்டு இருக்க, பாலால முத்தி நாயக்கன் ருயர் தெவர் சமுகத்துக்கு வறவெணுமென்று மாக்கா நாயக்கன் அரண்மனைக்கி முன்னுலெ வருகயில் மாக்கா ஞயக்கனை தண்டிக்குறதைப் பார்த்து இருந்ததில் வந்து யிப்படி தெண்டனை செய்விக்கலாமாவென்று கெழ்குறபொது, "ருயர் தெவர் யிருவத் தொருயிரம் பொன் வாங்கிவறச் சொன்னுற். நீ

யென்ன கெழ்க்குற"தென்று அரமணை மநுஷியன் கொபமாய் சொல்ல, பாலால முத்தி நாயக்கருக்கு கொபம் வந்து அறண்மணை மனுஷனை ஆயுதம் உருவி றெண்டு துண்டாயிப்பொட்டு மாக்கா நாயக்கன் முதுகின் கல்லும் முள்ளும் கையில் கிட்டியும் வாங்கி வைத்து மாக்கா நாய்க்கர் அறண்மணைக்குள்ளெ பொய் அவன் பெண்சாதி வுபத்திறவமும் தீர்த்து ருயர் அறண்மனை வெலைக்கா றச்சியை அடி தண்டமாய் பிடித்து வெளியெ தொறத்தி, மாக்கா நாயக்கனை மிகுதியுங் கொபம் செய்துகொண்டு, அப்படியிருந்தாப் பொலெ தன் சிமைக்கிப் பொயி தன்னொடெ செர்ந்த பாளையக் காறறும் தன்னுடைய ருணுவம் தானுமாயி பொயி றத்தினகிரி துர்க்கத்தின்பெரில் பாளையமிறங்கி சமறம் னடத்திக் கொண்டி ருக்குகயில் கொமள பிச்சி மகன் கருப்பாண்டி காமன் இவர்கள் ரெண்டு பெரும் காலாடிகளையும் றத்தினகிரி துர்க்கப் பட்டணத் துலுக்கனுடைய பாளயம் இதுவெல்லாம் சொத்தியம் பார்த்து சொதிக்கயில் யிருந்தபடி ஒண்ணரை வருஷம் தன்னிடத்திலெ சொதிக்குறபொது ஒரு நாள் துர்க்கத்தின் பெரில் துலுக்கன் நித்திரையில் சொதிச்சு கருப்பாண்டி மகன் கொமாளி சிக்கனும் யெரிவிழுந்து துலுக்கன் தலையை அறுத்து...பாலு...சசுத்து முன் னுக்கு வைச்சார்கள். அப்பா துலுக்கன் பாளயத்தயும் அடிச்ச றத்தினகிரி துர்க்கமும் னித்தின திரும்பிக்கொண்டு கம்மாளச் சிறயயும் கைவசப்படுத்தி துலுக்கனுடைய குலபிரிது சகல பிரி தும்...டால....மான...முப்பத்தி றெண்டு வகை யிருந்ததயும் பிடுங்கி கொண்டார். யாதொரு வசத்துக்கும் வருகயில் அஞ்சு சாதி யெழுவத்தி நாலு கணமும்...பல்லாலுத்து பொன் வெளை பூக்கொண்டுபொய் கண்ட யிடத்தில் பல்லாலு சித்தி நாயக்க னும் எங்கள் சிரையும் துலுக்கன் தலயும் துலுக்கனுடைய குல பிரிது முப்பது வகையும் ருய தெவர் முன்னுக்கு வச்சதில் ருயர் தெவருக்கு மகத்தான சந்தொஷம் வந்தது. அந்த துலுக்கனுடய்ய குல பிருதான சகல பிருதும் முப்பத்றி ரெண்டு வகை யிருந்து குடுத்து யிதுவல்லாமல் ருயர் குடுத்துது பச்ச பல்லாக்கு தங்க கலசம் முன்னிணிசி பின்னணிசை குதிரைக்கி அண்ட சல்லி துண்ட ஜல்லிச் சத்திறம் சாமறம்...வெட்டு பாவாடை தாளியப் பதக்கம் பின்பதம...பச்சல கண்டயம் யிதுவெல்லாம் குடுத்து பின்னும் ருயர் பல்லாலு சித்து நாயக்கரைப் பார்த்து அந்த கம்மாளச்சிறயை எழு வயசு கொழுந்தயானபடியினாலெ அதை நல்லது செய்து பாலு பாலெண பதா[ச]யி யெடுத்துக் கொள்ள வெணு மென்று சொல்ல அந்த மெரைக்கி னல்ல

தாச்சுது கன்ஞற சித்தன் மகனுக்கு சுப சொபனம் முடிச்ச படியினாலெ ருயர் தெவர் யெங்கள் சாதி பெரையும் பார்த்து பல்லாலு சித்தி நாயக்கர் மானமும் பெத்து குக்கறத்தார் ஜனங் கள் அவருக்கு யென்ன குடுக்கிரீரெரு வென்று கெழ்க்கு மிடத்தில் யெங்கள் பிதா வாகையினாலெ அஞ்சாதி படம் குடுக்குரெரு மென்று சம்மதிச்செரம். ஸ்ரீமன் மகா பறமெசுவரு நெத்தி கண்ணிலுதித்த தெவ்வங்குடி தூம்மிற மெகவாகன தெவர் மகா வறப்பிறசாத முடத்தாகிய சுவெத மெகவாகனருந சைவக்கறம் கொத்திறம் மகா புசபல பருக்கிறம முடத்தாகிய திருநீல மெக வாக[ன*]ருந லொக சிருஷ்ட நிர்ம்மிதாகாற காற்மெக வாகன ருந காளிகா இஷ்டதெய்வ விபூதி பஞ்சாக்ஷற ருத்திறாக்ஷ மாலிகா பரணருன அஞ்சுசாதியும் யெழுபத்தி நாலாகணத்துக் குள்பட்ட ருயர் ஸமுஸ்தானத்தி லிருக்கப்பட்ட சொமசுந்தருசாரி சந்திற செகற ஆசாரி ரூவாசாரி மல்லய்யநாசாரி யிவர்கள் சம்மதித்து ஸ்ரீ மகாபாலரா குலத்திலுதித்த வீருதி வீறன் விக்கிறம கண்டீற வன் புசபல பருக்கிறமருகிய கட்டாரிச் சாழுவாருயன் பாலாலு சித்து நுயக்கற் அவர்களுக்கு தங்கத்திநாலெ தலயுஞ் செய்துக் கொடுத்து அனுமக் கொடி விருதுங் கொடுத்து சாயிபு புங் கத்தியுங் குடுத்து கும்மநாதநென்குற குதி[ரை*]றயுங் குடுத்து பள்ளி யென்குற சிரையுங் கொடுத்து புரெரு விருத்தியாய் வளர்ந் தெரி யிருக்கப்பட்ட கல்லுங் காவெரியும் புல்லும் பூமியும் உள்ள வரைக்கும் சந்திருதித்திய ருள்ளவரைக்கும் டில்லியாகரைக்குள் பட்ட அ[ஞ்*]சாதி மெரு யெழுவத்திநாலா கணம் கலியாணத் துக்கு பத்த பணமும் வருஷத்தில் தலை கட்டுக்கு அஞ்சு பணமும் பிள்ளைகுட்டி கொசங்கி தலைக் கட்டுக்கு ஒரு பணமும் பாலு சித்த நுயக்கற் அவர்களுக்கு சாதனங் கொடுத்தொம். ஆகாச வாணியும் பூமிதெவியு மரிய காளிகாதெவி யரிய நாங்கள் செய்த காரியத்தில் அஞ்சு சாதி யெழுவத்திநாலா கணமும் டில்லியா கரைக்குள்ப்பட்ட பெயர் யாதாமொருத்தநாகில் ஆக்ஷெபிச்சால் கெங்கைகரையில் பசுவதை செய்த பாவத்திலெயும் கெர்ப் பிணியை ஸ்ரீவதை செய்தவன் பொந பாவத்திலெயும் சிசுவதை பொன தொஷத்திலெயும் பிருமண சென்னியாசியை வதை செய் தவன் பொர தொஷத்திலெயும் மாதுரு துரெருகம் பிதுரு துரெருகம் செய்தவன் குருத் துரெருகம் சிவத் துரெருகம் செய்தவன் பொற தொஷத்திலெயும் பொவான். இந்த அஞ்சு சாதி யெழுவத்தி நாலா[க*]ணம் புத்திற பவுத்திற வம்ச பாறம்பரிய முள்ளவரைக் கும் பாலாலு சித்து நாயக்கருக்கு அடுமை சாசனம் யெழுதிக்

கொடுத்தோம். ஆ[னை*]கயால் இந்த பட்டயத்தில் உள்ள மெரைக்கு குடுத்து வறவும். இதர்க்கு சாக்ஷி: யெமை கொண்ட அளகிய ஞயக்கர். கொலக் கொண்ட திவிசாபுற ருமி நாயக்கர். ருயர் சமுஸ்தான சொல்ல கொருற தர்க்குறி ஆனந்தநாதப் பிள்ளை [||*]

[The following three inscriptions found in the Andhra State are listed by the assistants of Col. Mackenzie in the other volume, *List of Inscriptions from the Northern Districts, M. 433.*]

**[பின்வரும் மூன்று சாசனங்களும் ஆந்திர ராஜ்யத்தில் உள்ளன. அவை மக்கென்ஸியின் உதவியாளர் தயாரித்த 'வட ஜில்லாக்களிலிருந்து கிடைத்த சாசனங்கள்' என்னும் புத்தகத்தில் கொடுக்கப்பட்டுள்ளன.]**

### புஷ்பகிரி — Pushpagiri

*இவ்வூர் கடப்பை ஜில்லாவில் உள்ளது. சைவர்களுக்கு முக்கியமான மடங்களில் ஒன்றான புஷ்பகிரி மடத்தின் ஸ்தானம். வைஷ்ணவர்களும் இதை ஒரு பிரதானமான இடமாகக் கொள்வர்.*

The place, the head-quarters of one of the S'aiva *maṭhas,* the Pushpagiri-maṭha, is in the Cuddapah district. It is also considered sacred by the Vaishṇavas.

சாசனம் — **1241**] [No. *22* on p. *339*

*[வைத்தியநாத சுவாமி கோவில் பிராகாரத்தில் அமைந்துள்ள] திரிகூடேசுவரர் ஆலயத்திலே ஒரு தூணில் பொறிக்கப்பட்டிருப்பது.*

**(No. 304 of 1906). On a pillar in the shrine of Tirkūṭēśvara [in the courtyard of the Vaidyanātha temple]. Record dated in Śaka 1176. Ānanda incised on the three faces of the pillar in Telugu, Dēvanāgari and Grantha scripts. It states that (1) Kavalāyi, the wife of Gaṇḍapeṇḍara Gaṅga-sēnāpati of the Kāyastha family founded the shrine of Kamalēśvara after her own name; (2) that Hāchālambā, the daughter of king Allugi, 'lord of the town of Morata' founded the shrine of Hachalēśvara after her own name; (3) that the Pallava king Khaṇḍēraya of the solar race established the shrine called Pallavēśvara and that thus the name Trikūṭa was given to the group formed by the three shrines.**

சகாப்தம் 1176, ஆனந்த வருஷம் கொண்டு, தெலுங்கு, தேவநாகரி, கிரந்தம் ஆகிய மூன்றுவகை எழுத்துக்களிலும் தனித் தனிப் பிரதிகளாக எழுதப்பட்டுள்ளது. இக் கல்வெட்டு பின் வரும் செய்தியைத் தெரிவிக்கிறது : (1) காயஸ்த குலத்தைச் சேர்ந்த கண்ட பெண்டர கங்க சேனாதிபதியின் மனைவி கவலாயி தன் பெயரால் கமலேச்வரர் என்று எழுப்பிய கோயில்; (2) மொரதபுரவாதீச்வரனாகிய அல்லுகியின் மகள் ஹாசாலம்பா என்பவள் தன் பெயரால் எழுப்பிய ஹசலேச்வர ஆலயம்; (3) சூரிய வமிசத்தைச் சேர்ந்த பல்லவ அரசனான கண்டே ராயன் தன் பெயரால் எழுப்பிய பல்லவேசுவரம்; இம் மூன்று ஆலயங்களும் சேர்ந்திருப்பதால் திரிகூடேச்வரம் என்று அக் கோயில் பெயர் பெற்றது என்பதாகும்.

இதன் பிரதி கிடைக்கவில்லை.

## ஸ்ரீசைலம் Śrīśailam

இவ்வூர் ஆந்திர ராஜ்யம் கர்நூல் ஜில்லாவில் சேர்ந்திருக்கிறது. சைவர்களுக்கு முக்கியமான புண்ணியத் தலங்களுள் ஒன்று. தேவாரத்திலே திருப் பருப்பதம் என்று குறிக்கப்பெறுவது.

The place, a famous pilgrim centre for the Śaivites, is in the Kurnool district of the Andhra State. This is referred to as Tirup-paruppatam (Śrīparvata) in the *Tēvāram* hymns.

சாசனம் — 1242] [No. *139* on p. *460*

மலைமேல் மல்லிகார்ச்சுன சுவாமி கோவிலுக்குத் தென்புறம் உள்ள மற்றொரு துவஜஸ்தம்பத்தில் பொறிக்கப்பட்டிருப்பது.

On another *dhvajastambha* to the south of the Mallikārjuna temple on the Śrīśaila hill. Record dated in Śaka 1378, Dhātu in the reign of the Vijayanagara ruler Sāḷuva **Tirumaḷaraya**, son of Gōpadēva Rāju and the viceroy ruling over the Chōḷamaṇḍalam, registering the erection of the *dhvajastambha* as a gift of the prince.

The record is stated to be found in three languages Telugu, Tamil and Sanskrit incised in the Telugu, Dēvanāgari, Grantha and Tamil scripts.

சகாப்தம் 1378, தாது வருஷம் விஜயநகர அரச குடும்பத்தைச் சேர்ந்த கோபதேவ ராஜுவின் குமாரரும் சோழ மண்

டலத்தை ஆண்டு வருபவருமான சாளுவ திருமலை ராஜு என்பார் அந்தத் துவஜஸ்தம்பத்தைத் தம் தர்மமாக நிறுவிய செய்தியைத் தெரிவிப்பது.

இதன் பிரதி கிடைக்கவில்லை. சாசனப் பட்டியலில் இது தமிழ் தெலுங்கு, ஸமஸ்கிருதம் ஆகிய மூன்று மொழிகளிலும் தமிழ், தெலுங்கு, தேவநாகரி, கிரந்தம் ஆகிய எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ளதாகக் காண்கிறது.

## ஹம்பி Hampi

விஜயநகர சாம்ராஜ்யத்தின் தலைநகராக இருந்த விஜயநகரமே இது.

Capital of the famous Vijayanagara Empire.

சாசனம் — 1243] [No. 40 on p. 413

விட்டல தேவர் ஆலயத்தின் நூற்றுக்கால் மண்டபத்தின் மேல்புறம் பொறிக்கப்பட்டிருப்பது.

(No. 713 of 1922). On a stone to the west of hundred-pillar-maṇḍapa in the temple of Viṭṭhaladēva at Vijayanagara, the capital of the empire. Record dated in Śaka 1428, Dhātu in the reign of the Vijayanagara king **Krishnadeva Maharayar** registering the erection of the hundred pillar-maṇḍapa.

The text of the record is not available. But it is stated to be engraved in the Tamil and Grantha scripts mixed.

விஜயநகர அரசனான கிருஷ்ணதேவ மகாராயர் ஆட்சிக் காலத்தில் சகாப்தம் 1428, தாது வருஷம் விட்டலதேவர் ஆலயத்தில் நூற்றுக்கால் மண்டபம் எழுப்பப்பெற்ற செய்தியைத் தெரிவிப்பது.

இந்தச் சாசனத்தின் பிரதி கிடைக்கவில்லை. தமிழ் கிரந்தம் ஆகிய இரண்டும் கலந்து எழுதப்பட்டிருப்பதாகக் குறிக்கப்பட்டுள்ளது.

## வடகரைப் பெரும்பாக்கம் Vaḍakarai-Perumbākkam

இவ்வூர் வட ஆர்க்காடு ஜில்லாவில் உள்ளது. ‘காவேரிப்பாக்கம் ஜில்லாவில் உள்ளதாக’ மக்கென்ஸியின் பிரதியில் காண்கிறது.

The village, included in the Kāvēripākkam district in the days of Col. Mackenzie, is in the North Arcot district.

சாசனம் — 1244] [No. *1* on p. *61*

*ஊரில் அக்கிரகாரத்தில் உள்ள செப்பேட்டுச் சாசனம்.*

Copy of a Copper-plate grant, said to have been in the *agrahāra* of the village. Record dated in Śaka 1526, Krōdhin in the reign of the Vijayanagara king **Venkatapati [deva] Maharaya** registering the gift of the village Vaḍakaraipperumbākkam as *sarvamānya* to the Brāhmaṇas by the king.

The text which is said to be in the Grantha script and Sanskrit language is not available

*விஜயநகர மன்னனான வேங்கடபதி [தேவ] மகாராயர் ஆட்சிக் காலத்தில் சகாப்தம் 1526, குரோதி ஆண்டு கொண்ட சாசனம். வடகரைப் பெரும்பாக்கம் கிராமத்தைப் பிராமணர்களுக்கு அரசன் ஸர்வ மானியமாக அளித்த செய்தியைத் தெரிவிப்பது.*

*கிரந்த எழுத்தில் வடமொழியில் இருப்பதாகத் தெரிகிறது. பிரதி கிடைக்கவில்லை.*

**அக்கிரகாரம்-பாளையம்** Agraharam-Pāḷaiyam

*மக்கென்ஸியின் நாளையில் இவ்வூர் கோபிசெட்டிப்பாளையம் ஜில்லாவில் சேர்ந்திருந்ததாகக் காணப்படுகிறது. இப்போது கோயம்புத்தூர் ஜில்லாவில் கோபிசெட்டிப் பாளையம் தாலூகாவில் உள்ளது போலும்.*

The village, said to have been included in the Gōbiśeṭṭippāḷayam district in the days of Col. Mackenzie, is now in the taluk of the same name in the Coimbatore district.

சாசனம் — 1245] [No. 2 on p. 95

*ஊரிலே ஸ்ரீநிவாஸாசாரியார் என்பவர் வசம் இருந்ததாகக் காணும் செப்பேட்டுச் சாசனம்.*

Copy of a Copper-plate grant said to have been then in possession of Śrīnivāsāchārya of the village. Record dated in Śaka 1631, Virōdhin in the reign of **Krishna Raja Odaiyar**, evidently the Maisūr Chief, registering the creation of the village Krishṇarājapuram, amalgamating the three villages Tirukkaṇambūr, Taṭṭārappāḷaiyam, and Kaṇakkampāḷaiyam dividing the same into 70 shares or *vrittis* and granting 60 shares as gift to *Śrī Vaishṇava brāhmaṇas* and the remaining 10 shares to god Vishṇu of the place.

The record is said to be in Sanskrit and Kannaḍa languages written in the Grantha script; but its transcript is not available.

[மைசூர் மன்னனான] கிருஷ்ணராஜ உடையார் ஆட்சிக்காலத்தில் சகாப்தம் 1631, விரோதி ஆண்டு கொண்ட சாசனம். திருக்கணம்பூர், தட்டாரப் பாளையம், கணக்கப் பாளையம் ஆகிய மூன்று கிராமங்களையும் சேர்த்துக் கிருஷ்ணராஜபுரம் என்று பெயரிட்டு அதை எழுபது விருத்திகளாகப் பிரித்து அறுபது விருத்திகளை ஸ்ரீவைஷ்ணவப் பிராமணர்களுக்கும் மிகுதி உள்ள பத்து விருத்திகளை ஊரில் உள்ள விஷ்ணு ஆலயத்துக்கும் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.

இது வடமொழி, கன்னடம் ஆகிய இரு மொழிகளிலும் கிரந்த எழுத்தில் உள்ளதாகக் காணப்படுகிறது. பிரதி கிடைக்கவில்லை.

## சத்தியமங்கலம் — Satyamaṅgalam

இவ்வூர் கோயம்புத்தூர் ஜில்லாவில் கோபிசெட்டிப் பாளையம் தாலூகாவில் சேர்ந்திருக்கிறது.

The place is in the Gōbiśeṭṭipāḷaiyam taluk in the Coimbatore district.

சாசனம் — 1246] [No. 3 on p. 102

'ஊரிலே குப்பாசாரியார் மகன் ஸ்ரீநிவாஸாசாரியார் வசம் உள்ள செப்பேட்டுச் சாசனம்' என்று குறிக்கப்பட்டுள்ளது.

Copy of a Copper-plate grant then in possession of Śrīnivāsāchārya, son of Kuppāchārya of the village. Record dated in Śaka 1684, Chitrabhānu, in the reign of **Krishnaraja Odaiyar**, the Maisūr ruler, registering the sale of the village Lavagampaḷaiyam (?) to the brāhmaṇa, Kuppāchārya, for 500 pagodas.

The copy of the record is not available.

மைசூர் மன்னரான கிருஷ்ணராஜ உடையார் ஆட்சிக் காலத்தில் சகாப்தம் 1684, சித்ரபானு ஆண்டு கொண்ட சாசனம். லவகம்பாளையம் (?) என்னும் கிராமத்தைக் குப்பாசாரியார் என்னும் பிராமணனுக்கு ஐந்நூறு வராகனுக்கு விற்றுக் கொடுத்த செய்தியைத் தெரிவிப்பது.

இதன் பிரதி கிடைக்கவில்லை.

சாசனம் — 1247] [No. 1 on p. 102

'ஊரிலே மகாதேவ ஐயன் குமாரன் உமாமஹேச்வர சாஸ்திரி வசம் உள்ள செப்பேட்டுச் சாசனத்தின் பிரதி' என்று குறிக்கப்பட்டுள்ளது.

Copy of a copper-plate grant then in possession of Umāmahēśvara Śāstri, son of Mahādēva Aiyan in the village. Record dated in Śaka 1682, Vikrama in the reign of **Krishnaraja Odaiyar**, the Maisūr chief, registering the sale of the villages of Kuṭṭanāyakanpāḷaiyam and Tirumalaiśeṭ ippāḷaiyam and one share in the village of Kaliyanūr to the brāhmaṇas, Rāma Avadhāni, Umāmahēśvara Śāstri and Vēṅkaṭēśvara Avadhāni for 7920 pagodas.

The transcript of this document which is said to be in Tamil is not available.

மைசூர் அரசனான கிருஷ்ணராஜ உடையார் ஆட்சிக் காலத்தில் சகாப்தம் 1682 விக்கிரம ஆண்டு கொண்ட சாசனம். குட்டநாயக்கன் பாளையம் திருமலை செட்டிப் பாளையம் ஆகிய இரண்டு கிராமங்களையும் கலியனூரில் ஒரு பங்கையும் ராம அவதானி, உமாமஹேச்வர சாஸ்திரி, வேங்கடேசுவர அவதானி ஆகியோருக்கு 7920 வராகனுக்கு விற்றுக்கொடுத்த செய்தியைத் தெரிவிப்பது.

இதன் பிரதியும் கிடைக்கவில்லை.

சாசனம் — 1248] [No. 2 on p. 202

'அதே ஊரில் சுப்பா தீக்ஷிதர் குமாரன் யஜ்ஞ சாஸ்திரி வசம் உள்ள செப்பேட்டுச் சாசனம்' என்று குறிக்கப்பட்டுள்ளது.

Copy of a Copper-plate grant then in the possession of Yajña Śāstrin, son of Subbā Dīkshitar of the village. Record dated in Śaka 1684, Chitrabhānu in the reign of the Maisūr Chief **Krishnaraja Odaiyar** registering the sale of the village Gōpalasamudram to Subbā Śāstrin and Rāma Śāstrin for 1110 pagodas.

மைசூர் அரசரான கிருணஷ்ராஜ உடையார் ஆட்சிக் காலத்தில் சகாப்தம் 1684, சித்திரபானு ஆண்டு கொண்ட சாசனம். கோபால சமுத்திரம் என்னும் கிராமத்தைச் சுப்பா சாஸ்திரி, ராம சாஸ்திரி ஆகியோருக்கு ஆயிரத்து ஒரு நூற்றுப் பத்து வராகனுக்கு விற்றுக்கொடுத்த செய்தியைத் தெரிவிப்பது.

இதன் பிரதியும் கிடைக்கவில்லை.

## தஞ்சாவூர் Tañjāvūr

இந்தச் சாசனம் எவ்விடத்திலிருந்து கிடைத்ததென்பது குறிக்கப்படவில்லை. தஞ்சை அரசர் ஆதரவைப் பெற்ற ஒருவரிடம் இருந்ததென்று காண்பதால் இதைத் தஞ்சாவூரில் கிடைத்ததாகக் கொண்டுள்ளோம்.

It is not known wherefrom the following Copper-plate grant was secured. But as it has been noted that it was secured from a protege of the then Mahāraja of Tañjāvūr it is given under this place.

சாசனம் — 1249] [D. 2948

'தஞ்சை நகரத்தில் ஶ்ரீ ஶ்ரீ சரபோசி மகாராசா சாயெபு அவர்கள் உசிரிலெயிருக்கப்பட்ட அருணசல விருபாட்சி தெவரிடத்திலிருக்கிற தாமிர சாசனம்' என்று குறிக்கப்பட்டிருக்கிறது.

Copy of a Copper-plate then in possession of Arunāchala Virūpākshi Dēvar, the bosom protege of Śrī Sarabhōji Mahārāja Sāheb of Tañjai, and probably a Śaiva religious teacher. Record dated in Kali 4613, Śaka 1433, Bhava (or it may even be Vibhava), Tai 13, registering the gift of land and other privileges by Nāgaiya Maḷavarāya Nayinār, son of Kaṭṭiyappa Nayanār and the chief of Kuṉṉattūr nāḍu and Periya Nāyaka Nayinar son of Ponnaḷanda Kaḍandaiyār of the Praḷayankaṭṭa Kaḍandaiyār *gōtra* of Peṉṉāgaḍam to Tiśaimukhat-tēvar, their religious (*Gurukkaḷ-ayyar*)teacher from olden days, to supplement the properties and honours bestowed on the teacher by their fore-fathers.

The document gives details of the lands in several villages given to the teacher and also how those lands were obtained by them. In addition to the lands bestowed, servants and slaves were also given to him for doing regular service to the preceptor and in his *maṭha*. The jurisdiction within which the said teacher, Tiśaimukattēvar is to exercise his prerogatives is also defined therein. Similar teachers of Kumbhakōṇam, Pēraḷam, Tiruveṇkāḍu and Dārāśuram *maṭhas* are also mentioned.

It is stated at the end, that during the days of Achyutarāja evidently the Vijayanagara ruler of the same name, Kumbakōṇattar (*i.e.*,those of Kumbakōṇam *maṭha*) and Pachchai-k-Kandaiyār, another *maṭha*, fought among themselves over the areas of jurisdiction of their respective *maṭhas*. It appears that when the dispute came for enquiry before the Court of Justice and representatives of the palace, an old temple *archaka* of 95 years of age was also enquired. And finally the area was settled.

There is a Pachchai-k-Kandaiyar-*maṭha* at Chidambaram which appears to be a Vira Śaiva *maṭha*. All the *maṭhas* referred to in this grant are evidently *Viraśaiva* ones.

ஸ்வஸ்தி [॥*] ஸ்ரீ உ[ங*] ராசாதி ராச ராச பரமெஸ்பர ராச மா[ர்*]த்தாண்ட ராச கெம்பீர ஸஉஸூ மண்டலாதிபர் மநெ்ருக ரன் கெசபதி அசுவபதி நரபதியாகிய பிரபடத் தெவ மகாராயர் மல்லிகார்சுன தெவ மகாராயர் சதாசிவ தெவ மகாராசர் அம்புச தெவ மகாராயர் நரசிங்க தெவ மகாராயர் விருப்பாட்சி தெவ மகாராயர் ராட்சியம் பண்ணி யருளா நின்ற கல்லியத்தம் சதுசுாயிங சாலிவாகன சகார்த்தம் ஞசாங்கயிங யிதற்கு மெல்ச் செல்லா நின்ற இபவ ஸு[1] தை மீ யிங உ ராச ராச வள நாட்டு ராசெந்திர சொழ வளநாட்டுள் மிழலை நாட்டுள்ச் செர்ந்த சொழவளமாகிய தலத்துள் வன்னயர் குல கிரில தரில நாட்டுக் க(த)திபதிபராகிய குண்ணத்தூர்க் கட்டியப்ப நாயினுர் குமாரர் நாகய மளவாரய நயினுரவர்களும் பென்னுடகம் பிரளையங் காத்த கடந்தையார் கொத்திரத்தில் பொன்னளந்த கடந்தை குமாரன் பெரியனுயக்க நயினுரவர்களும் நம்முட குண்ணத்தூர் காணிக்கும் பென்னுடக காணிக்கும் பூறுவாசார்ய்யராகிய குருக் களைய்யர் [திசை*]சமுக தெவரவர்களுக்கு கடந்தையார் கிராமம் நாகையமழவராய நயினு ரவர்க்கு சறுவ மானியமாக மாக்குடியில் நயினுரவர்களுங் கடந்தையாரவர்களுங் குருக்களைய்யரவர்களுக்கு தென் சிரகில் குளத்துக்கு மெற்கு மடத்துக்கு மனைப்பிறமானம் யிருபத்து நாலடிக் கொலால் கிழக்கு மெற்கு யிருபது கொலும் தெற்கு வடக்கு இருபது கொலும் மடத்துக்கு மனையாகச் செத்து மடமுங் கட்டி வைத்து முன்னுள்ளவர்கள் [இது]க்குச் சவாரி யுங் கட்டளையிட்டு மானியங்களுக்கு சாசனமு மெழுதிக் கொடுத்து நடக்கிறபடியினுலெ ஞமும் யியன்றமாத்தரங் குருக் களைய்யரவர்களுக்கும் பனியம்[2] நயினுரவர்கள் சறுவ மானியங் கிருமம் மாக்குடி காரச்செரி கடம்பங்குடி ங பண்ணைக் கிருமம் மாற...பாடி[3] நெடுங்கொல்லை புங்தொட்டம் கீழ்மாராயம் மெல் மாராயம் நரிக்குடி ராசாக்கள்நல்லூர் யிதுவுஞ் சொழபுரம்

---

1. ஏட்டிலே இது அடிக்கப்பட்டுள்ளதோ என்று சந்தேகிக்கும்படி உள்ளது.

2. 'மாணியம்' எனக் கொள்க.

3. 'மாறம்பாடி' என்று வாசிக்க.

நஞ்சை புஞ்சை ஐவேலி நிலமுங் குடியானவர் நல்லபெருமாள் பிள்ளை மாறு பிள்ளை பெத்தபெருமாள் பிள்ளை சிதம்பர முத்திரியன் ரெகுநாத முத்திரையன் யிவர்களஞ்சு பெரும் அறமனை விஸட்டுர்ம யிறை யிருக்கமாட்டாதபடியினாலெ வடபாதி தென்பாதியாகப் பிரித்து நாகைய மளவராய நயினாரவர்களுக்கு தென்பாதி நஞ்சை புஞ்சை ஐவெலி நிலமும் விலை சகிமை பண்ணிச் சாதனமெழுதிக் கொடு[த்து] னுங்கள[னை*]வரும் பத்தின ஷ திருவையாற்றுச் சக்கரம் சா௨ரு ௨ ம் னுங்கள் பற்றிக் கொண்டபடியினாலெ புத்திர புத்திர பாரம்பரையும் யிந்தக் கிறுமம் தென்பாதி ஐவெலி நிலமும் நயினாரவர்களெ ஆண்டனுபவித்துக்கொள்ளக் கடவார்களாகவும். இப்படிச் சம்மதித்து நயினாரவர்களுக்கு உள்ளூர்க் குடியானவர் கெனொம் நயினார் அவர்களுக்கு சறுவ மானிய கிறுமம் ௩ பண்ணைக்கிறுமம் எழு கொலக் காணி சொழபுரந் தென்பாதி ஆக பதினொரு கிறுமத்திலெயுங் குருக்களய்யரவர்களுக்கு மானியங் கட்டளையிட்டபடி மாக்குடியில் நஞ்சையிற் குழி ௱ புஞ்சையிற் குழி ௱ரும் காரச் செரியில் நஞ்சையிற் குழி ௱ கடம்பக் குடியிற் புஞ்சையிற் குழி ௱ சொழபுரத்தில் நஞ்சையிற் குழி...மாரம்பாடி நஞ்சையிற் குழி ௱ரும் நெடுங்கொலையில் நஞ்சையிற் குழி ௱ பூந்தோட்டம் நஞ்சையிற் குழி ௱ மெல் மாராயம் நஞ்சையிற் குழி ௱ கீழ் மாராயம் நஞ்சையிற் குழி ௱ நரிக்குடியில் நஞ்சையிற் குழி ௱ ராசாக்கள் நல்லூரில் நஞ்சையில் குழி ௱ நயினாரவர்கள் உம்பளக் கிறுமம் திரிபுவனத்தில் பெரிய எ[ரி]யில் வெலி நிலக் குருக்களைய்யருக்கு மானியம் கட்டளையிட்டொம். யிதுவும் திறுபுவனந் தானம்மேயிதாவல் ரெண்டுந் சாதனமாக எழுதிக் கொடுத்து திருவையாற்றுச் சக்கரம் சாரும் ௨-ம் னுங்களைவரும் பத்திக் கொண்டபடியினாலெ நாகய மளவராய நயினார் அவர்கள் புத்திர புத்திர பாரம்பரையுஞ் சந்திராதித்தாளுள்ளளவும் ஆண்டனுபவித்துக் கொள்ளக் கடவராகவும். யிப்படிச் சம்மதித்து னுங்களைவரும் சாசனமெழுதிக் கொடுத்தொம். பொன்னளந்த கடந்தையார் குமார[ர்*] பெரிய னுயக கடந்தையாரவர்கள் குருக்களய்யரவர்களுக்கு மானியங் கட்டளை யிட்டது. வடவளந்தைக் கண்டத்திலிருக்குஞ் சாத்துடை நல்ல த[ம்பி]யா பிள்ளை சிவராம பிள்ளை னுங்களிருவரும் எங்கள் கிராமம் வடவிளந்தைக் கண்டம் னுங்க ளிரை யிறுத்து நறுவாகம் பண்ணப் படாதபடியினாலெ நஞ்சை புஞ்சையு முள்ள எழெ முக்கால் வெலி நிலமும் பெரிய நாய...கடந்தையார் கொள்காணியாகக் கொண்ட திருவையாற்

றுச் சக்கரம் ௬ நூறும். யிந்தப் பொன் நூறும்-[ம்] னுங்களிரு வரும் பத்திக்கொண்டபடியினாலெ பெரியனாயக கடந்தையார வர்களெ யிந்தக் கிராமஞ் சந்திராதித்தாளுள்ளளவும் புத்திர புத்திர பாரம்பரையும் ஆண்டனுபவித்துக்கொள்ளக் கடவாரா கவும். யிப்படிச் சம்மதித்து னுங்களிருவருஞ் சாசன மெழுதிக் கொடுத்தபடி கடந்தையாரவர்களுக்கு நயினா தம்பியா பிள்ளை சிவராம் பிள்ளைஓம். பெரிய நா[ய]க கடந்தையாரவர்கள் பண்ணைக் கிருமம் வடவிளந்தைக் கண்டம் தென்விளந்தைக் கண்டம் குமரங்...டிபந்தப் பிராய[1] பாதிரிக்குடி உத்தமகாணி[2] கீழ் ஆ...திக்குறிச்சி ஆனூர் ஆறுமெடு[3]யிந்த ஒன்பது கிருமத்தி லெயுங் குருக்களையரவர்களுக்கு மானியங் கட்டளையிட்டபடி: வடவிளந்தை கண்டத்தில் நஞ்சை கொன்னையடிக்கு கிழக்கு நஞ்சையில் குழி ௩௱ தென்விளந்தைக் கண்டத்தில் நஞ்சையிற் குழி ௱ குமரங்....டிபந்தப் பிராய பொதுவிடை ஓடைமெல் தென் பாதி நஞ்சையில் குழி ௨௱ பாதிரிக் குடியில் நஞ்சையில் குழி ௱ உத்தமதானி நஞ்சையில் குழி ௱ கீழ் அ...திக்குறிச்சி பிஞ்சையில் குழி ௱ ஆனூர் நஞ்சையில் குழி ௭௰௫ ஆனைமேடு புஞ்சையில் குழி ௱ யிந்த மானியங்களுக்கு நயினாரவர்களுங் கடந்தையாரவர் களும் யிந்த கிருமத்து மானியங்களுக்கெல்லாம் லிங்கமுத்திரைக் கல்லும் நாட்டிக் கொடுத்துக் கட்டளை யிட்டொரு. சொழுவ தானம் நயினாரவர்களுது மெய் காவல்க் கணக்குக் கடந்தையார வர்களுது ஆள் வைத்துப் பராமரித்துக்கொள்ளுகிறது. பெரிய நாயக கடந்தையார் குமாரத் திருகைய்....மழவர...ய நயினார் மரும களுக்கு கடந்தையார் மஞ்சகாணிக் கொடுத்து வடவிளந்தைக் கண்[ட]ங்கொள்காணி நி[லம்]கொன்னையடி யென்னுடையமஞ் சக் காணி நெத்தி முத...ப நாயகம் என்னுடைய பிரந்தகத்துக் கும் புக்ககத்துக்கும் முறுவாசாரியாராகிய[4] குருக்களையரவர்க ளுக்கு என்னுடையதாவும் குழி ௱ நரசிங்க மழவராய சு...யினார் குமாரத்தி பெரிய தங்கச்சியம்மாள் பெரிநாயக கடந்தையார் மரு மகள் யென்னுடைய பாட்டனார் நாகைய மளவராய நயினாரவர் கள் மானியமான......க் குடியில் என்னுடைய பிதா நரசிங்க

---

1. 'குமரங்குடி பந்தப்பிராயம்' என்று இருக்க வேண்டும்.
2. 'உத்தமதானி' என்று வாசிக்க.
3. இது 'ஆனைமேடு' எனப் பின்னால் காணப்படுகிறது.
4. 'பூர்வாசாரியராகிய' என்று வாசிக்க.

மளவராய நயினாரவர்கள் மஞ்சக்காணி யெனக்குக் கொடுத்துது ஊருக்கு மெற்குச் செரிக்குத் தெற்கு மு...கால் நிலம் யிதில் குருக்களையயரவர்களுக்கு மானியம் குழி ௱ கொடுத்தெதன். புத்திர புத்திர பாரம்பரையும் அனுபவித்துக் கொள்ளக் கடவார்களாகவும். சொழ வாஞ்[ச]மை நாட்டவர்கள் குருக்களையயர் மடத்துக்கு மானியங் கட்டளையிட்ட தருமம் உள்ளூர் நாட்டவர் தற்மம் நஞ்சையில் குழி ௱ குரு...ஊர் நாட்டவர் தர்மம் நஞ்சையில் குழி ௱ம கீழ் ஆனைமெடு நாட்டவர் தர்மம் நஞ்சையில் குழி ௫ம மண்மேடு பனைங்குட்டம் நாட்டவர் தர்மம் நஞ்சையில் குழி ௱ம பீராககன் நாட்டவர்[1] தர்மம் நஞ்சையில் குழி ௱ [ப]ரவனூர் கூத்தனூர் நாட்டவர் தர்மம் நஞ்சையில் குழி ௱ மாவுத்தயிருப்பு நாட்டவர் தர்மம் நஞ்சையில் குழி ௱ வாண்டா யிருப்பு நாட்டவர் தர்மம் நஞ்சையில் குழி ௱ அம்மையப்பன் நாட்டவர் தர்மம் நஞ்சையில் குழி ௱ மாறுசெரி நாட்டவர் தர்மம் நஞ்சையில் குழி ௱ம கிழநரிக்குடி நாட்டவர் தர்மம் நஞ்சையில் குழி ௱ புத்து நாட்டவர் தர்மம்....கொயிலாச்செரி கண்ணங்குடையார் தற்மம் [ந]ஞ்சையில் குழி ௱௫ம களம்பரம் நாட்டவர் தற்மம் நஞ்சையில் குழி ௱ மீழலை நாட்டவர் தற்மம் நஞ்சையில் குழி ௱ சிறுகுடி நாட்டவர் தற்மம் நஞ்சையில் குழி ௱ மட்டியூர் நாட்டவர் தற்மம் நஞ்சையில் குழி ௱ உன்ருத்தம நாட்டவர்[2] தற்மம் நஞ்சையில் குழி ௱ம சீபுரந்தானி நாட்டவர் தற்மம் நஞ்சையில் குழி ௱ம நயினாரவர்கள் தற்மம் ஏரியில் காணி ௰ கழுக்காணி முட்டம் நாட்டவரது தற்மம் நஞ்சையில் குழி ௱ யிருப்புணியாம நாட்டவரது தற்மம் பிஞ்சையில் குழி எம மெலத்தியூர் நாட்டவர் தற்மம் நஞ்சையில் குழி ௱ வாழைக் குறிச்சி நாட்டவர் தற்மம் புஞ்சையில் குழி ௫ம அமக்காவல் நாட்டவர் தற்மம் பிஞ்சையில் குழி ௫ம காவற்கூடம் நாட்டவர் தற்மம் பிஞ்சையில் குழி ௱ ஆளங்குரிச்சி நாட்டவர் தற்மம் நஞ்சையில் குழி ௱ கடிச்சம்பாடி நாட்டவர்கள் தற்மம் நஞ்சையில் குழி ௱ நீரெத்த நல்லூர் நாட்டவர் தற்மம் நஞ்சையில் குழி ௱ தெவனூசெரி நாட்டவர் தற்மம் பிஞ்சையில் குழி ௱ ஆதனூர் நாட்டவர்[3] தற்மம் நஞ்சையில் குழி ௱ திருப்பிரம்பியம் நாட்டவர் தற்மம் நஞ்சையில் குழி ௱ திள்ளப்புலியூர் நாட்டவர் தற்மம் நஞ்சையில்

---

1. 'ராசாக்கள் நல்லூர் நாட்டவர்' என்று இருத்தல் வேண்டும்.
2. 'ஊற்றத்தூர் நாட்டவர்' என்று இருத்தல் வேண்டும்.
3. 'ஆதனூர் நாட்டவர்' என வாசிக்க.

குழி ௱ செயங்க நல்லூர் மகா செனங்கள் தற்மம் நஞ்சையில் குழி ௱ பாலாக்குடி நாட்டவர் தர்மம் நஞ்சையில் குழி ௱ நாக யமழவராய நயினரவர்களும் பெரிய நயக் கடந்தையாரவர் களும் சீமை நாட்டாரவர்களும் குருக்களெய்யரவர்கள் மடத் துக்கு பண்ணின தற்மம்: கலியாணத்துக்கு ஒரு பணம் சிவ ராத்திரிக்கு ஒரு பணம். யிந்தப்படிக்கு மானியங்களும் வர்த்தனை யுங் கட்டளையிட்டொம். யிதுக்கு யாதாமொருவன் அகிதம் பண்ணினவன் கெங்கைக் கரையிலெ மாதா பிதாவையுங் காராம் பசுவையுங் கொன்ற தொஷத்திலெ பொகக்கடவராகவும். யிதை பரிபாலனம் பண்ணினவன் புத்திர புத்திர பாரம்பரையுஞ் சுகஞ் சிவவதியாயி இருக்கக்கடவாராகவும். சொழவரபாக்கியம் அஞ் ஞாத்திப்பலருங்கூடி மடத்துக்கு கட்டளையிட்ட தற்மங் தசிக்கட் டுக்கு[1] வருஷ வற்தனை கால் பணம் நம்முட சொழவர பாக்கியம். யெந்த னுட்டிலிருந்தாலுங் கொடுத்து வரவும் யிதுக்கு இயாதா மொருவன் அகிதம் பண்ணினவன் மாதாபிதாவையுங் காராம் பசுவையுங் கொன்ற தொஷத்திலெ பொகக்கடவராகவும். யிதைப் பரிபாலனம் பண்ணினவர்கள் சுகஞ்சிவ[வ]தியா யிருக் கக் கடவாராகவும். ஆயத்துறை மகிமைப் பொதிக்கு அரைக்காசு சீமைக்குச் சிட்டியும் மடத்துக்கு வர்தகா[ள]னைவரும் பண்ணின தர்மம். அட்டவணை னெட்டம் மாதங் கால்பணம் மடத்துக்குக் கொடுத்து வரவும். நரசிங்க மழவராய நயினர் குருக்களெய்யரவர் கள் மடத்துக்கு பணிவிடைக்குக் கட்டளை யிட்டது. அரமனை ஊழியம் பெரியான மனுஷன் குருவன் னகி பிரமி மூத்தி ஆக சனம் ரு. பண்ணைச் சாம்பான் யிருவான் வீரன் சனம் ௨ ஆக சனம் பத்தும் னுவனெளருங்[2] கொடுத்து புத்திர புத்திர பாரம் பரையும் மடத்துக்கு அடுமையாகக் கட்டளையிட்டொம். பெரிய நாயகக் கடந்தையாரவர்கள் குருக்களெய்யரவர்கள் மடத்துக்குக் கட்டளையிட்டுது. தாங்களாய மனை ஊழியம் சிலம்பன் முருகன் தாண்டவன் விரிதிருவான் குப்பச்சி ஆக சனம் ரு பண்ணைச் சாம்பான் வீரன் இருவான் சனம் ௨ ஆக சனம் ௭-ம் னுவனை எருங் கொடுத்து புத்திர புத்திர பாரம்பரையும் மடத்துக்கு அடுமையாக கட்டளையிட்டொம். நாகய மழவராய நயினரவர் களும் பெரியனயக் கடந்தையாரவர்களுஞ் சீமை நாட்டாரவர் களுங் குருக்களெய்யர் மடத்துக்கு தர்ம சாஸ்சனஞ் சாம்பராணி

1. 'தலைக்கட்டுக்கு' என்று கொள்க.

2. 'நாம் அனைவோரும்' என்றுவாசிக்க.

